# மருதத்திணைப் பாடல்கள் காட்டும் சங்கச் சமூகம்

முனைவர் பட்டப்பேற்றிற்காகச் (பிஎச்.டி.) சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**சா. பரசுராமன்**

நெறியாளர்

**பேராசிரியர் அ. பாலு**





**தமிழ் மொழித்துறை**

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை – 600 005


ஜீன் – 2019

**பேராசிரியர் அ. பாலு**

நெறியாளர்

தமிழ் மொழித்துறை

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை – 600 005

# நெறியாளர் சான்றிதழ்

“மருதத்திணைப் பாடல்கள் காட்டும் சங்கச் சமூகம்” என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக 2014 முதல் 2019 வரை எனது மேற்பார்வையில் ஆய்வாளர் சா. பரசுராமன் அவர்களால் ஆய்வு நிகழ்த்தி வழங்கப்பட்டதாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் வழங்கப்பெறவில்லை என்றும் இது அவர்தம் சொந்த முயற்சியால் உருவானது என்றும் சான்றளிக்கின்றேன்.

**நெறியாளர்**

**சா. பரசுராமன்**

முனைவர் பட்ட ஆய்வாளர்

தமிழ் மொழித்துறை

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை – 600 005

## ஆய்வாளர் உறுதிமொழி

"மருதத் திணைப் பாடல்கள் காட்டும் சங்கச் சமூகம்" என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டப்பேற்றிற்காக 2014 முதல் 2019 வரை நிகழ்த்தி வழங்கப்பட்டதாகும். இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன்பு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கின்றேன்.

**ஆய்வாளர்**

முதன்மை ஆதாரங்கள்

1. பரிமணம், அ.மா. (ப.ஆ) பாலசுப்பிரமணியம், கு.வே. - **எட்டுத்தொகை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு – 2004

2. " - **பத்துப்பாட்டு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு – 2004

துணைமை ஆதாரங்கள்

3. அருணாசலம்பிள்ளை, மு. - **தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம்**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை
முதற்பதிப்பு – 1944

4. அருள் பத்மராசன் - **தமிழ்ப் பண்பாடு**
முரண்களரி படைப்பகம்
சென்னை – 68
முதற்பதிப்பு– 2010

5. அழகம்மை - **சமூக நோக்கில் சங்க மகளிர்**
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை – 600 108
முதற்பதிப்பு - 1999

6. அறவாணன், க.ப. - **தமிழ்ச் சமுதாய வரலாறு**
தமிழ்க் கோட்டம்
புதுச்சேரி
முதற்பதிப்பு – 1994

7. **அன்னிதாமசு** - **சமூகத்திலும் இலக்கியத்திலும் ஊனமுற்றோர்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு – 2004

8. **ஏகாம்பரம், ஆ.** - **தமிழரின் விருந்தோம்பல் அன்றும் இன்றும்,**
இலக்கியா பதிப்பகம்
எடையார்பாளையம்
முதற்பதிப்பு – 2003

9. **கணபதி இளங்கோ** - **பண்டைத்தமிழர்வாழ்வியல்**
பாவை பப்ளிகேஷன்ஸ்
சென்னை
முதற்பதிப்பு - 2014

10. **கலியபெருமாள், பி.என்.** - **வேளாண்மைப் பொருளாதாரம் I**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு - 1975

11. **கலைமகள், சி.** – **இலக்கியக் கட்டுரைகள்**
பக்கரி அம்மாள் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 1993

12. **கவிதா, மு.** – **பழந்தமிழர் பண்பாட்டு மீள் வாசிப்பு குறுந்தொகையை முன் வைத்து**
அரிமா பதிப்பகம்
கொரடாச்சேரி
இரண்டாம்பதிப்பு–2008

13. **கவிதாதேவி, ஆ.** - **நற்றிணை காட்டும் சூழல்கள்**
இராமையா பதிப்பகம்
சென்னை – 14
முதற்பதிப்பு -2013

14. **காந்தி, க.** - **தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு – 1980

15. **கார்த்திகேசு சிவத்தம்பி** - **தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு – 1994

16. " - **பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு – 2010

17. " - **சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு - 2009

18. **குளோறியா சுந்தரமதி** - **சங்க இலக்கியம் மருதம்**
கேரளப் பல்கலைக்கழகம்
திருவனந்தபுரம்
முதற்பதிப்பு – 1973

**19. கைலாசபதி, க. - பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்**

குமரன் புத்தக இல்லம்

சென்னை

முதற்பதிப்பு - 1999

**20. சஞ்சீவி, ந. - உணர்வின் எல்லை**

பாரி நிலையம்

சென்னை

முதற்பதிப்பு – 1959

**21. " - சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை**

காவ்யா பதிப்பகம்

சென்னை

முதற்பதிப்பு - 2010

**22. சக்திவேல், சு. - நாட்டுப்புற இயல் ஆய்வு**

மணிவாசகர் பதிப்பகம்

சென்னை

முதற்பதிப்பு - 1983

**23. சக்திவேல். சு. – தமிழர் வாழ்வியல் நம்பிக்கை**

மணிவாசகர் பதிப்பகம்

சென்னை

**24. சசிவல்லி, வி.சி. - தமிழர் திருமணம்**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை

முதற்பதிப்பு– 1985

**25. சண்முகம்பிள்ளை, மு. - தொல்காப்பியம் பொருளதிகாரம்**

இளம்பூரணம்

முல்லை நிலையம்

சென்னை

1998

26. **சதாசிவம்.சு.** – **பழந் தமிழர் வாழ்வும்வரலாறும்**
செம்மூதாய்பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 2009

27. **சரளா இராசகோபாலன்** – **சங்கஇலக்கியத்தில்தோழி**
ஸ்ரீகோமதிஅச்சகம்
சென்னை
முதற்பதிப்பு – 1986

28. **சிங்காரவேலு முதலியார்,. ஆ.** – **அபிதான சிந்தாமணி**
சீதை பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு - 2004

29. **சீனிச்சாமி.துரை** – **திணைக்கோட்பாடு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு – 1994

30. **செல்வராசு, அ.** – **இலக்கிய இலக்கணப் புரிதல்**
பல்லவி பதிப்பகம்
திருச்சி
2008

31. **தட்சிணாமூர்த்தி, அ.** – **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
யாழ்வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு – 1994

**32. தட்சிணாமூர்த்தி, அ.** – **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**

நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்

சென்னை

முதற்பதிப்பு - 2016

**33. தமிழண்ணல்** - **சங்க இலக்கிய ஒப்பீடு**

மீனாட்சி புத்தக நிலையம்

மதுரை

முதற்பதிப்பு – 2005

**34. தில்லைநாதன், சி** - **பண்பாட்டுச் சிந்தனைகள்**

குமரன் புத்தக இல்லம்

சென்னை

2000

**35. தேவநேயப்பாவாணர், ஞா.** - **தமிழர் வரலாறு**

தமிழ் மண் பதிப்பகம்

சென்னை

முதற்பதிப்பு – 1972

36. **நெடுஞ்செழியன் இரா.சக்குபாய் (ப.ஆ.)** - **சங்க இலக்கியக் கோட்பாடுகளும் சமய வடிவங்களும்**

மனிதம் பதிப்பகம்

திருச்சி,

2007

37. **பக்தவத்சல பாரதி** - **பண்பாட்டு மானிடவியல்**

அடையாளம் பதிப்பகம்

சென்னை

2011

38. **பகவதி, கு.** - **தமிழர்ஆடைகள்**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை

முதற்பதிப்பு - 1980

39. **பரமசிவானந்தம், அ.மு. - சமுதாயமும் பண்பாடும்**

தமிழ்க்கலைப் பதிப்பகம்

சென்னை

1962

40. **பாலசுப்பிரமணியன், சி. - இலக்கியக் காட்சிகள்**

நறுமலர்ப் பதிப்பகம்

சென்னை

முதற்பதிப்பு – 1980

41. **பாரதியார் - பாரதியார் கவிதைகள்**

வானதி பதிப்பகம்

சென்னை

பதினான்காம் பதிப்பு – 2007

42. **பாலசுப்பிரமணியன், மு.பி. – இலக்கிய முன்றில்**

பாரி நிலையம்

சென்னை

முதற்பதிப்பு – 2011

43. **பாலசுப்பிரமணியன், கு.வெ. - சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்**

தமிழ்ப்பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

முதற்பதிப்பு – 1994

44. **பாலசுப்பிரமணியன், கு.வெ. – சங்க இலக்கியக் கொள்கை**

மீனாட்சி புத்தக நிலையம்

மதுரை

முதற்பதிப்பு - 2008

45. **பெருமாள்சாமி, வெ. – சங்ககாலத் தமிழகத்தின் சமூக நிலை மார்க்சிய நோக்கில் சங்க இலக்கிய ஆய்வு**

பாரதி புத்தகாலயம்

சென்னை

முதற்பதிப்பு – 2007

46. **பொற்கோ** – **பண்பாட்டுக் கருத்தோட்டம்**

பூம்பொழில் வெளியீடு

சென்னை

முதற்பதிப்பு - 2001

47. **மறைமலையடிகள்** – **வேளாளர் நாகரிகம்**

கழக வெளியீடு

சென்னை

முதற்பதிப்பு – 1923

48. **மாணிக்கம், வ.சுப.** – **தமிழ்க்காதல்**

பாரி நிலையம்

சென்னை

முதற்பதிப்பு – 1980

49. **மாதையன், பெ.** – **அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்**

பாவை பிரிண்டர்ஸ்

சென்னை

முதற்பதிப்பு – 2009

50. " - **சங்க இலக்கியத்தில் குடும்பம்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்

சென்னை

முதற்பதிப்பு – 2010

51. " – **சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்

சென்னை

முதற்பதிப்பு – 2004

52. " – **சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்**

பாவை பப்ளிகேஷன்ஸ்

சென்னை

முதற்பதிப்பு – 2004

53. **மீனாட்சிசுந்தரனார், தெ.பொ. – தமிழும் பிற பண்பாடும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
பதிப்பு – 1998

54. **இராகவன் - வேளாளர் வரலாறு**
அமிழ்தம் பதிப்பகம்
சென்னை – 17
முதற்பதிப்பு– 2006

55. **இராமசுப்பிரமணியம், வ.த. (உ.ஆ) - பன்னிரு திருமுறைகள் 1, 2, 3 ஆம் திருமுறை தேவாரம்**
தமிழ் நிலையம்
சென்னை,
1995

56. **ராஜ்கௌதமன் – கலித்தொகை- பரிபாடல் ஒரு விளிம்பு நிலை நோக்கு**
விடியல் பதிப்பகம்
கோவை
முதற்பதிப்பு – 2011

57. **வானமாமலை, நா. - தமிழர் பண்பாடும் தத்துவமும்**
அலைகள் வெளியீட்டகம்
சென்னை
முதற்பதிப்பு – 2008

58. **வித்தியானந்தன், சு. - தமிழர் சால்பு**
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
முதற்பதிப்பு – 1954

**59. வெள்ளைவாரணன்.க** - **சங்ககாலத் தமிழ் மக்கள்**

நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி

சென்னை

முதற்பதிப்பு – 1948

**60. ஷாஜகான்கனி.வெ.மு.** – **திணை வரலாறு**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை

முதற்பதிப்பு– 2012

**61. ஜெகதீசன், ஆ.** - **இலக்கியத்தில் மனித உரிமை கோட்பாடுகள்**

தாமரை பப்ளிகேஷன்ஸ்

2008

**ஆய்வேடு**

**விஜயலஷ்மி, ம.** - **சங்க இலக்கியத்தில் மருதநில மகளிர்**

எத்திராஜ் கல்லூரி

சென்னை

2013

**நிகண்டு**

**இலம்போதரன்சு.(ப.ஆ.)** - **திவாகர நிகண்டு**

முல்லை நிலையம்

சென்னை

முதற்பதிப்பு - 2005

**அகராதிகள்**

**---** - **மதுரைத் தமிழ்ப் பேரகராதி முதல்பாகம்**

சந்தியா பதிப்பகம்

சென்னை

2001

--- - **Tamil Lexicon**
University of Madras
Chennai
First Published 1924 – 1936

--- Oxford English Dictionary
Oxford University, England
First Edition – 1884 – 1928

--- - Cambridge Dictionary
Cambridge University, England
First Published 2003

**களஞ்சியங்கள்**

1. --- - **கலைக்களஞ்சியம் (தொகுதி - 1)**
தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னை

2. --- - **வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி -8)**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1991

**முன்னுரை**

சங்க இலக்கியம் பண்டைய மக்களின் வாழ்வியலைப் பிரதிபலிக்கக் கூடியதாகும். பண்டைத் தமிழர் இதனை அகம், புறம் என்று இரண்டாகப் பிரித்து வைத்தனர். அகமாவது பிறருக்கு இத்தன்மையது என்று சொல்ல முடியாதது. புறம் என்பது வெளிப்படையாகச் சொல்லக் கூடியது. சங்கப் பாடல்கள் அனைத்தும் முதல், கரு, உரிப்பொருளை அடிப்படையாக வைத்துத் திணைப் பாடல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பியர் உரிப்பொருள் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு,

**கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**

**முற்படக் கிளந்த எழுதிணை என்ப. (தொல். பொருள். நூ. 1)**

என்று அகத்திணையை ஏழாகக் குறிப்பிடுகிறார்.

ஏழு திணைகளில் கைக்கிளை, பெருந்திணைகளுக்கு நிலம் இல்லை. ஆனால் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் போன்ற திணைகளுக்கு நிலம் வரையறுத்துக் கூறப்பட்டுள்ளன. பாலைத் திணைக்குத் தனியாக நிலம் இல்லை. குறிஞ்சியும் முல்லையும் தன்னியல்பு திரியும்போது உருவாகும் நிலமே பாலையாகும். திணை அடிப்படையில் பார்க்கும்போது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை இவை அன்பின் ஐந்திணையாகும்.

நானிலங்களில் ஒன்றாகக் கருதப்படும் வயலும் வயல் சார்ந்த பகுதியான மருதநிலம் நீர்வளம் நிறைந்தது, உணவு குறைபாடு இல்லாத நிலம். எனவே ஐவகை நிலங்களிலும் மருதமே உயர்வாகக் கருதப்படுகிறது.

சங்க கால மக்கள் தத்தமக்குரிய நிலப்பகுதியில் வாழ்ந்த பொழுது அங்கு இருந்த இயற்கைச் சூழலைப் பயன்படுத்திக் கொண்டனர். தாங்கள் வாழ்ந்த நிலத்தின் இயல்பையும் அதில் விளையும் பொருளையும் கொண்டு தங்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்துவதில் வேறுபடுகின்றனர். தமிழ்ச் சமூக அமைப்பு ஆரம்ப காலத்தில் இயற்கையினையொட்டியதாக இருந்தது நாளடைவில் வேலைப் பிரிவினைக் காரணமாகத் தொழில்வழிச் சமுதாயமாக மாறியது.

ஐவகைத் திணைப் பிரிவின் அடிப்படையில் வாழ்ந்த பழந்தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மைக்கு ஏற்ப அங்குக் கிடைக்கும் அல்லது விளையும்

பொருள்களுக்கு ஏற்பப் பல்வேறு தொழில்களைச் செய்து தங்களின் தேவையை நிறைவேற்றிக் கொண்டனர். மருத நிலத்தில் வேளாண்மை செய்யக் கற்றுக்கொண்டு தனக்குத் தேவையானதைத் தானே விளைவித்துக் கொண்டான்.

நாடோடியாகத் திரியாமல் ஓர் இடத்தில் வாழ்வதற்கு அடித்தளமாக இருந்ததும் அரசு உருவாக்கத்திற்கும் காரணமாகவும் இருந்த மருதத் திணைப் பாடல்களை ஆய்வதாக இந்த ஆய்வு அமைகின்றது.

**ஆய்வுத்தலைப்பு**

**“மருதத்திணைப் பாடல்கள் காட்டும் சங்கச்சமூகம்”** என்பது ஆய்வுத்தலைப்பு ஆகும்.

**ஆய்வின் நோக்கம்**

மருதத்திணை மக்களின் சமூகக் கட்டமைப்பையும் பொருளாதார நிலையில் எவ்வாறு உயர்ந்து இருந்தனர் என்பதையும் நம்பிக்கையும் பண்பாடும் எவ்வாறு பின்பற்றப்பட்டன என்பதையும் அவர்கள் பயன்படுத்திய வேளாண்முறைகளையும் ஆய்வது இந்த ஆய்வின் நோக்கமாக அமைகிறது.

**ஆய்வின் எல்லை**

சங்க இலக்கியம் என்பது எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆகும். இதனைப் பதினெண்மேற்கணக்கு நூல்கள் என்று அழைப்பர். எட்டுத் தொகையில் அகத்திணைப் பாடல்களான குறுந்தொகையில் நாற்பத்தெட்டு பாடல்களும் நற்றிணையில் முப்பத்திரண்டு பாடல்களும் அகநானூற்றில் நாற்பது பாடல்களும் ஐங்குறுநூற்றில் நூறு பாடல்களும் கலித்தொகையில் முப்பத்தைந்து பாடல்களும் பரிபாடலில் வையைப் பற்றிய எட்டுப் பாடல்களும் புறத்திரட்டில் இடம்பெறும் இரு பாடல்களும் ஆக இருநூற்றி அறுபத்தைந்து பாடல்களும் மருதத்திணைப் பாடல்களாக விளங்குகின்றன. மேலும் பத்துப்பாட்டு நூல்களில் மருதத்திணை சார்ந்த அடிகளும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு ஆதாரங்கள்**

மருதத்திணைப் பாடல்கள் காட்டும் சங்கச்சமூகம் என்னும் தலைப்பில் அமைந்த ஆய்விற்கான தரவுகள் இரு நிலைகளில் சேகரிக்கப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மைத் தரவுகள்
2. துணைமைத் தரவுகள் என்பனவாகும்.

**1. முதன்மைத் தரவுகள்**

எட்டுத்தொகை – நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2004

பத்துப்பாட்டு – நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2004

**2. துணைமைத் தரவுகள்**

சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வு நூல்கள், கட்டுரைகள், பல்கலைக்கழக ஆய்வேடுகள், கருத்தரங்க ஆய்வுக் கோவைகள், கலைக்களஞ்சியங்கள், அகராதிகள் முதலியன துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

இந்த ஆய்வு சமுதாயவியல் அணுகுமுறை, மானுடவியல் அணுகுமுறை என்னும் ஆய்வு அணுகுமுறைகளைக் கடைபிடித்துச் செல்கிறது.

**ஆய்வு முன்னோடிகள்**

இலா. குளோறியா சுந்தரமதியின் சங்க இலக்கியம் மருதம் என்ற நூல் 1973 ஆம் ஆண்டிலும், வி. டி. மாணிக்கத்தின் மருதம் என்னும் நூல் 1982 ஆம் ஆண்டிலும், பெ.மாதையனின் சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம் என்ற நூல் 2004 ஆம் ஆண்டிலும், ம.விஜயலட்சுமியின் சங்க இலக்கியத்தில் மருதநில மகளிர் என்ற ஆய்வேடு 2013 ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. இவை அனைத்தும் இந்த ஆய்விற்கு முன் நிகழ்ந்த ஆய்வுகளாகும்.

இந்த ஆய்வு மருதத்திணைப் பாடல்களைப் பற்றியும், வேளாண்மை முறையைப் பற்றியும், சமூகக் கட்டமைப்பைப் பற்றியும் அறிந்து கொள்வதற்குப் பயன்படும் என்பதால் இவற்றிலிருந்து இவ்வாய்வு தனித்துவம் பெறுகிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

மருதப் பாடல்களை முதன்மையாகக் கொண்டு ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளன. இந்த ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப் பட்டுள்ளன.

முன்னுரை

இயல் : ஒன்று – மருதத்திணை அறிமுகம்

இயல் : இரண்டு – சமூகக் கட்டமைப்பு

இயல் : மூன்று – நம்பிக்கைகளும் பண்பாடும்

இயல் : நான்கு – வேளாண் பொருளாதாரம்

முடிவுரை

துணைநூற் பட்டியல்

பின்னிணைப்பு

என்னும் அமைப்பில் இயல்கள் பகுக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**இயல் : ஒன்று மருதத்திணை அறிமுகம்** :

திணை என்பதற்கான வரையறை பற்றியும் நானிலப் பாகுபாடு பற்றியும் மருதம் என்பதற்கான பெயர்க்காரணம் பற்றியும் சங்க நூல்களில் மருதப் பாடல்கள் இடம்பெறும் விதத்தைப் பற்றியும் இத்திணையில் பயின்று வரும் முதல், கரு, உரிப்பொருள்கள் பற்றியும் இவ்வியல் ஆராய்கிறது.

**இயல் : இரண்டு சமூகக் கட்டமைப்பு** :

சமூகம் பற்றிய விளக்கம், இனக்குழு உருவாக்கம், தாய்வழிக் குடும்பத்தில் இருந்து தந்தைவழிக் குடும்பத்திற்கு மாறிய விதம், சங்ககால தலைமக்களின் வாழ்க்கை களவில் இருந்து கற்பாக மாறிய விதம், குடும்ப வாழ்க்கை முறை, பரத்தமை ஒழுக்கம் பற்றி ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**இயல் : மூன்று நம்பிக்கைகளும் பண்பாடும்** :

நம்பிக்கையின் தோற்றம் பற்றியும் பல வகையான நம்பிக்கை சார்ந்த செயல்களையும் மக்கள் வழிபடும் தெய்வத்தின் வகையைப் பற்றியும் மருத நிலத்தின் வழிபாட்டு முறையைப் பற்றியும் பண்பாட்டுக்கான வரையறை, பல வகையான பண்பாட்டு வகைமை கூறுகளையும் அக்கால மக்களின் விருந்தோம்பல் முறைமைகள்,

விருந்தைப் போற்றியமைக்கான காரணங்கள், ஆடைகள், அணிகலன்கள், விளையாட்டுகள், கலைகள் போன்றனவும் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**இயல் : நான்கு வேளாண் பொருளாதாரம்** :

மக்கள் வாழ்வியலில் பின்னிப் பிணைந்திருக்கும் வேளாண்மைத் தொழில் குறித்தும் உணவு சேகரித்த நிலையிலிருந்து உற்பத்தி நிலைக்கு மாறிய மக்களின் வாழ்வாதாரத்தைப் பற்றியும் பயிர் வகைமைகளைப் பற்றியும் அவர்களால் பயிரிடப்படும் வேளாண் முறையைப் பற்றியும் தொடர்ச்சியாகப் பயிரிடும் முறைகள் பற்றியும் அந்நில மக்களின் பொருளாதாரம் பற்றியும் அரச உருவாக்கத்தில் மருதத்தின் நிலையைப் பற்றியும் இவ்வியல் விளக்குகின்றது.

**முடிவுரை**

இறுதியாக மேற்கண்ட நான்கு இயல்களில் பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் முடிவுரையில் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

இந்த ஆய்வுக்குத் தொடர்புடைய முதன்மை, துணைமை ஆதார நூல்கள், அகராதிகள், ஆய்வேடுகள், இதழ்கள், கலைக்களஞ்சியம் போன்றவை துணைநூற் பட்டியலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

இந்த ஆய்விற்குப் பயன்பட்ட அட்டவணைகள் மற்றும் புகைப்படங்கள் ஆகியவை பின்னிணைப்பில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

# இயல் – 1

## மருதத்திணை அறிமுகம்

தமிழ் அறிஞர்கள் ‘திணை’ என்பதற்கு மலரின் காரணமாகப் பெயர் பெற்றது. ஒழுக்கத்தின் காரணமாகப் பெயர் பெற்றது என்று வேறுபடுத்துகின்றனர். ஆனால் தொல்காப்பியம் முதல், கரு, உரி என்னும் மூன்றும் சேர்ந்ததே திணை என்று தெளிவாக விளக்குகிறது. மேலை நாட்டில் திணையைப் பற்றிய புரிதல் 19 ஆம் நூற்றாண்டில்தான் தெளிவாகிறது. தமிழ் மண்ணில் 2000 ஆண்டுகளுக்கு முன்பே தெளிவாக விளக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. திணைப் பெயர்கள் ஒழுக்கத்தையே முதலில் குறித்தன என்பர் நச்சினார்க்கினியர். பூவாற் பெற்றன என்ற இளம்பூரணரின் கருத்தை மறுத்துக் கூறும்போது ‘பூவாற் பெயர் பெற்றன இவ்வொழுக்கமெனில் அவ்வைந்நிலங்களுக்கு ஏனைய பூக்களும் உரியவாகலின் அவற்றால் பெயர் கூறலும் உரியவெனக் கடாவுவார்க்கு விடையின்மை உணர்க’[1] எனச் சுட்டிக்காட்டியுள்ளார்.

ஒழுக்கத்தால் பெயர் பெறுவதற்கு முன்பே மலர்களால்தான் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்ற இளம்பூரணரின் கருத்தோடு மு. வரதராசனாரும் உடன்படுகிறார். திணை எனும் சொல்லிற்குப் பிங்கல நிகண்டு,

**‘குலம் நிலம் ஒழுக்கமுந் திணையே’ (பிங்கல நிகண்டு - 3641)**

எனப் பொருளுரைக்கிறது.

இதில் திணை என்ற சொல் ஐந்திணையை மட்டுமே சுட்டி நிற்கவில்லை. மாறாகக் குலம், நிலம், ஒழுக்கம் ஆகிய மூன்றும் இணைந்து நிற்கும் தன்மையே திணை எனக் கருதப்பட்டுள்ளது என்பது தெளிவாகின்றது. இங்கே குலம் என்பது நிலத்திற்குரிய மக்கள் எனப் பொருள்படும்.

திணை என்பதற்குப் பல பொருள்கள் உண்டு. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி இதற்கு ‘நிலம், இடம், வீடு, குலம், ஒழுக்கம் எனப் பல பொருள்களைச் சுட்டுகிறது.’[2]

சங்க இலக்கியத்தில் ‘திணை’ என்ற சொல் குடி, ஒழுக்கம், இனம், நிலம், இல்லம், திண்ணை முதலிய பதினெட்டு இடங்களில் பயின்று வந்துள்ளது. இதில் ‘குடி’ என்ற சொல் பதினாறு இடங்களில் வந்துள்ளதாகப் பெ. மாதையன் குறிப்பிடுகிறார். தொல்காப்பியத்தில் ‘திணை’ என்ற சொல் ‘ஒழுக்கம்’, ‘நிலம்’ ஆகிய இருவித தன்மையில் பொருளதிகாரத்தில் பயின்று வந்துள்ளமையைக் காணலாம். க. நெடுஞ்செழியன் திணை என்பதற்கு ‘மக்களின் வாழ்வியல் வாழ்வியலோடு தொடர்புடைய நிலப்பகுதி வாழ்வியலும் நிலச்சூழலும் இணைவதால் வெளிப்படும் நெறிமுறைகள், நெறிமுறைகளை வகுக்கின்ற எண்ணப்போக்கு ஆகிய அனைத்தையும் உள்ளடக்கியதாகத் திணை கருதப்பட்டது’[3] என்று குறிப்பிடுகிறார்.

திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள் பற்றி ஆராய்ந்த கார்த்திகேசு சிவத்தம்பி திணை என்ற சொல் ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையுடன் தொடர்புபடுத்தும் மரபைக் குறிப்பிடும் குறியீடாக விளங்குகிறது என்று கூறுகிறார். ‘ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்கமுறையுடன் தொடர்பு படுத்தும் மரபானது சங்க இலக்கியங்களிலும் காணப்படுகிறது. இந்தக் கருத்தினைக் கூறும் குறியீடாய்த் திணை என்ற சொல் விளங்குகின்றது. தொல்காப்பியர் இந்தச் சொல் குறித்து வரையறை எதனையும் செய்யவில்லை மிக முந்திய உரையாசிரியரான இளம்பூரணர் இந்தச் சொல்லுக்குப் பொதுக்கருத்து அல்லது உள்ளடக்கம் என்று விளக்கம் கூற முற்படுகிறார். மற்றொரு உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் திணை என்னும் சொல்லை ஒழுக்கம் அல்லது நடத்தை என்று வகைப்படுத்திக் கூறுவதை,’[4] கார்த்திகேசு சிவத்தம்பி குறிப்பிடுகிறார். மேற்கூறிய கருத்துக்களில் இருந்து சங்க இலக்கியத்தில் கூறப்படும் அகமும் புறமுமாகிய ஒழுக்கம் திணை என்றே குறிக்கப்பட்டு வருகிறது. மேலே சொல்லிய அக ஒழுக்கத்தையும் புறஒழுக்கத்தையும் அகத்திணை, புறத்திணை என்று வரையறை செய்து கூறியுள்ளனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. மருதத்திணையை அறிமுகம் செய்யும் நோக்கில் அத்திணையின் முதல், கரு, உரிப்பொருளைப் பற்றி ஆய்வதே முதலியலின் நோக்கமாகும்.

**நானில வகைப்பாடு**

ஆரம்பகாலத்தில் நாடோடியாக வாழ்ந்த மனிதன் இயற்கையாகக் கிடைத்த காய்கனிகளையும் கிழங்குகளையும் மற்றும் விலங்குகளையும் வேட்டையாடியும் உண்டு வாழ்ந்து வந்த இடம் குறிஞ்சி என்னும் மலைநிலம் என்றும் ஆடுமாடுகளைச் சிறப்பாக வளர்த்து வாழ்ந்த இடம் காடும் அதனைச் சார்ந்த பகுதியுமாகிய முல்லைநிலம் என்றும் பயிர்களை விளைவித்து நிலையாக வாழ்ந்த இடம் மருதநிலம் என்றும் வாணிகம் செய்யும் மக்கள் வாழ்ந்த கடல் சார்ந்த பகுதியை நெய்தல் நிலம் என்றும் நானிலம் பகுக்கப்பட்டுள்ளன.

பாலை நிலத்தைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுவதைப் போன்று,

**“முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்**
**பாலை என்பதோர் படிமம் கொள்ளும்” (சிலம்பு, காடுகாண் காதை, 64-66)**

பாலை நிலத்திற்குத் தனியாக ஒரு குறிப்பிட்ட நிலம் இல்லை. எனவே அது தனிநிலமாகக் குறிப்பிடப்படவில்லை. பாலை நிலத்தைப் பற்றித் தேவநேயப்பாவாணர், ‘பாலை என்பது முல்லையும் சிறுமலைக் குறிஞ்சியும் முதுவேனில் காலத்தில் நீர்நிலைகளெல்லாம் வற்றி வறண்டு நிலமுஞ் சுடும் நிலை பின்னர் மழைக்காலத்தில் பாலை நிலம் தளிர்ந்தும் நீர் நிரம்பியும் மீண்டும் முல்லையும் குறிஞ்சியுமாக மாறிவிடும் அதனால் ஐந்திணைகளுட் பாலைக்கு நிலையான நிலமில்லை அதனால் ஞாலத்தை நானிலம் என்றனர்’[5] என்று குறிப்பிடுகிறார்.

ஒரு நிலம் இருக்கும்போது இன்னொரு நிலம் எவ்வாறு தோன்றியது என்ற ஐயத்தைத் தீர்க்கும் வகையில் ‘குறிஞ்சியின் ஒரு பால் மக்கள்தொகை பெருகிவிட மற்றொருபால் கிடைக்கக்கூடிய உணவுப்பொருள் வழங்கக்குறையத் தொடங்கியபோது அம்மக்கள் அடுத்தநிலப் பகுதியாகிய காட்டுநிலமாம் முல்லைக்குக் குடிபெயர்ந்தனர்’[6] என்று பி. டி. சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுகிறார். இதனால் ஒரு நிலத்தில் இருந்து மற்றொரு நிலத்திற்குச் சென்ற காரணத்தை அறிந்துகொள்ள முடிகிறது. மேலும் நானிலம் என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி ‘குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகைப்பட்ட நிலமுடையது’[7] என்கிறது.

**மருதம்**

நானிலத்தில் ஒன்றாகக் கருதப்படும் வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதிக்கு 'மருதம்' எனும் பெயர் அமைந்தற்கான மூன்று தலைமைக் காரணங்களை ஆராய்ச்சியாளர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள் என்கிறார் பேராசியர் ந. சஞ்சீவி. அவை, 'பிங்கலம் போன்ற நூல்களில் வயல் என்ற பொருளுடையதாக மருதம் என்ற சொல் காணப்படுகின்றமையின் வயல்சார்ந்த நிலப்பகுதிக்கு மருதம் என்று பெயர் அமைந்திருத்தல் கூடுமென்றும் மருத மரங்கள் செழிப்புடன் விளங்கும் வளம் சார்ந்த பகுதி ஆதலின் மருதம் என்ற பெயர் வந்ததென்றும், அன்புடைய தலைவனும் தலைவியும் மருவியும் ஊடியும் மனம் மகிழ்தலின் மருதம் என்ற பெயர் பொருந்தியது என்றும் கூறுவர்'[8] என்று குறிப்பிடுகிறார். மேலும், தேவநேயப்பாவாணர் மருதம் பற்றிக் குறிப்பிடும்போது மல் – மர் – மருது – மருதம் அதாவது நீர்வளம் மிக்க நிலத்தில் வளரும் மரம் என்று பல சங்க இலக்கிய சான்றுகளை எடுத்துக்காட்டி மருதமரம் ஆற்றையும் பொய்கைகளையும் வயலையுமே அடுத்திருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

அபிதான சிந்தாமணி 'மருதம் என்பது ஊரடுத்த நிலம் மருதநிலம் நல்ல நீர் வளத்தால் எல்லாச் சோகங்களையும் போக்கும் இது வசிக்க யோக்யமானது'[9] என்கிறது. மேலும் உரையாசிரியர்களுள் ஒருவரான நச்சினார்க்கினியர் 'வெள்ளிய பூக்களையுடைய கரும்புகளுடனே செந்நெல்லும் வளர்ந்து குவளையோடே பெருமையுடைய இதழ்களை யுடைய நெய்தலும் மயக்கப்பட்டு முதலைகள் செருக்கித் திரிந்த இடமகன்ற பொய்கைகளையுடைய மருதநிலம்'[10] என்று கூறியுள்ளார். இதன் மூலம் மருதநிலச் சிறப்பை நன்கு தெரிந்துகொள்ள முடிகிறது.

இத்தகைய சிறப்புகள் பொருந்திய மருதநிலம் நீர்வளம் நிறைந்தது. உணவு குறைபாடு இல்லாத நிலம். எனவே ஐவகை நிலங்களிலும் மருதமே உயர்வாகக் கருதப்படுகிறது. உலகத்தில் புகழ்பெற்ற பழைய நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றுப் பாய்ச்சல் நிறைந்த மருத நிலத்திலேதான் தோன்றின என்பது வரலாறு கூறும் உண்மையாகும். இதில் நெல், கரும்பு முதலிய பயிர்கள் சிறந்த முறையில் பயிரிடப்படுகிறது.

**தொல்காப்பியத்தில் திணை வைப்புமுறை**

தொல்காப்பியர் தமது நூற்பாக்களில் மூன்று வகையான திணை வைப்பு முறையைப் பின்பற்றி இருக்கிறார். அதாவது,

1. அன்பின் ஐந்திணையைப் பற்றிக் கூறும்போது – குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல்
2. நிலம் பற்றிக் கூறும்போது – முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்
3. உரிப்பொருள் பற்றிக் கூறும்போது – குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம்

இவ்வாறு மூன்று இடங்களிலும் திணையை வெவ்வேறு முறையில் வைத்துக் கூறியுள்ளார். இதிலிருந்து ஒரு குறிப்பிட்ட திணையை ஒரே வரிசையில்தான் சொல்ல வேண்டும் என்பது இல்லை என்று அவரே தம் நூற்பாக்களில் பயன்படுத்தியதில் இருந்து தெரிந்துகொள்ள முடிகிறது. இந்தத் திணை வரையறை முறையைப் பார்த்தே நச்சினார்க்கினியர் கலித்தொகைக்கு உரை எழுதும்போது ‘சொல்லாத முறையால் சொல்லவும் படுமே’ என்ற தொடரைப் பயன்படுத்திப் பாலைத்திணையை முதலில் வைத்தற்குக் காரணம் கூறுகிறார். எட்டுத்தொகையில் உள்ள அகநூல்கள் ஐந்தனுள் திணை அமைப்பு எவ்வாறு இருந்தது என்பதையும், பாடிய புலவர்கள் பற்றியும் தெரிந்து கொள்வது அவசியமான ஒன்றாகும்.

**நற்றிணை, குறுந்தொகை**

நற்றிணையிலும் குறுந்தொகையிலும் திணைகள் ஒரு வகையாக அமையாது பலவாறு அமைந்துள்ளது. குறிஞ்சியை முதலிலும் மருதத்தை ஈற்றிலும் அமைத்து நற்றிணை தொகுக்கப்பட்டுள்ளது. குறுந்தொகையில் குறிஞ்சியை முதலிலும் நெய்தலை ஈற்றிலும் அமைத்துத் தொகுக்கப்பட்டுள்ளது.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூற்றைத் தொகுத்தவர் மற்றும் தொகுப்பித்தவர் இருவரும் சேர மரபைச் சார்ந்தவர்கள். எனவே சேரமரபைச் சார்ந்த ஆதன், அவனி என்ற மன்னரைப் பற்றி ஓரம்போகியார் பாடிய 100 பாடல்களில் முதல் பத்தான வேட்கைப் பத்தில் ‘வாழி ஆதன் வாழி அவனி’ என்ற தொடர் பத்துப் பாடல்களிலும் முதல் அடிகளில் இடம்பெற்றுள்ளதால் மருதத்திணையை முதலாக வைத்துத் தொகுத்தனர்.

**அகநானூறு**

முறையான திணைவைப்போடு தொகுக்கப்பட்ட பாடல் இது ஒன்றே. பாடல் எண்ணை வைத்தே அது எந்தத் திணையைச் சார்ந்தது என்று அறிந்து கொள்ள முடியும். 6 எனும் எண்ணிக்கை பெற்றது அனைத்தும் மருதமாகும். இதில் பாலைத் திணையை முதலிலும் நெய்தலை ஈற்றிலும் அமைத்துத் தொகுக்கப்பட்டுள்ளது.

**கலித்தொகை**

கலித்தொகையில் 66 ஆவது பாடல் முதல் 100 ஆவது பாடல்வரை 35 பாடல்கள் மருதத்திணையைச் சார்ந்தவையாக உள்ளது.

**பரிபாடல்**

அகமும் புறமும் கலந்து வரும் பரிபாடலில் புறத்திரட்டில் கிடைக்கப்பட்ட இரண்டு பாடல்களைச் சேர்த்து 24 பாடல்கள் உள்ளன. இதில் இசை வகுத்தவர்களைப் பற்றி அறிந்து கொள்ளமுடிகிறது. பாடியவர்கள் மற்றும் தொகுத்தார், தொகுப்பித்தவர் பற்றி அறிய முடியவில்லை. இதில் வையைப் பற்றிப் பாடப்பட்ட பாடல்களான 6, 7, 10, 12, 16, 20, 24 புறத்திரட்டு 2 ஆவது பாடல்களில் மருதம் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

**பாடியோர்கள்**

நற்றிணையில் 32 மருதப்பாடல்கள் காணப்படுகின்றன. இதில் 6 பாடல்களைப் பரணரும் 2 பாடல்களைக் கூடலூர் பல்கண்ணனாரும், 3 பாடல்களை ஆலங்குடி வங்கனாரும், 2 பாடல்களை ஓரம்போகியாரும் பாடியுள்ளனர். கொற்றனார், கோண்மா, நெடுங்கோட்டனார், மருதம் பாடிய இளங்கடுங்கோ, தூங்கலோரியார், வெள்ளிவீதியார், பூதன் தேவனார், அஞ்சில் அஞ்சியார், மாங்குடிகிழார், கடுவன் இளமள்ளனார், மிளைகிழான் நல்வேட்டனார், மதுரை ஓலைக் கடையத்தார், நல்வெள்ளையார், கபிலர், நக்கீரர், உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார், ஔவையார் ஆகிய புலவர்கள் ஒரு பாடலைப் பாடியுள்ளனர். 2 பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லை. 30 பாடல்களை 20 புலவர்கள் பாடி நற்றிணையில் மருதத் திணையைச் சிறப்பித்துள்ளனர்.

குறுந்தொகையில் 48 மருதத்திணைப் பாடல்கள் அமைந்துள்ளன. இதனை 35 புலவர்கள் பாடியுள்ளனர். பரணர் 5 பாடல்களும், ஓரம்போகியார், ஔவையார், அள்ளூர்

நன்முல்லையார் 3 பாடல்களும், ஆலங்குடிவங்கனார், படுமரத்து மோசிகீரனார் நெடும் பல்லியத்தையார் ஆகியோர் 2 பாடல்களும் மீதி 28 புலவர்கள் ஒரு பாடல்களும் பாடியுள்ளனர்.

ஐங்குறுநூற்றையும் கலித்தொகையும் முறையே ஓரம்போகியார் 100 பாடல்களையும் மருதனிளநாகனார் 35 பாடல்களையும் தனி ஒருவராகவே பாடியுள்ளனர்.

அகநானூற்றில் மருதத்திணையில் 40 பாடல்கள் அமைந்துள்ளன. இதில் 15 பாடல்களைப் பரணரும் 3 பாடல்களை நக்கீரரும் 2 பாடல்களை மருதம் பாடிய இளங்கடுங்கோ, ஓரம்போகியாரும் சாகலாசனார், பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி, அள்ளூர் நன்முல்லையார். மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார். செல்லூர்க் கோசிகன் கண்ணனார், நில்லாவூர் கிழார், ஆலங்குடி வங்கனார், விற்றூற்று மூதையினனார், உவர்க்கண்ணூர், புல்லங்கீரனார், ஆவூர் மூலங்கிழார். இடையன் நெடுங்கீரனார், மதுரை மருதனிள நாகனார், ஐயூர் முடவனார், மதுரைத்தமிழ்க் கூத்தனார், கடுவன் மள்ளனார், மதுரைப் பேராலவாயர், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், பாவைக் கொட்டிலார், குடவாயில் கீர்த்தனார் ஆகிய புலவர்கள் ஒரு பாடல்களும் பாடியுள்ளனர்.

**முதல், கரு, உரிப்பொருட்கள்**

சங்கப் பாடல்களில் ஒவ்வொரு திணைக்குரிய ஒழுக்கமும் முதல், கரு, உரி என்னும் முப்பொருளையும் கொண்டு விளங்கும். இதில் உரிப்பொருளே முக்கியத்துவம் பெறுகின்றது. திணை அமைவு பற்றி இளம்பூரணர் ‘யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின் முதற்பொருளால் திணையாகும் என்பதூஉம் முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின் கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம் உரிப்பொருள் தானே வரின் அதனால் திணையாகும் என்பதூஉம் ஆம்.’[11] என்று முதற்பொருளை மையப்படுத்துகிறார். நச்சினார்க்கினியர் ‘முதலில் கருவும், கருவில் உரிப்பொருளும் சிறந்துவரும் என்று உரிப்பொருளை மையப்படுத்துகிறார்.’[12] மேலும் உரிப்பொருளே முதன்மையானது என்று தமிழண்ணல்

கூறுகையில், ‘அகப்பாடல்களில் அமையும் பொருள் முதல், கரு, உரி என்று முத்திறப்படும். இவை மூன்றில் உரிப்பொருள் என்பதே பாடலின் அடிக்கருத்து (Theme) ஆகும். முதலும் கருவும் இன்றிப் பாடல் அமையலாம் உரிப்பொருளின்றிப் பாடல் அமையாது’[13] என்று கூறுகிறார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் எழுதப்பட்ட அறுவகை இலக்கணமும் உரிப்பொருளுக்குத் துணையாக முதற்பொழுதும் கருப்பொருளும் இருக்கிறது என்று குறிப்பிடுகிறது. எனவே உரிப்பொருள் முதன்மைப் பெறுவதையும் இதை அடியொற்றி முதற்பொருளும் கருப்பொருளும் அமைவதையும் அறியமுடிகிறது.

**முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந் தனவே**
**பாடலுட் பயின்றவை நாடுங் காலை (தொல். பொருள். நூ. 3)**

அகப்பாடல்களில் பயின்று வருபவை முதல், கரு, உரி என்னும் முப்பொருள்கள் ஆகும் என்பதைத் தொல்காப்பியம் தெளிவாக்குகிறது. இந்நூற்பாவில் அமைந்த ‘முறை சிறந்தனவே’ என்னும் குறிப்பிற்கு முதலில் கருவும் கருவில் உரிப்பொருளும் சிறந்து வரும் என்ற விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர். இவரின் கருத்தோடு ஒத்துப் போகிறார் ச.சோமசுந்தர பாரதியார்.

**முதற்பொருள்**

**முதல் எனப்படுவது நிலம்பொழுது இரண்டின்**
**இயல்பு எனமொழிப இயல்பு உணர்ந்தோரே (தொல்.பொருள். நூ. 4)**

முதற்பொருள் எனக் கூறப்படுவது நிலம், பொழுது என இரண்டு தன்மையைக் கொண்டது. நிலத்தில் பாலையைத் தவிர்த்து நானிலம் என்றும் பொழுதை பெரும்பொழுது, சிறுபொழுது என இரண்டாகவும் பிரித்துக் கூறியுள்ளார் தொல்காப்பியர். இவர் மருதநிலத்தைப் பற்றிக் கூறும்போது ‘வேந்தன் மேய தீம்புனல் உலகம்’ (தொல். பொருள். நூ. 5) என்று அடையாளப்படுத்தியுள்ளார்.

தொல்காப்பியத்தை ஒட்டி எழுந்த அகப்பொருள் விளக்கம் நிலத்தைப் பற்றிக் கூறும்போது,

**வரையே சுரமே புறவே பழனம்**

**திரையே அவையவை....... (அகப். 9)**

என்று குறிப்பிடுகிறது.

நீர்வளம் மிக்க மருதநிலத்தைப் ‘பழனம்’ என்று சங்கப் பாடல்கள் சுட்டிச் செல்கிறது.

1. **பழனம் ஆகற்க .... (ஐங் 4 - 6)**
2. **பழன ஊர... (ஐங் 53 - 4)**
3. **பழனத் ததுவே.. (ஐங். 94 : 3)**
4. **பழன வெதிரின்.. (ஐங்.91 : 4)**
5. **பழனம் சேர் ஊர.. (கலி. 70 : 6)**
6. **பழனத்த புள் ஒற்ற.. (கலி. 77 : 5)**
7. **பன்மலர் பழனத்த.. (கலி. 78 : 1)**
8. **நீர்முதிர் பழனத்து.. (அகம். 46 : 4)**
9. **தீம்பெரும் பழனத்து (நற். 200 : 6)**

என்ற பாடல் அடிகளில் வயல் என்பதற்குப் பதில் ‘பழனம்’ என்ற சொல் பயன்படுத்தப்பட்டதைக் காணமுடிகிறது.

வயல் என்ற சொல்லும் ஒரு சில இடங்களில் கையாளப்பட்டுள்ளது. அவை வருமாறு:

1. **விளைக வயலே! வருக இரவலர்! (ஐங். 2 : 2)**
2. **வயல் அணி நல்ஊர (கலி. 73 : 5)**
3. **புள்இமிழ் அகல்வயல் (கலி. 79 : 1)**
4. **அவ்வயல்நண்ணிய (அகம். 26 : 4)**
5. **மலிநீர் அகல்வயல் (அகம். 246 : 4)**

**பொழுது**

பொழுது இரண்டு வகைப்படும் 1. பெரும்பொழுது, 2. சிறுபொழுது

ஒரு ஆண்டின் கூறுபாடு பெரும்பொழுது என்றும், ஒரு நாளின் கூறுபாடு சிறுபொழுது என்றும் பிரித்துள்ளார் தொல்காப்பியர்.

**வைகறை விடியல் மருதம் (தொல். பொருள். நூ.9)**

ஆறு பெரும்பொழுதுகள் மருதத்திற்கு உரியன. சிறுபொழுதாக வைகறை, விடியல் இரண்டும் கூறப்பட்டுள்ளது.

1. **கன்னி விடியல் (ஐங். 68 : 1)**
2. **வைகறைப் பெற்றதை (கலி. 66 :12)**
3. **சிறுகாலை (கலி 97 : 3)**
4. **விடியல் வைகறை (அகம் 196 : 7)**
5. **வாள்போல் வைகறை (குறுந் 157 : 4)**

முதலிய இடங்களில் மருதத்திணை சிறுபொழுதுகள் இடம்பெற்றுள்ளன. சிறுபொழுதுகள் வைகறையும் விடியலும் ஏன் மருதத்திற்கு வைக்கப்பட்டுள்ளது என்பதற்குக் காரணம் கூறவந்த நச்சினார்க்கினியர் பரத்தையிற் பிரிந்த தலைவன் பிறர் அறியா வண்ணம் தலைவியின் இல்லத்தை அடைவதற்கு ஏற்ற நேரம் ஆதலால், அவை இரண்டையும் மருதத்தின் சிறுபொழுதாக வைக்கப்பட்டுள்ளது எனக் கூறுவார்.

**கருப்பொருள்**

'முதற் பொருளாகிய நிலத்திலும் பொழுதிலும் கருக்கொள்கின்ற பொருட்கள் கருப்பொருட்கள் ஆகும்'[14] என்று வ.சுப. மாணிக்கம் குறிப்பிடுகிறார்.

நிலத்தில் தோன்றும் பொருட்களைத் தொல்காப்பியர் அந்நிலக் கருப்பொருளாகக் கொண்டார். முதற்பொருளின்னும் கிளைப்பதாலும் உரிப்பொருளுக்குத் துணையாக நிற்பதாலும் முதற்பொருளுக்கும் உரிப்பொருளுக்கும் இடையே இக்கருப்பொருளைத் தொல்காப்பியர் வைத்தார். இதனை,

**தெய்வம் உணாவே மா மரம் புள் பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருஎன மொழிப (தொல். பொருள். நூ. 18)**

எனக் குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியர் எட்டுக் கருப்பொருளைக் கூறி, பின் எவையெல்லாம் வருமோ அவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்கிறார். இதற்குப் பின் தோன்றிய நம்பியகப்பொருள் பதினான்கு கருப்பொருளை வரிசைப்படுத்திக் கூறியுள்ளது.

**தெய்வம்**

மருதநிலத்தில் வாழ்ந்தோர் கடவுளை வேந்தன் என்று கூறி வழிபட்டனர். வேந்தன் என்றால் விருப்பத்திற்குரியவன் என்று பொருள். இது 'வெம்' என்ற அடிச்சொல்லிருந்து தோன்றியது. கடவுள் மக்கள் விருப்பத்திற்குரியவர் ஆதலின், அவ்வாறு அழைத்தனர் போலும். இதனை உறுதிப்படுத்தும் வகையில் இலக்குவனார் 'முதலில் அச்சொல் நாட்டுத் தலைவராம் அரசரைக் குறித்தது பின்னர் உலகத் தலைவராம் கடவுகளுக்கும் அப்பெயரை இட்டுள்ளனர்'[15] என்று கூறியுள்ளார்.

பின்னர் நாளடைவில் இறை, கோ என்ற சொற்கள் அரசரையும் கடவுளையும் குறிக்கும் சொல்லாக மாறியது. வடமொழியாளர் தொடர்பு ஏற்பட்ட பின்னர் வடமொழி நூல்களில் கூறப்பட்ட  இந்திரனும் தமிழர்கள் போற்றிய வேந்தனும் ஒருவனே என்று கருதினர். பின்னர் இந்திரன் என்ற பெயர் தேவர்களுடைய தலைவனுக்குரியதாகிப் பல கதைகள் தோன்றிக் கடவுளைக் குறிக்கும் பொருளை இழந்துவிட்டது.

அன்பின் ஐந்திணைகளுள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்  ஆகிய நான்கு திணைகளுக்கும் உரிய கடவுளாகக் கருதப்படும் மாயோன். முருகன், வேந்தன்,வருணன் ஆகிய நால்வரும் மனிதனாக இருந்து தெய்வநிலைக்கு உயர்ந்தவர்களே என்பதை 'மாயோனாகிய திருமாலுக்கும் முந்தியவன் முருகன், கொற்றவையும் கொற்றவையின் மகனாகிய முருகனும் இனக்குழு நிலையில் குறிஞ்சிநிலத்தில் தோற்றம் கொண்டவராயினும் கொற்றவை தாய்வழிச் சமூக அமைப்பிற்கும் முருகன் ஆண்வழிச் சமூக அமைப்பிற்கும் உரியவர்களாவர். தாயின் தலைமையில்  இயங்கிய பெண்வழிச் சமூக அமைப்பில் தாய் தலைமையேற்றாள். அவளுக்குப் பின் அத்தலைமைப் பொறுப்பிற்கு அவளின் மகனே வந்ததால்தான் முருகனைக் கொற்றவையின் சிறுவனாகவும் புலவர்கள் பாடினர். அரசுகள் தோற்றம் கொள்ளாத இனக்குழு நிலையில்

அவர்களின் பணி பாதுகாக்கும் பணியாக இருந்ததால் தான் கொற்றவையும் முருகனும் போருக்குரிய கடவுள்களாகவும் கருதப்பட்டனர். அரசு முல்லை நிலத்தில் தோற்றம் கொண்டதால் அந்நிலத்தின் அரசனாகத் திகழ்ந்தவன் மாயோனாக காக்கும் கடவுளாக் கருதப்பட்டான். பிற்காலத்தில் அரசர்களுக்குத் தெய்வத்தன்மை ஏற்பட்டபோது அவர்களைத் திருமாலோடு ஒப்பிடும் நிலை உருவானதற்கு இதுவே காரணமாகும்.'[16] என்று க.நெடுஞ்செழியன் கூறுவதில் இருந்து இனக்குழு தலைவனே பிற்காலத்தில் அனைவரும் வழிபடும் தெய்வமாக மாறினான் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. மருதநிலக் கடவுளாகக் கருதப்பட்ட இந்திரனைப் பற்றிய செய்தி புறநானூற்றில் இடம்பெறுகிறது.

**வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்**
**போர்ப்புறு முரசுங் கறங்க**
**ஆர்பெழுந் தன்றால் விசும்பி னானே (புறம்.241 : 3-5)**

மக்களை ஆளும் வேந்தனை மருதநிலத்தின் தெய்வமாக வ.சுப. மாணிக்கம் கருதுகிறார். மொ.அ.துரை அரங்கசாமியும் வ.சுப. மாணிக்கத்தின் கருத்தோடு ஒத்துப் போகிறார்.

**உணவு**

மருதநில மக்கள் உணவு தட்டுப்பாடு இன்றி வாழ்ந்தமைக்கு முக்கியக் காரணம் நீர்வளம் மிக்க ஆற்றங்கரைக்கும் கிணறுகளுக்குப் பக்கத்தில் தனது குடியிருப்பினை அமைத்து வேளாண்மை செய்ததே ஆகும். மக்கள் உயிர் வாழ உணவு இன்றியமையாதது, புறநானூறு உணவின் சிறப்பை,

**'உண்டி முதற்றே உணவின் பிண்டம்' (புறம். 18-19)**

என்று குறிப்பிடுகிறது. உடம்பை வளர்க்கும் இவ்வுணவின் அருமைப் பாட்டினை உணர்ந்தே நம் முன்னோர் உடம்புக்குத் தேவையான சத்துக்களைக் கொண்ட எல்லா உணவுப் பொருள்களையும் உண்டு வந்தனர்.

**நிலத்திற்கு ஏற்ற உணவு**

ஐந்து நிலங்களும் வெவ்வேறு வளமுடையதாக இருந்தது. அந்தப் பகுதியில் வாழ்ந்த நிலத்திற்கு ஏற்றவாறு மக்களின் தொழில்கள் வேறுபடுதல் போல

விளைபொருட்களும் உணவு வகைகளும் வேறுபடுகின்றன. ஒவ்வொரு நிலத்திலும் இயற்கையாகக் கிடைக்கும் உணவுப் பொருட்களையும் மக்கள் உழைப்பால் விளைவிக்கப்படும் உணவுப் பொருட்களையும் உண்டு வாழ்ந்தனர்.

சேர மன்னர்களை வாழ்த்தும்போதுகூட மருதநிலத்தில் உணவுப் பொருளாக விளங்கக் கூடிய நெல் மிகுதியாக விளையட்டும் என்றே வாழ்த்திப் புலவர்கள் பாடியுள்ளதை,

**நெல்பல பொலிக! பொன்பெரிது சிறக்க! (ஐங். 1)**

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

**நெல்**

மருத நிலத்தின் முக்கிய விளைபொருளான நெல்லைப் பற்றி,

**காய்த்த நெல்லின் (ஐங். 4 : 4)**

**செந்நெல்அம் செறுவில் (ஐங். 27 : 1)**

**வயங்கிய ஒருகதிர் (கலி.79 : 3)**

**செழுஞ்செய் நெல்லின் (அகம்.156 : 3)**

**வண்தோட்டு நெல்லின் (அகம். 376 : 15)**

**பழம்பல் நெல்லின் ஊணூர் (அகம். 220 :13)**

**நெல்லுடை மறுகின் நன்னர் ஊர் (அகம். 306 : 8)**

**பழம்பல் நெல்லின் வேளூர் வாயில் (அகம். 166 : 4)**

**காய்நெல் படப்பை வாணன் சிறுகுடி (அகம். 204 : 12)**

**நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன் (அகம். 356 : 13)**

**கட்டின் கேட்கும் (நற். 288 : 7)**

**வெண்நெல் (கலி. 58 : 1)**

என்று பல பாடல்களில் நெல்லைப் பற்றிப் புலவர்கள் பாடியுள்ளனர்.

உழவன் உண்ணும் உணவைப் பற்றிக் கூறும்போது அவன் விரால் மீனையும் சோற்றுத் திரளையும் விரும்பி உண்ணும் கையை உடையவன் என்பதை,

**கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு**

**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு (நற். 60 : 4 -5)**

என்று நற்றிணைப் பதிவு செய்துள்ளது.

**செந்நெல் அரிசி**

எரும்பின் கூட்டில் உள்ள முட்டைகளை நாரைகள் சென்று உறிஞ்சும் பொழுது அதனால் சிவந்த எறும்புகளும் செந்நெல்லில் கலந்த அரிசி உதிர்வது போல உதிர்ந்து வயல் முழுவதும் பரவும் என்பதை,

**கழனி நாரை உரைத்திலின் செந்நெல்**

**விரவு வெள் ளரிசியின் தாஅம் ஊரன் (நற். 180 : 2-3)**

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

இதில் இருந்து மருதநில மக்கள் செந்நெல்லைப் பற்றி அறிந்து பயன்படுத்தினர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

மருத நிலத்தில் நெல் விளைவித்து அந்த நெல்லரிசியைக் கொண்டு சமைத்த பழஞ்சோற்றை உலர வைக்கும் அம்மக்கள் அந்த நெல்லை அவலாக மாற்றி உண்பதன் பொருட்டு அவல் இடித்த செய்தியை,

**பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்**

**புதுவை வேய்ந்த கவிகுழல் முன்றில்**

**அவல்எறி உலக்கைப் பாடு விறந்து (பெரும். 224 - 226)**

என்னும் அடிகள் மூலம் உணரலாம்.

மேலும் மருதநிலத்து உழவர்களின் வீடுகளுக்குச் செல்லும் பாணர்களுக்கு உணவாக வெண்மைநிற நெற்சோற்றை அவர்களுடைய மனையிடத்தில் வாழும் கோழிப் பெடையினால் சமைத்த பொரியலை வழங்கியதையும் பெரும்பாணாற்றுப்படை பதிவு செய்துள்ளதை,

**மல்லர் பேரூர் மடியின் மடியா**

**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**

**மனைவாழ் அளகின் வாட்டொடும் பெருகுவீர் (பெரும். 254 - 256)**

மேற்கண்டவாறு அறியலாம்.

மற்ற திணையைக் காட்டிலும் நாகரிகத்தில் சிறந்து விளங்கிய மருதநிலத்தில் உழவுத் தொழில் சிறந்து உணவுப் பொருட்கள் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**மக்கள்**

பாரதி தீபம் நிகண்டு தலைமக்களைக் குறிப்பிடுகையில்,

**தொழுவர் கடைய ருழவினர் கம்பளர் சூழ்களமர்**

**கழனியின் மள்ளர் கடைச்சி யுழத்தி கழனிமகள்**

**கிழவனு மூரனுங் கேடின் மகிணனுங் கேள்மருதந்**

**தழுவு தலைவர் மனைவி கிழத்தி தலைமகளே (பாரதிதீபம் 47)**

மருத நிலத் தலைமக்களாக ஊரன், மகிழ்நன், கிழவன், கிழத்தி, மனையாள், உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் எனப் பலர் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. மருதநிலத்திற்குரிய மக்கட் பெயர்ச்சொற்கள் மருதநிலம் குறித்த முதற்பொருளுடன் மிகுதியும் இடம்பெற்றன. அவ்வாறு இடம்பெற்றுள்ள பாடல் அடிகள் வருமாறு :

**காஞ்சி ஊரன் கொடுமை (குறுந்.10 : 4)**

**தண்டுறை ஊரன் (ஐங். 2 : 5, 5 : 5, 6 : 5, 7 : 5, 9 : 5, 10 : 5, 13, 21 : 3)**

**யாணர் ஊரன் (ஐங். 1 : 5, 42 : 5, 43 : 3, 49 : 3, 70 : 3)**

**பூங்கருல் ஊரன் (ஐங். 3 : 5, 8 : 5, 16 : 4)**

**துறைகேழ் ஊரன் (ஐங். 11 : 2, 12 : 2, 20 : 4)**

**மணித்துறை ஊரன் (ஐங்.14 : 3)**

**புனலணி ஊரன் (ஐங். 23 : 2, 65 : 2)**

**கழனி ஊரன் (ஐங். 4 : 5, 18 : 2, 25 : 3, 29 : 3, 60 : 2)**

**....... உழவர் (கலி. 68 : 4)**

**கழனி உழவர் (அகம். 216 : 9)**

**...... உழவர் (நற். 340 : 7)**

**மரம்**

மருத நிலத்தில் காஞ்சி, மருதம், வஞ்சி, மா மரங்கள் இருந்ததை சங்கப் பாடல்கள் பதிவு செய்கின்றன.

**காஞ்சி**

**நனைய காஞ்சிச் (ஐங். 1 : 4)**

**கொய்குழை அகைகாஞ்சித் (கலி. 74 : 5)**

**காஞ்சி ஊர (அகம். 96 : 8)**

**காஞ்சி நுண்தாது (அகம். 56 : 6)**

**காஞ்சியின் அகத்து (அகம். 156 : 6)**

**காஞ்சிஅம் குறுந்தறி (அகம். 346 : 6)**

**முடக்காஞ்சிச் செம்மருதின் (பொருந. 189)**

**மாமரம்**

**அலங்குசினை மாஅத்து (ஐங். 8: 4)**

**பூத்த மாஅத்து (ஐங். 10:4)**

**வடிகொள் மாஅத்து (ஐங். 14:2)**

**எக்கர் மாஅத்து (ஐங். 19: 1)**

**நறுவடி மாஅத்து (ஐங். 61: 1)**

**குரும்பு குணிலா மாங்கனி (ஐங். 87:2)**

**கருங்கோட்டு மாஅத்து (ஐங். 236:7)**

**ஈன்ற மாத்தின் (அகம். 306:4)**

**மருதம்**

நிகண்டாசிரியர்கள் காலத்திலேயே சங்ககால மருதம் மறக்கப்பட்டுவிட்டது. நிகண்டுகளில் மருதம் என்பதற்குப் பொருள் அர்ஜீனம் என்ற வடமொழிப் பெயர் கூறப்பட்டுள்ளது.

‘அருச்சுனம் மருதே’ (17) என்று சேந்தன் திவாகரம் மரப்பெயராகக் கூறுகிறது. இந்த அர்ஜீனம் என்ற மரம் தமிழில் தற்காலத்தில் வெள்ளைமருது, குலமருது என்றழைக்கப்படுகிறது. இந்த மரம் சங்க இலக்கியத்தில் கூறப்படும் மருதமரம் அன்று. இக்காலத்தில் மருதமரத்தைப் பூமருது என்றழைக்கின்றனர். இந்தப் பூமருதே உண்மையான மருதம் ஊதாநிறம் சிறிது கலந்து இளஞ்சிவப்பான பெரிய இதழ்கள் மருதம் பூவிற்கு உண்டு. இப் பூ ஆறு இதழ்களைப் பெற்றிருக்கும். ‘செவ்வீ மருதென்று’ சங்க நூல்களில் வழங்குவதில்லிருந்து இது பச்சை கலந்த வெள்ளைப் பூவையுடைய அருச்சனமன்று என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

**முடம் முதிர் மருதத்துப் (ஐங். 31:3)**

**கழனி மருதின் (ஐங். 70:2)**

**கரைசேர் மருதம் ஏறிப் (ஐங். 74:3)**

**தாழ்சினை மருதம் (அகம். 366:1)**

**வஞ்சி**

**வஞ்சி ஓங்கிய யாணர் ஊர (ஐங். 50:2)**

காஞ்சி, மாமரம், மருதம், வஞ்சி போன்ற மரங்கள் மருதநிலத்தில் வளர்ந்து வளம் சேர்த்தன என்பது தெளிவாகிறது.

**பறவைகள்**

வீட்டின் முற்றத்தில் காய வைத்திருக்கும் தானியங்களைப் பறவைகள் தின்றதாகவும் அதனைத் தலைவி ஓட்டியதாகவும் பாடல்கள் அமைகின்றன. மருதநிலத்தில் நாரை, குருகு, அன்னம், கிளி, சம்பங்கோழி, கொக்கு, சேவல் போன்ற பறவைகள் இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

**நாரை**

**கயல்ஆர் நாரை (ஐங். 9:4)**

**அருந்த நாரை (ஐங். 70:1)**

**இரைதேர் வெண்குருகு (அகம். 176:9)**

**வெண்தலைக் குருகின் (ஐங். 86:1)**

**வார்குருகு உறங்கும் (அகம். 306:5)**

**உண்இிய நாரைதன் (அகம். 276:2)**

**அன்னம்**

**ஆய்தூவி அன்னம்தன் (கலி. 69:6)**

**துணைபுணர் அன்னத்தின் (கலி. 72:2)**

**கிளி**

**ஊடும்மென் சிறுகிளி (கலி. 72:4)**

**சம்பங்கோழி**

**நீர் உறை கோழி (ஐங். 51:1)**

**பழனக் கம்புள் (ஐங். 60:1)**

**வெண்நுதல் கம்புள் (ஐங். 85:1)**

**சேவல்**

**கணம் கொள் சேவல் (குறுந். 107:2)**

**பூக்கள்**

நீர்நிலைகளில் தாமரை, நெய்தல், நீலம், ஆம்பல், அல்லி, நெருஞ்சி, குவளை போன்ற பல மலர்கள் பூத்து நீர்நிலைகளை அழகுபடுத்தின. இம்மலர்களை முள்தாள் தாமரை, கள் கமழும் நெய்தல், வள்இதழ் நீலம், மெல்இலை ஆம்பல் என இவை அடைமொழிகளால் அழைக்கப்பட்டது.

**முட்தாள் சுடர்த் தாமரை**

**கள் கமழும் நறுநெய்தல்**

**வள் இதழ் அவிழ் நீலம்**

**மெல்இலை அரி ஆம்பலொடு (மதுரை. 249-252)**

**தாமரை**

தாமரை தழைத்துக் கிளைத்து வளரத்தக்கதாய் அமைந்திருக்கிறது. காலையில் கதிரவன் கீழ்த்திசையில் தோன்ற ஆரம்பித்ததும் தாமரை மலர் அரும்புகிறது. மாலையில் கதிரவன் மேற்றிசையில் மறைந்ததும் தாமரை மலர் கூம்புகிறது.

**முகைந்த தாமரை (ஐங். 6:4)**

**கழனித் தாமரை (ஐங். 53:3)**

**தாமரை போல (ஐங். 68:2)**

**பாசடைத் தாமரை (கலி. 71:7)**

**கடிகயத் தாமரை (கலி. 72:7)**

**வயற்பூத்த தாமரை (கலி. 74:3)**

**தாமரைத் தனிமலர் (கலி .77:2)**

**முள்அரைத் தாமரை (கலி. 79:2)**

**சுடர்ப்பூந் தாமரை (அகம். 6:16)**

**கலித்த தாமரை (அகம் 16:1)**

**மயங்கி தாமரை (அகம். 46:5)**

**தாமரைப் பழனத்து (அகம். 106:1)**

**தாமரை இடைஇடை (அகம். 116:1)**

**பூத்த தாமரை (அகம். 176:7)**

**கலித்த தாமரை (அகம். 186:3)**

**தாமரைக்கு இறைஞ்சும் (நற். 300:4)**

என்னும் அடிகளில் தாமரை மலர்கள் இடம்பெற்றுள்ளன.

**ஆம்பல்**

ஆம்பல் மலர் சுனைகளிலும் பொய்கையிலும் மாலை நேரத்தில் மலரும். இம்மலர் வெள்ளாம்பல், சேதாம்பல் என்னும் வண்ண வேறுபாடு உடையது. அல்லி என்று சொல்லப்படுவதும் இதுவே, மணம் உடையதால் பெண்கள் தலையில் சூடிக்கொள்வர். இரவில் சந்திரன் எழுந்ததும் தாமரை இனத்தைச் சேர்ந்த அல்லி மலர்கிறது. அதிகாலையில் சந்திரன் மறைந்ததும் அல்லி மலர் கூம்புகிறது.

**ஆம்பல் அறுக்கும் (ஐங். 21:2)**

**புழைக்கால் ஆம்பல் (ஐங். 34:2)**

**பொய்கை ஆம்பல் (ஐங். 35:2)**

**வண்டுபினி ஆம்பல் (ஐங். 40:5)**

**ஆம்பல்அம் செறுவனி (ஐங். 57:2)**

**கலித்த ஆம்பல் (ஐங். 65:1)**

**கணைக்கால் ஆம்பல் (ஐங். 68:1)**

**வயல்மல் ஆம்பல் (ஐங். 72:1)**

**ஆம்பல் மயக்கும் (ஐங். 91:2)**

**ஆம்பல் ஒல்லா (ஐங். 93:2)**

**ஆம்பலொடு கலிக்கும் (ஐங். 96:2)**

**நேரிதழ் ஆம்பல் (கலி. 75:2)**

**ஆம்பல்அம் தொடலை (அகம். 6 :1)**

**ஆம்பல் மெல்அடை (அகம். 36:3)**

**அருவி ஆம்பல் (அகம். 96:5)**

**ஆம்பல் அகல்இலை (அகம். 196:5)**

**அரிமல் ஆம்பல் (அகம். 316:2)**

**ஒல்கி ஆம்பல் (நற். 300:3)**

**தாதின் அல்லி (அகம். 16:2)**

என்னும் அடிகளில் ஆம்பல் மலர்கள் இடம்பெற்றுள்ளன.

**குவளை**

குளத்தில் பூக்கும் குவளை மலர்களை நீராடச் செல்லும் பெண்கள் பறித்து விளையாடுவர். இம்மலரின் மொட்டை மகளிரின் கண்களுக்கு உவமையாகக் கூறப்படும். இம்மலரைப் பற்றி,

**குவளை உண்கள் (ஐங். 72:3)**

**கள்நறுங் குவளை (ஐங். 73:3)**

**கிழிய குவளை (அகம். 36:3)**

**குற்ற குவளையும் (அகம். 216:8)**

என்னும் அடிகளில் குவளை மலர்கள் இடம்பெற்றுள்ளன.

**நீலமலர்**

நீளமான இதழ்களைக் கொண்டு இருப்பதாலும் நீல நிறத்தில் இருப்பதாலும் நீலமலர் என்று அழைக்கப்படுகிறது.

**பல்இதழ் நீலமொடு (ஐங். 2:4)**

மேற்கூறிய மலர்கள் மட்டும் அல்லாமல் அனிச்சம் பூ, நரவம் பூ, முல்லைப் பூ, ஞாழல் எனப் பல வகையால் பூக்கள் மருதத்திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

**விலங்குகள்**

எருமை, நீர்நாய் என்ற விலங்குகளும், மீன், ஆமை, முதலை, நண்டு போன்ற கடல்வாழ் உயிரினங்களும் மருதத் திணையில் காணப்படுகிறது.

**எருமை**

உழவிற்குப் பயன்பாட்டில் எருமை முக்கியப் பங்கு பெற்றது. இதனைக் கொண்டு உழவன் உழுத செய்தியையும், உழவு முடிந்த பின் எருமைகள் மேய்ந்த செய்தியையும் கருவாகக் கொண்டு பாடல் படைக்கப்பட்டன. ஐங்குறுநூற்றில் எருமையைச் சிறப்பிக்க, பத்துப் பாடல்களிலும் பயன்படுத்தியுள்ளார் ஓரம்போகியார். உழவிற்குப் பயன் படுத்தப்பட்ட எருதுகள் சுமைத் தூக்கவும் வண்டி இழுக்கவும் உழவுத் தொழிலை மேற்கொள்ளவும் தேர்வு செய்யப்பட்டன. எருதுகள் மிக்க வலிமை கொண்டவை என்றும் சுமை சுமப்பதில் திறமை கொண்டவை என்றும் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

**பகடுபல சிறக்க (ஐங். 3:2)**

**கருங்கோட்டு எருமை (அகம். 146:3)**

**திரி மருப்பு எருமை (அகம். 206:3)**

**ஈர்ந்தண் எருமை (அகம். 316:3)**

**எருமை உழவ (நற். 60:2)**

**மன்ற எருமை (நற். 80:1)**

**நெறிமருப்பு எருமை (ஐங். 91:1)**

**கருங்கோட்டு எருமை (ஐங். 92:1), (ஐங். 95:1)**

**எருமைநல் ஏற்றினம் (ஐங். 93:1)**

**தடங்கோட்டு எருமை (ஐங். 94:1)**

**அணிநடை எருமை (ஐங். 96:1)**

**கருந்தாள் எருமை (ஐங். 97:2)**

**தடங்கோட்டு எருமை (ஐங். 98:1)**

**கழனி எருமை (ஐங். 99:2)**

**எருமை கிளைக்கும் (ஐங். 100:2)**

என்னும் அடிகளின் மூலம் எருமை பாடல்களில் பாடப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**நீர்நாய்**

நீரில் வாழும் தன்மை உடைய நீர்நாய் இருப்பதை,

**புலவுநாறு நீர்நாய் (ஐங் 63:1)**

**நாயுடை முதுநீர்க் (அகம். 16:1)**

**வரிப்புற நீர்நாய் (குறுந். 364:1)**

என்னும் அடிகள் மூலம் அறியமுடிகிறது.

**முதலை**

**பிள்ளை தின்னும் முதலைத்து அவன் ஊர் (ஐங். 24:2)**

தான் ஈன்ற பிள்ளையே திண்ணும் முதலை என்று ஐங்குறுநூறு கூறியுள்ளது.

**ஆமை**

ஊர்வன இனத்தைச் சார்ந்த ஆமையைப் பற்றி,

**வெள் அகட்டு யாமை (ஐங் 81:1)**

**வளஉகிர் யாமை (அகம். 256:2)**

என்னும் அடிகள் பதிவு செய்துள்ளன.

**நண்டு**

**புள்ளிக் களவன் (கலி. 88:10)**

**மீன்**

**மீன்முதிர் இலஞ்சிக் (அகம். 186:3)**

**மீன்கொள் பாண்மகன் (அகம். 216:1)**

**கதிர்மூக்கு ஆரல் (அகம். 246:2)**

**வாளை நாள்இரை (குறுந். 364:2)**

என்னும் அடிகள் மூலம் மீன்களின் வகைகளை அறியமுடிகிறது

இலக்கண நூலாசிரியர்கள் வரையறைபடுத்திய கருப்பொருட்கள் மட்டுமல்லாமல் மேலும் பல கருப்பொருட்கள் இருக்கின்றன. நீர்வளப்பம் உடைய மருதநிலத்தில் முதலை, ஆமை, நண்டு, மீன் போன்ற உயிரினங்களைப் பற்றிய செய்தி இடம்பெறுவது வியப்பில்லை. மருதத்திணையில் பல இடங்களில் விலங்குகளைப் பற்றியும் கடல்வாழ் உயிரினங்களைப் பற்றியும் பாடல்கள் அமைந்துள்ளன.

### தொழில்

மலைப் பகுதியிலிருந்து உற்பத்தியாகி ஓடி வந்த வெள்ளம் காட்டில் புகுந்து வெளியேறி சமவெளிப் பகுதியை அடைகிறது. வேகமாய்ப் பெருக்கெடுத்த வெள்ளம் நிலத்தின் தாழ்ந்த பகுதியில் தேங்குகிறது. அவ்வாறு தேங்கிய நீரே வேளாண்மையைக் கண்டுபிடிக்க உதவியது. தனக்கு வேண்டிய உணவைத் தேடித் திரிந்து உண்ட மனிதன் அந்த உணவுகளைத் தாமே உற்பத்திச் செய்துகொள்ளலாம் என்ற நிலையில் வேளாண்மையைச் செய்தான். நீர்வளம் மிக்க மருதநிலத்தில் வேளாண்மை செய்வதற்கு ஏற்ற இடமாக இருந்தது. எனவே உழவு இவர்கள் தொழிலாக மாறியது. இவர்கள் கால்நடைகளைக் கொண்டு நிலத்தை உழுது பயிர் விளைவித்தனர் என்பதை,

**நீர்வளம் தண்ணில் வயல்வளம் மிகுத்தே**

**நீர்நலம் சிறந்ததொளிர் செய்வநல் மருதமும் (ஐங். – புலியூர்க்கேசிகன் முன்னுரை)**

உழவுத் தொழில் செய்வோரைப் பற்றி,

**வித்திய உழவர் நெல்லோடு பெயரும் (ஐங். 3:4)**

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

உழவுத்தொழிலை மேற்கொண்ட மருத நிலத்தில் மக்கள் தம் தொழிலுக்குக் கருவியாக எருமையைப் பயன்படுத்தினர் என்பதை,

**கருங்கோட் டெருமைவ் வெங்கண் புனிற்று**

**காதற்குழவிக்கு ஊறுமுலை மடுக்கும் (ஐங். 92: 1-2)**

**எருமை நல்வேற்றினம் மேயல் அருந்தெனப் (ஐங். 93:1)**

என்ற பாடல் அடிகளின் மூலம் அறிந்து கொள்ளலாம். உழவர்கள் நாற்றுநடுதல் (பெரும். 207-212), களைபறித்தல் (பெரும். 213 - 17), கடா விடுதல் (பெரும். 230 – 242), நெல் அறுத்தல் (மதுரை. 261-262), புனலாடல் (ஐங்.53:2, 64:2, 73:3, 72:5,) போன்ற சங்கப் பாடல்கள் சான்றாக உள்ளன. இதனைப் பற்றிப் பின்வரும் இயல்களில் விரிவாக ஆராயலாம்.

**யாழ்**

நன்னனுக்குரிய மருத நாட்டில் எருதையோட்டும் உழவர்கள் யாழிலே மருதத்தை வாசித்துப் பாணர் தங்கிப்போவர் என்பதை,

**யெருதெறி களம ரோதையொடு நல்யாழ்**

**மருதம் பண்ணி யசையினிர் கழிமின் (மலை.469 - 470)**

பாணர்கள் மருத யாழை வாசித்ததை மலைபடுகடாம் பதிவு செய்துள்ளது.

**பண்**

மருதப் பண் மருதநிலத்திற்குரிய காலைப் பண்ணாகும். இதனை யாழிசைக்கு வல்லார், தாளக் கட்டினை நன்றாக மனத்தில் வாங்கிக் கொண்டு நரம்புகளைத் தெறித்து

மருதப் பண்ணை வாசிக்க இருள் மாய்ந்து கதிர்விரியும் விடியற்காலை தோன்றும் என்பதை,

சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி

யாமோர் மருதம் பண்ண........

.....................

புலர்ந்துவிரி விடிய லெய்த (மதுரை. 657-664)

மருதத்தை வாசித்த கரிய தண்டினையுடைய சிறிய யாழின் நரம்பினோசைக்கு மேற்போகாது அவ்வோசையுடனே கூடி ஓரோசையால் இனிதாகிய பாட்டினைப் பாடுவர் விறலியர் என்பதை,

**மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்**

**நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்**

**கடவ தறிந்த வின்குரல் விறலியர். (மலை. 534-536)**

என்னும் அடிகளில் மலைபடுகடாம் பதிவு செய்துள்ளது. மேலும் மருதப்பண்ணைப் பற்றிச் சிறுபாணாற்றுப்படை,

**‘மருதம் சான்ற மருதத் தண்பணை’ (சிறு. 186)**

என்று குறிப்பிடுகிறது.

**முழவு**

**முழவுமுகம் புலரா விழவுடை வியல்நகர் (அகம். 206:11)**

**மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்க (அகம். 76:1)**

என்ற இரண்டு அடிகளில் முழவினைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

**பறை**

**கறங்கு இசை வெரீஇப் (அகம். 266:18)**

மருதநில மக்கள் அரிப்பறையை வாசித்த செய்தி நமக்குக் கிடைக்கிறது.

**தண்ணுமை**

மருதநில மக்கள் தாங்கள் நடவு செய்த நெல்லை அறுவடை செய்யும்போது நெற்கதிர்களை உண்ணவரும் பறவைகளை ஓட்ட தண்ணுமை இசைக்கும் பண்பை உடையவர்கள் என்பதை,

**தண்ணுமை வெரீஇ (நற். 350:1)**

**மண்ஆர் முழவின் கண் அதிர்ந்து இயம்ப (அகம். 346:14)**

இசையோடு பின்னிப் பிணைந்து வாழ்க்கை நடத்திய மக்கள் தங்களுடைய அன்றாட வாழ்க்கையில் இசைக்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**ஊர்**

பிற நிலத்தைவிட அதிக முன்னேற்றம் கண்ட மருதநிலத்தில் ஊர்கள் நெருக்கமாக அமைந்திருந்தன. மருதநிலக்கூறுகளில் மன்றம், அம்பலம், ஊர், குடி ஆகியன காணப்பட்டன. இதில் ஊர் என்ற பெயரமைப்பே மிகுதியாகக் காணப்பட்டது.

**மீனொடு பெயரும் யாணர் ஊர (நற். 210:4)**

மருத நில வயற்பகுதிகளிலும் சோலை இடங்களிலும் அமைக்கப்பட்டிருக்கும் பரண்கள் 'இதணம்' என்று அழைக்கப்பட்டதை,

**எரிமருள் வேங்கைக் கடவுள் காக்குங்**

**குருகார் கழனியின் இதணம் (நற். 216: 6-7)**

என்ற பாடல் அடிகளால் அறியமுடிகிறது.

மருத நிலத்தில் வாழ்ந்தவரின் குடிகள் தென்னங்கீற்றுகள் வேயப்பட்ட கூரைகளை உடையவை. இவர்களது மனை முன்றில்களில் மஞ்சள் விளைந்திருக்கும். சுற்றிலும் பூந்தோட்டங்கள் நிறைந்திருக்கும் என்பதை,

**தண்டலை யுழவர் தனிமனைச் சேப்பிற் (பெரு. 355)**

என்ற அடிகள் மூலம் மருத நிலத்தில் ஊர்கள் வளமானதாகக் காட்டப்பட்டுள்ளதை அறிந்து கொள்ளலாம்.

நெல் முதலிய தானியங்கள் வீட்டின் முற்றத்தில் உலர்த்தும் வகையில் அகன்ற வாயிலை உடைய தனங்களாக வீடுகள் அமைக்கப்பட்டு இருந்தன என்பதை,

**அகல் நகர் வியன் முற்றத்து (பட்டின.20)**

எனும் அடிகள் மூலம் பட்டினப்பாலை உணர்த்துகிறது.

**நீர்**

**மருதத்துப் பெருந்துறை (ஐங். 31:3)**

**விரிபூம் பெருந்துறை (ஐங். 33:2)**

**துறைஎவன் அணங்கும்யாம் (ஐங். 53:1)**

**பொய்கைப் பூத்த (ஐங். 34:2)**

**பொய்கை ஆம்பல் (ஐங். 35:2)**

**பொய்கையைப் பற்றி (ஐங். 41:2, 44:1, 61:2, 63:1, 70:3, 81:3, 88:1)**

என்ற ஐங்குறுநூற்று அடிகள் மூலம் நீர்நிலைகளின் சிறப்பை அறிந்து கொள்ள முடிகிறது.

**உரிப்பொருள்**

ஒரு பாடலின் அடிக்கருத்தாக அமையும் உரிப்பொருள் அகப்பாடல்களில் முதன்மைப் பெறுகிறது. இப்பொருளை முதன்மைப்படுத்தியவர்களில் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் முக்கியமானவர்களாகக் கருதப்படுகின்றார்கள்.

ஒவ்வொரு திணையில் வாழும் மக்களின் ஒழுக்கத்தைப் பற்றிக் கூறுவது உரிப்பொருள் ஆகும்.

**புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங்காலை திணைக்குரிப் பொருளே (தொல். பொருள். நூ. 14)**

ஒரு பாடலில் முதல், கரு, உரி என்ற மூன்றும் இடம்பெற்றால் பாடலின் திணையை அறிந்து கொள்வது எளிது. முதற்பொருள் இடம்பெறாத பட்சத்தில் கருப்பொருளைக் கொண்டும், கருப்பொருள் இடம்பெறாத பட்சத்தில் முதல் மற்றும் உரிப்பொருளைக் கொண்டும், முதல், கரு இரண்டும் இடம்பெறாத பட்சத்தில் உரிப்பொருளைக் கொண்டும் திணை மற்றும் பாடுபொருளை அறிந்துகொள்ள முடியும். மேற்கூறிய மூன்றில் உரிப்பொருள் இல்லாமல் பாடல் அமையாது.

இதற்கு மேலும் விளக்கம் தரும் வகையில் தெ.பொ.மீ. அவர்கள் ‘உரிப்பொருள் விளங்கக் கருப்பொருள் துணைசெய்யும் கருப்பொருளோடு உரிப்பொருளுக்குரிய தொடர்பை மேலும் விளக்க முதற்பொருள் உதவும் என்றாலும் உரிப்பொருள்தான் கதை, கதைக்குக் கால் உண்டு என்பார்கள் அந்தக் கால் போல் வருவனவே முதல் கருப் பொருள்களாம்’[18] என்று குறிப்பிடுகிறார்.

இலக்கண உரையாசிரியர் இளம்பூரணர் ‘உரிப்பொருளாவது மக்கட்கு உரியபொருள். அது அகம், புறம் என இரு வகைப்படும்’[19] என்று கூறுவார்.

மருதத்திணையில் ஊடலும் ஊடல் நிமித்ததையும் கொண்டு பாடல்கள் பல எழுதப்பட்டுள்ளன. தலைவியைவிட்டுத் தலைவன் பரத்தையிடம் சேர்ந்து நீராடிவிட்டுத் திரும்பும்போதும், பரத்தையின் இல்லத்திற்குச் சென்று தன் இல்லத்திற்கு வரும்போதும் தலைவி தலைவனிடம் ஊடல் கொள்கிறாள். இந்த ஊடல் நீண்ட நேரம் நிலைத்து இருப்பதில்லை. விருந்தினர் வரவாலும் வாயில்களாலும் தீர்க்கப்படுவதாக மருதத் திணையில் அமைந்துள்ளது.

**திணை மயக்கமா?**

மயக்கம் என்ற சொல்லுக்குக் கலத்தல், கலவை எனப் பொருள் கொள்ளப்படுகிறது. ஒரு திணைக்குரிய கருப்பொருள் மற்றொரு திணையில் வந்தால், உடனே அது மயக்கம் என்று எண்ணிவிடக் கூடாது. பாட்டில் வரும் உரிப்பொருளை வைத்தே மயக்கத்தை ஊகிக்கமுடியும். இதற்கு விளக்கம் தரும் வகையில் ‘திணை மயக்கத்தில் இரண்டு திணைக்கூறுகள் தம்முள் கலந்து நிற்கும். உரிப்பொருளைப் பாடற்பொருளாக விளக்கும் போது இரண்டு திணைகளுக்குரிய உரிப்பொருள்கள் கலந்து ஒரு பாட்டில் வரமுடியாது.

எனவே இரண்டு உரிப்பொருள்கள் தம்முள் மயங்கிவரும் என்றால் பொருந்தாது. ஆனாலும் முதலும் கருவும் ஒரு திணைக்குரியவாகவும் உரிப்பொருள் பிறிதொரு திணைக்குரியதாகவும் அமையலாம்.'[21] என்று பா. அருணாசலம் குறிப்பிடுகிறார்.

**உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே (தொல்.பொருள்.நூ.13)**

ஐந்து திணையிலும் உரிப்பொருள் மயங்காமல் முதல் மற்றும் கருப்பொருள் மயங்கி வரலாம். அவ்வாறு மயங்கி வரும்பொழுது நிலங்கள் தம்முள் மயங்குதல் இல்லை என்பதை,

**நிலன் ஒருங்கு மயங்குதல் இன்றென மொழிப (தொல்.பொருள்.நூ.12)**

என்று தொல்காப்பியர் தெளிவாகக் கூறியுள்ளார்.

மருதத்தில் பூவும் பறவையும் ஒரு சில மயங்கி வருவதைப் பாடல்கள் காட்டுகின்றன.

**பூ**

**மணிநில நெய்தல் (ஐங்.96:2)**
**நெய்தலொடு நீடிய (கலி.75:1)**
**அரும்பு அவிழ்நறுமுல்லை (கலி.66:6)**
**பூத்த முல்லையொடு (அகம்.216:9)**

**மரம்**

**கொய்த ஞாழலும் (அகம்.216:7)**

நெய்தல் நிலத்திற்குரிய நெய்தல் பூவும், ஞாழல் மரமும், முல்லைநிலத்திற்குரிய முல்லைப்பூவும் மருதத்தில் வந்துள்ளதால் அந்நிலத்திற்குரிய பொருள்களாகவே கருதப்படும்.

**மயில்**

**அணிமயில் இருக்கும் (ஐங்.8:4)**
**புன்தலைப் பேடை விரிநிழல் அகவும் (ஐங்.62:2)**
**வெரீஇப் பறந்த தோகை (அகம்.266:18)**

**மடக்கண்ண மயில்ஆல (பொருந.190)**

**கிளி**

**ஊடும் மென் சிறுகிளி (கலி.72:4)**

குறிஞ்சித்திணைக்கு என்று வரையறை செய்து கூறிய மயில், கிளி, மருதத்தில் வந்துள்ளது. இதனை மருதத்தின் கருப்பொருளாகவே கொள்ளவேண்டும்.

**சம்பங்கோழி**

**நீர்உறைகோழி (ஐங்.51:1)**

**பழனக் கம்புள் (ஐங்.60:1)**

**வெண்நுதல் கம்புள் (ஐங்.85:1)**

**சேவல்**

**கணம்கொள் சேவல் (குறுந்.107 : 2)**

முல்லை நிலத்திற்குரிய கோழி வகைகள் மருதத்தில் வந்துள்ளன.

திணை மயக்கத்திற்கு மேலும் விளக்கம் தரும் வகையில் கருப்பொருள்களில் பூவும், பறவைகளும் அதிகம் மயங்கி வரும் என்பதை,

**எந்நில மருங்கின் பூவும் புள்ளும்**

**அந்நிலம் பொழுதொடு வாராஆயினும்**

**வந்த நிலத்தின் பயந்த வாகும் (தொல்.பொருள்.நூ.19)**

இந்தத் திணைக்கு என்று வரையறுத்துக் கூறப்பட்ட பூவும் பறவைகளும் பிற நிலங்களில் வந்தாலும் அந்நிலத்தின் கருப்பொருளாகவே கொள்ளப்பெறும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

புலவர்கள் பாடல் பாடிய காலத்தில் தங்கள் நிலத்தில் உள்ள பொருட்களை வைத்துப் பாடல் புனைந்தனர். தொகுக்கப்பட்ட காலத்தில் அதில் உள்ள பெரும்பான்மையான பொருட்களைக் கொண்டு, இது இந்தத் திணையைக் கொண்டது

என்று பிரித்தனர். எனவே தொகுப்பு முறையை வைத்துக் கருப்பொருளை ஆய்தல் முடியாது என்பது தெளிவாகத் தெரிகிறது.

## தொகுப்புரை

- சங்கப் பாடல்கள் தொகுக்கப்பட்ட காலத்தில்தான் அவைகளுக்கான திணை, துறை, கூற்று, பாடினோர், பாடப்பட்டோர் முதலிய விளங்கங்கள் குறிக்கப்பட்டன.
- ‘திணை’ என்பதற்கு உரையாசிரியர்களும் அறிஞர்களும் பல விளங்கங்களைத் தருகின்றனர். சங்க இலக்கியத்தில் ‘திணை’ என்ற சொல் குடி, ஒழுக்கம், இனம், நிலம், இல்லம், திண்ணை முதலிய பதினெட்டு இடங்களில் பயின்று வந்துள்ளது.
- மக்களின் அகஒழுக்கத்தையும் புறஒழுக்கத்தையும் அகத்திணை, புறத்திணை என்று வரையறை செய்து கூறியுள்ளனர் என்பது தெளிவாகத் தெரிகிறது.
- ஒரு நிலத்தில் இருந்து மற்றொரு நிலத்திற்குச் சென்ற காரணத்தை அறிந்து கொள்ள முடிகிறது.
- பல சிறப்புகள் பொருந்திய மருதநிலம் ஐவகை நிலங்களிலும் உயர்வாகக் கருதப்படுகிறது.
- மருதத்தின் முதல், கரு, உரிப்பொருட்களைப் பற்றிப் பாடல்கள் வழி அறிந்து கொள்ள முடிகிறது.
- அக இலக்கியங்களில் கருப்பொருள்கள் வேறுபடும் விதத்தை அறியமுடிகிறது.

- தொகுப்புமுறையை வைத்துக் கருப்பொருளை ஆய்தல் இயலாது என்பது தெளிவாகிறது.
- முதல், கரு, உரியில் உரிப்பொருளே முதன்மைப் பெறுவதையும் இதை அடியொற்றி முதற்பொருளும் கருப்பொருளும் அமைவதையும் அறியமுடிகிறது.
- சிறுபொழுதுகள் வைகறையும் விடியலும் ஏன் மருதத்திற்கு வைக்கப்பட்டுள்ளது என்பதை அறிஞர்களின் கூற்றில் இருந்து அறிந்து கொள்ள முடிகிறது.
- மருத நிலத்தில் காஞ்சி, மருதம், வஞ்சி, மா மரங்கள் இருந்ததை அறிந்து கொள்ள முடிகிறது.
- மருத நிலத்தில் நாரை, குருகு, அன்னம், கிளி, சம்பங்கோழி, கொக்கு, சேவல் போன்ற பறவைகள் இருந்ததை அறிந்து கொள்ள முடிகிறது.
- மருத நிலத்தில் தாமரை, நெய்தல், நீலம், ஆம்பல், அல்லி, நெருஞ்சி, குவளை, நீலமலர், அனிச்சம் பூ, நரவம் பூ, முல்லைப் பூ, ஞாழல் எனப் பல வகையான பூக்கள் இருந்ததை அறிய முடிகிறது.
- மருத நிலத் தலைமக்களாக ஊரன், மகிழ்நன், கிழவன், கிழத்தி, மனையாள், உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் எனப் பலர் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.
- எருமை, நீர்நாய் போன்ற விலங்குகளும் மீன், ஆமை, முதலை, நண்டு போன்ற கடல்வாழ் உயிரினங்களும் மருதத் திணையில் இருந்ததை அறிய முடிகிறது.
- பிற நிலத்தைவிட அதிக முன்னேற்றம் கண்ட மருத நிலத்தில்ஊர்கள், நெருக்கமாக அமைந்திருந்தன. மருதநிலக் கூறுகளில் மன்றம், அம்பலம், ஊர், குடி ஆகியன காணப்பட்டன. இதில் ஊர் என்ற பெயரமைப்பே மிகுதியாகக் காணப்பட்டதை அறிய முடிகிறது.
- ஒரு பாடலில் முதல், கரு, உரி என்ற மூன்றும் இடம்பெற்றால் பாடலின் திணையை அறிந்து கொள்வது எளிது. முதற்பொருள் இடம்பெறாத பட்சத்தில் கருப்பொருள் மற்றும் உரிப்பொருளைக் கொண்டும், கருப்பொருள் இடம்பெறாத பட்சத்தில் முதற்பொருள் மற்றும் உரிப்பொருளைக் கொண்டும் திணை மற்றும்

பாடுபொருளை அறிந்து கொள்ள முடியும். மேற்கூறிய மூன்றில் உரிப்பொருள் இல்லாமல் பாடல் அமையாது.

- ஐந்து திணையிலும் உரிப்பொருள் மயங்காமல் முதல் மற்றும் கருப்பொருள் மயங்கி வரலாம். அவ்வாறு மயங்கி வரும்பொழுது நிலங்கள் தம்முள் மயங்குதல் இல்லை என்பதை அறிய முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**


1. தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்.6, நச்சினார்க்கினியர் உரை, ப.20
2. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகாதி, ப.1874
3. க.நெடுஞ்செழியன், சங்க இலக்கியக் கோட்பாடுகளும் சமய வடிவங்களும், ப.97
4. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் – வரலாற்றுப் புரிதலை நோக்கி, ப.4
5. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழ் இலக்கிய வரலாறு, ப.17
6. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.147
7. Tamil Lexicon, Vol – IV
8. ந.சஞ்சீவி, உணர்வின் எல்லை, ப.124
9. அ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1268
10. நச்சினார்க்கினியர் உரை, பட்டினப்பாலை, 239 – 242
11. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ.), தொல்காப்பியம் இளம்பூரணம், (மு.கு.நூ.), ப.22
12. மு.அருணாசலம், அகத்திணையியல் உரைவளம், (மு.கு.நூ.), ப.52
13. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.38

14. வ.சுப.மாணிக்கம், The Tamil Concepet of Love, P.126
15. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்,ப.35
16. க.நெடுஞ்செழியன், சங்க இலக்கியக் கோட்பாடுகளும் சமய வடிவங்களும், ப.115
17. திவாகர நிகண்டு (ப.ஆ.), சு.இலம்போதரன், ப.42
18. சா.சிவமணி, சங்க அகத்திணைக் கோட்பாட்டு நோக்கில் தமிழ் மலையாள நெய்தல் நில நாவல்கள், ப.41
19. தெ.பொ.மீ., தமிழ் இலக்கிய வரலாறு – சங்ககாலம், ப.75
20. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, ப.2
21. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.165

# இயல் – 2

## சமூகக் கட்டமைப்பு

வீரயுகம் எனக் கருதப்படும் சங்ககாலச் சமூகம் நாகரிக நிலையும் வர்க்க ஆக்கமும் நிகழ்ந்து கொண்டிருந்த சமூகம் எனக் கொள்ளப்பட்டால் அதற்கு முந்தைய அநாகரிக சமூகம் துவக்ககால காட்டுமிராண்டி சமூகமும் பற்றி அறிய பிற தொல்லியல் மானுடவியல் சான்றுகளையே நாட வேண்டியுள்ளது. ஆனாலும் மாற்றமடையும் குலமரபின் எச்சங்களையும் தாய்வழிச் சமூகத்தின் அழிவையும் வர்க்க சமூகத்தின் தோற்றத்தையும் உள்ளடக்கியதாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன.

ஐவகைச் சமுதாய மக்களும் ஒருவரோடு ஒருவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். இதனால் தமது தேவைகளை எளிதில் நிறைவேற்றிக் கொண்டனர். நிலத்தின் தன்மைக்கு ஏற்பப் பொருள் உற்பத்தி, தொழில் ஆகியவை மாறுபட்டுள்ளன.

முல்லைநிலச் சமூகத்தின் வளர்ச்சியானது மருதநில வளர்ச்சிக்கு வித்தாகியது. கால்நடை வளர்ப்பை மையமிட்ட வாழ்க்கையில் தோன்றிய வர்க்க வேறுபாடு மருதநிலச் சமூகத்தில் வளர்ச்சி அடைந்தது. அவ்வளர்ச்சிக்குத் தனி சொத்துடைமைதான் அடிப்படையாக இருந்தது.

உலகச் சமுதாய வரலாற்றில் இனக்குழு சமுதாயத்திற்கும் நிலவுடைமைச் சமுதாயத்திற்கும் இடையில் அடிமையுடைமைச் சமுதாயம் நிலவியுள்ளது. ஆனால் தமிழ்ச் சமுதாயத்தில் மட்டும் அடிமைவுடைமைச் சமுதாயம் என்பது தோன்றவில்லை என்று அறிஞர் கூறுகின்றனர். ஆனால் அடிமையர் இருந்திருக்கின்றனர் என்பதை ‘மேலை நாடுகளைப் போல உரிமை முற்றும் பறிக்கப்பட்ட அடிமையாக நடத்தப்படாது செல்வக்குடியினரைச் சார்ந்து வாழ்வோராகவும் இருந்துள்ளனர்.’[1] என்பதை சி. கலைமகள் கூறுகிறார்.

‘சோஸியஸ்’ என்ற உரோமானியச் சொல் ‘சொஸைடி’ என்ற சொல்லுக்கு வேராக அமைந்தது. இது நட்பு அல்லது சேர்க்கை என்ற பொருளைத் தரும் சமூகம் அல்லது சமுதாயம் இதற்கு நேர் மொழிபெயர்ப்பு ஆகும்.

ஒரு நோக்கத்திற்காக ஒன்று கூடுகின்ற மக்களைக் கூட்டம் என்று கூறுவதுபோல் ஒன்றுகூடி வாழ்கின்ற மக்களையும் கூட்டம் என்றனர். இவர்களைச் சமுதாயம் என்ற சொல்லாலும் குறிப்பிட்டனர். சமூகம், சமுதாயம், குழு, கூட்டம் என்பவை ஒரு பொருளுடையன. இத்தகைய சமூகம் பற்றியும் சங்க இலக்கியத்தில் மருதத்திணையில் சமூகம் எவ்வாறு ஒன்றுகூடி வாழ்ந்தனர் என்பதைப் பற்றியும் தலைவன் தலைவிக்கு இடையே நிகழும் களவு – கற்பு வாழ்க்கைப் பற்றியும் பிறநில மக்களின் தொடர்பைப் பற்றியும் ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**சமூக விளக்கம்**

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மனித சமூகத்தின் சரித்திரத்தை மூன்று கட்டங்களாகப் பிரிக்கிறார்கள். அவை,

1. காட்டுநிலை (Savagery)
2. காட்டு மிராண்டி நிலை (Barbarism)
3. நாகரிக நிலை (Civilization)

என்பனவாகும்.

காட்டுநிலை மற்றும் காட்டுமிராண்டி நிலையிலும் வாழ்ந்த மனிதன் ஓர் இடத்தில் நிலைத்துத் தங்க முடியாமல் உணவிற்காகவும், பிற தேவைகளுக்காகவும், அலைந்து திரிந்து கொண்டு இருந்தான். நாகரிக நிலையில் நீர்வளம் உடைய பகுதியில் தங்கி தன் வாழ்க்கையின் தரத்தை உயர்த்திக் கொண்டான்.

சக்கரத்தின் கண்டுபிடிப்பு நாகரிக நிலையில் முக்கியப் பங்கு வகித்தது. சக்கரத்தை வண்டியில் பூட்டி ஓர் இடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்குப் பொருட்களை ஏற்றிச் சென்றான். ஓர் இடத்தில் கூட்டாக வாழ்ந்த காலம் நாகரிக நிலையின் காலமே ஆகும்.

சமூகம் என்பது குழுவாகவும் கூட்டமாகவும் வாழும் மக்கட்தொகுதியாகும். மக்கள் தம் நலத்திற்காகவும் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவும் குறைகளைப் போக்கிக் கொள்ளவும் தற்பாதுகாப்புக்காகவும் தம் இன வளர்ச்சி மற்றும் பெருக்கத்திற்காகவும் கூடி வாழ்கின்றனர். இவ்வாறு 'ஒருவரோடொருவர் ஒருவரோடு பலர், பலரோடு பலர் எனத்

தம்முள் தொடர்பும் உறவும் பரிமாற்றமும் கொள்ளும்போது அம்மக்கட் கூட்டம் சமூகம் எனும் பெயரையும் பகுப்பையும் கொள்கின்றது'[2] என்று அன்னிதாமசு குறிப்பிடுகிறார்.

சமூகம் என்பது பின்வருமாறு வரையறுக்கப்படுகிறது. 'சமூகம்' (Social) என்பது மிகப்பெரிய மக்கள் குழு தனக்கென்று ஒரு குறிப்பிட்ட பண்பாட்டைக் கொண்டது. தானே வளரும் ஆற்றல் உடையது. இந்த மனிதக்குழு தனக்கு வேண்டியவற்றை நிறைவு செய்து கொள்ளும் ஆற்றலுடையது. ஒவ்வொரு தனிமனிதனும் சமூகத்தில் அதன் உறுப்பாக இருக்கிறான் உறுப்புச் சிறப்படையும்போது முழுப்பொருளாகிய சமூகமும் சிறப்பெய்கிறது. எனவே தனிமனிதன் சமூகப் பொருளாதாரப் பண்பாட்டுத் தளங்களில் உயர்வடையச் செய்ய வேண்டியுள்ளது.'[3] கலைக்களஞ்சியத்தில் பின்வருமாறு விளக்கம் தரப்பட்டுள்ளது. 'ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பு'[4] என விளக்கம் தரப்படுகிறது.

மற்றொரு களஞ்சியமான வாழ்வியற் களஞ்சியம் 'தம்மைப் பேணிப் பாதுகாத்துக் கொள்வதற்கும் அழியாமல் நிலைநிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு மானிடக்குழு சமூகம் எனப்படும்'[5] என்று குறிப்பிடுகிறது.

மனிதனாகப் பிறந்தவன் பிறரின் செயல்களை உணர்தலே சமுதாயம் 'இந்த உயர்வு என்று தோன்றியதோ அன்றே சமுதாயம் தோன்றிவிட்டது'[6] என்கிறார் அ. மு. பரமசிவானந்தம்.

சமூகம் என்பது மனிதக் கூட்டம் என்ற பொருளில் கு.வெ. பாலசுப்பிரமணியன் 'சம்' என்ற வடமொழி வேறிலிருந்து தோன்றி சமூகம் சமுதாயம் ஆகிய இரு சொற்களுமே மனிதக் கூட்டம் என்ற பொருளுடையது'[7] என்கிறார். மேலும் அவரே 'சமூகம் என்பது ஒரு வரையறுத்த தொடர்ச்சியான வாழ்க்கை முறை அல்லது ஒத்த பயன்பாட்டைப் பெற்ற தமக்குள் ஒற்றுமையுடையவராக வாழும் மக்களைக் கொண்டது'[8] என்று விளக்குகிறார்.

ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் (Community) எனப்படும். இது மக்கள் ஒன்று கூடி ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும்.

மனிதனால் தனித்து வாழமுடியாது. பல வழிகளில் குழுவுடன் இணைந்து வாழுகின்றான். ஆனால் உலகத்திலுள்ள அனைத்துக் குழுக்களிலும் அவன் உறுப்பினராக வாழ இயலாது. வரையறுக்கப்பட்ட ஓர் எல்லைப் பகுதியில் அவனுக்கு அருகில் வாழுகின்ற மக்களுடன் மட்டுமே உறவுகளை வைத்துக் கொள்ள இயலும். எனவே ஒரு குறிப்பிட்ட எல்லைப் பகுதியில் மிகுதியான காலம் வாழுகின்ற மக்கள் பொதுவான சமூகக் கருத்துகள், பரம்பரைப் பழக்கங்கள், ஒருவரோடொருவர் தோழமை உணர்வுடன் பழகுதல் போன்ற பல சமூகப் பண்புகளை வளர்த்துக் கொள்ளுதல் தவிர்க்க முடியாததாகிறது. இவ்வாறான சமூக வாழ்க்கையும் குறிப்பிட்ட பொதுவான பகுதியுமே சமுதாயத்தை உருவாக்குகின்றன.

**இனக்குழு உருவாக்கம்**

ஒரே இடத்தில் வாழ ஆரம்பித்த மனிதன் தங்களுக்குள் குழுக்களாக வாழலானான். நிலம் மற்றும் பெண் என்ற இரண்டு உடைமைப் பொருட்களும் ஆதிகாலச் சமூகத்தில் இன்றியமையாததாயின. இக்காலத்தில் சுதந்திரமாக வாழ்ந்த சமூகத்தையே நாம் பார்க்க முடிகிறது. எந்தவொரு ஆணும் எந்தவொரு பெண்ணுடனும் உடலுறவு வைத்துக் கொள்ளலாம். எந்தவிதக் கட்டுப்பாடும் இன்றி வாழ்ந்தனர். நிலவுடைமைக் காலத்தில் தனிச் சொத்துடைமை என்று வந்தபோது இந்த ஆணுக்கும் இந்தப் பெண்ணுக்கும் பிறக்கும் குழந்தைக்கே சொத்து என்பது முன்வைக்கப்பட்ட போது மனிதன் ஒரு கட்டுக்குள் வைக்கப்பட்டான். அத்தகைய மனிதன் தன் தேவைக்காகவும், பாதுகாப்புக்காகவும் மற்றவர்களைச் சார்ந்து வாழும்போது பல வகையான உறவுகள் பல நிலைகளில் பல அளவுகளில் ஏற்படுகின்றன. இவ்வாறு பிறரோடு பழகும் பொழுதும் கூடிவாழும் பொழுதும் ஏற்படும் உறவுகள் குழு உறவாக மாறியது. இதற்கு மேலும் விளக்கம் அளிக்கும் வகையில் பக்தவச்சல பாரதி 'மக்கள் எண்ணிக்கையில் பெருகியதாலும் ஓரிடத்தில் நிலையாக வாழ முற்பட்டதாலும் உணவுப் பொருள்களை மறுபங்கீடு செய்யும் முறை (Redistribvtive System) ஏற்படுகிறது. இதற்குக் காரணங்கள்

பல மக்கள் முதன்முதலில் குழு குழுக்களாக (Bounds) வாழ்ந்தபோது தொன்மவியல் அடிப்படையிலான குடிவழி (Mythical Genealogy) மூலம் அந்தந்தப் பகுதிகளில் வாழ்ந்தவர்கள் ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்வு இருந்தது. ஆனால் மக்கள் ஓரிடத்தில் நிலையாகத் தங்க முற்பட்டதன் தொன்மவியல் சாராமல் முறைப்படியாக உறவுக் கூட்டங்களை அடையாளம் காண முடிந்தது.'[9] என்று குறிப்பிடுகிறார். வேட்டை சமுதாயத்திற்குப் பின் சில பகுதி மக்கள் விவசாயத்தைக் கண்டுபிடித்தனர். இவ்விரண்டில் ஏற்பட்ட முன்னேற்றம் காரணமாக இனக்குழு வாழ்க்கைமுறை தொடங்கியது. இதற்கு மேலும் விளக்கம் அளிக்கும் வகையில் நா.வானமாமலை 'இங்குக் குழு வாழ்க்கை அழிந்து, அரசு தோன்றியது பிற மக்களையும் அரசில் இணைத்துக் கொள்ளப் பல போர்கள் நிகழ்ந்தன. ஒவ்வொரு குழுவாக அழிந்து குழு வாழ்க்கையை இழந்த மக்கள் மருதநில மக்களின் உழைப்பாளிகளாயினர்'[10] என்று குறிப்பிடுகிறார்.

**குழுக்கள் ஒரே இடத்தில் நிலைத்து இருத்தல்**

ஒரு சமூகக் குழுக்கள் மற்றொரு சமூகக் குழுவோடு சென்று பழக எந்தத் தடையும் இல்லை. இருப்பினும் எளிதில் ஓரிடமிருந்து வேறொரிடம் செல்ல வசதியின்மை மற்றும் பழகிய இடங்களை விட்டுப்பிரிந்து செல்ல விருப்பமின்மை ஆகிய காரணங்களால் சமூகக் குழுக்கள் ஒரே இடத்தில் நிலைத்துவிட்டன.

**சமுதாயம்**

சமூகவியல் சமுதாயம் என்பதற்கு ஒரு தனிப் பொருள் உண்டு. இது சமூகக் குழுக்களில் ஒரு முக்கியமான பிரிவாகச் சொல்லப்படுகிறது. மெக்ஈவர் (MacIver) ஆர்னால்டு கிரீன் (Aronld Green) ஆகிய சமூகவியல் அறிஞர்களும் இதனை நன்கு விளக்கியுள்ளனர். கிங்சுலீ தேவிசு (Kingsley Davis) என்ற அறிஞர் சமுதாயம், சமூக வாழ்க்கையின் அனைத்து நிலைகளையும் கொண்டிருக்கின்ற சிறிய நிலப்பகுதியிலுள்ள குழுவைக் குறிப்பதாகக் கூறுகிறார். எனவே ஒரு நிலப்பகுதியில் மக்கள் கூடி வாழும் போது அவர்கள் ஒரு சமுதாயத்தை அமைக்கிறார்கள் என்பது தெளிவாகிறது. 'ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொழுது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் – Community எனப்படும்.'[11] இது மக்கள் ஒன்றுகூடி ஒன்றுபட்ட

எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும் சமுதாயம் சமூகத்திற்குள் அடங்கிவிடும்.

**குடும்பம்**

குடும்பம் என்பது ஆண் – பெண் பாலுறவை நெறிப்படுத்த அமைக்கப்பட்ட ஓர் அமைப்பாகும். ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உண்டாகிற வாரிசையும் சேர்த்துக் குடும்ப அமைப்புக்குள் அடக்கலாம். இக்குடும்ப அமைப்பு சமுதாயத்தில் கட்டுப்பாடுகள் நிறைந்த காலத்தில் தோன்றியிருக்கக் கூடும் என்று வரையறுப்பர். இக்காரணத்தை முன்னிட்டே திருமணம் என்ற அமைப்பு முறையும் தோன்றி பாலுறவை நெறிப்படுத்த அமைக்கப்பட்டு இருத்தல் வேண்டும். ‘சங்க இலக்கியத்தில் குடும்பம் என்ற சொல்லமைப்பு இல்லை. குடி என்ற சொல்லே பயின்று வருகின்றது. இச்சொல் குடும்பம் என்ற பொருளில் 73 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏனைய பொருட்கள் குறைவான இடங்களிலேயே காணப்படுகின்றன’[12] என்று சங்க இலக்கியத்தில் குடும்பம் பற்றிய செய்தியை அழகம்மை குறிப்பிடுகிறார்.

‘கடும்பு’ என்ற சொல்லே கூட்டு வாழ்க்கையைக் குறித்து நின்றதையுணர முடிகிறது. ‘கருங்கலை கடும்பு ஆட்டு வருடையொடு தாவன உகளும்’ (நற். 119:7) இதில் மலையாட்டினத்தின் கூட்டுவாழ்வைக் ‘கடும்பு’ எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு (குறள். 1029)**

என்ற குறளிலே குடும்பம் என்ற சொல் முதலில் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காணலாம்.

குடும்பம் என்பதைக் குறிக்க ஆங்கிலத்தில் பேமிலி (Family) என்னும் சொல் வழங்குகிறது. பேமிலி என்பதற்கு Cencise Oxford Dictionary ‘ஒரு வீட்டோடு நெருங்கிய தொடர்புடைய உறுப்பினர், பெற்றோர், பிள்ளைகள், வேலையாட்கள் முதலியோர்’[13] எனப் பொருள் கூறுகிறது. Cambridge International Dictionary ‘பெற்றோர் அல்லது பெற்றோர்களும் அவர்களது பிள்ளைகளும் அல்லது பெற்றோர் உடன்பிறந்த ஆண்கள்,

பெண்கள் சில சமயங்களில் பாட்டன், பாட்டி, மாமா, அப்பாவின் உடன்பிறந்தோர் அவர்தம் மனைவியர் அத்தைகள் ஆகியோர் அடங்கிய சமூகக் குழு'[14] என்று கூறுகிறது.

மனிதனுடைய தனித்த அடையாளம் குடும்பமாகும். இதில் இரத்தவழி உறவுகள் சேர்ந்து வாழ்கின்றனர் என்பதை 'மனித நாகரிகத்தின் விழுமிய அடையாளம் குடும்பமாகும். குருதிவழி உறவினர் சேர்ந்து வாழ்தலும் கூட்டுறவுப் பாங்கில் பொருளாதார முயற்சிகளில் ஈடுபடுதலும் குடும்பம் என்னும் சமூக அமைப்பின் செயல்முறைகள்'[15] என்று விக்டர் பார்னோ குறிப்பிடுகிறார்.

குடும்பத்தின் படிநிலை வளர்ச்சியை எங்கெல்ஸ் பின்வருமாறு கூறுகிறார். 'மனித நாகரிக வளர்ச்சிப் படிநிலையில் காட்டுமிராண்டி நிலையில் குழுமணமும் அநாகரிக நிலையில் ஒருதாரமண முறையும் இருந்தன'[16] என்று எங்கெல்ஸ் குறிப்பிடுகிறார்.

ஒரு சமூகம் வலிமையானதாக இருக்க வேண்டும் எனில் குடும்பம் என்ற அமைப்பு வலிமையானதாக இருக்க வேண்டும். குடும்பம் என்ற அமைப்பில் பெண் ஒரு முக்கியப் பங்குதாரராகவும் குடும்பத்தைக் கட்டமைக்க உரிமையுடையவளாகவும் விளங்குகிறாள். அத்தகைய பெண்ணைச் சொத்தை முதன்மையாகக் கொண்டு கற்பு என்னும் கட்டுப்பாட்டில் கொண்டு வந்தது முல்லை நிலத்தில்தான் என்பதை, 'முல்லை நிலத் தலைவியைப் பற்றிக் கூறும்போது புதல்வனுடைய தாயாக இருப்பதனால் சொத்துக் கையளிப்பு உறுதியாக்கப்படுகிறது. இதனால்தான் முல்லை சார்ந்த கற்பு வந்தது என்று சொல்ல வேண்டியுள்ளது. கணவனுடைய சொத்துக் கையளிப்பு அவனது குழந்தைகளுக்குச் செல்வதற்கு மனைவியினுடைய கற்பு இன்றியமையாததாகின்றது. உண்மையில் குடும்பம் என்கிற நிறுவன வாழ்க்கை முல்லையில் தொடங்குகிறது'[17] எனக் கார்த்திகேசு சிவத்தம்பி குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியரின் 'பின்முறை வதுவை' என்ற கூற்றிலிருந்து ஒருவனுக்குப் பல மனைவியர் உண்டு என்று தெரிகிறது. ஒருவனுக்குப் பல மனைவியர் ஒருத்திக்குப் பல கணவர் என்பது சமூகத் தொடக்க நிலைகள் என்பதை நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

**தாய்வழிக் குடும்பம்**

மக்கள் இனக்குழுவாக வாழ்ந்த காலத்தில் பெண்ணே அக்குழுவைத் தலைமையேற்று நடத்தினாள். இனக்குழுக் காலத்தை ஒட்டி வளர்ந்த சங்க காலத்திலும் தாய்வழித் தலைமை இருந்ததை,

**நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்**
**இரங்குகா ழன்ன திரங்குகண் வறுமுலைச்**
**செம்முது பெண்டின் காதல்அஞ் சிறாஅன் (புறம்.276 : 1-3)**

**மீனும் கொக்கின் தூவி யன்ன**
**வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன் (புறம். 277 : 1-2)**

**நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்தோள்**
**முளரி மருங்கின் முதியோள் சிறுவன் (புறம். 278 : 1-2)**

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் மூலம் அறியமுடிகிறது.

பிற்காலத்தில் தமிழ்ச்சமூகம் தாய்வழித் தலைமையிலிருந்து தந்தைவழித் தலைமைக்கு மாறியது.

**தனிக்குடும்பம்**

தலைவனும் தலைவியும் உடன்போக்கில் பிரிந்து சென்ற இடத்தில் திருமணம் முடித்துத் தனிக்குடித்தனமே மேற்கொண்டுள்ளனர். கூட்டுக்குடும்பக் காட்சிகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. தனிக்குடும்ப நெறி மிகுதியாகப் போற்றப் பெற்றதை உடன்போக்கும் மனையறம்படுத்தும் முறைமையும் விளங்குகின்றன. கூட்டுக் குடும்பத்தைவிடத் தனிக்குடும்ப முறையே அதிகம் காணப்பட்டது என்பதை 'பாட்டான் பாட்டி ஆகிய உறவின் முறைகளும் மாமன், மாமி, அத்தை ஆகிய குடிவழி உறவுகளும் சங்க இலக்கிய ஆட்சிப் பெறாமையை நோக்க அக்காலத்தில் கூட்டுக்குடும்ப முறையைவிடத் தனிக்குடும்ப முறையே போற்றப்பட்டது என்பதறியலாம்'[18] என்று கு.வெ. பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

தனிக்குடும்பத்தின் சூழலை மருதத்திணைப் பாடல் காட்சிப்படுத்தியுள்ளது. தலைவன் தலைவிக்கு இடையே அவர்களுடைய புதல்வன் உறங்கும் காட்சியையும் தலைவன் பரத்தையர் பிரிவின் பொருட்டுச் சென்றபோது தனிமையால் துயருற்றத் தலைவி தன் புதல்வனோடு உறங்கும் காட்சியையும்,

**புதல்வற் றழீஇயினன் விறலவன்**

**புதல்வன் றாய்அவன் புறம்கவைஇ யினளே (குறு. 359: 5-6)**

எனும் பாடல் விளக்குகிறது. இதன் மூலம் தனிக்குடும்ப அமைப்பை அறிந்துகொள்ள முடிகிறது.

தொடக்கத்தில் இனக்குழுவாக வாழ்ந்த மனிதனுக்கு இயற்கைப் பொருள்களைத் தாங்கள் மட்டுமே பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற சுயநல எண்ணம் தோன்றியது. அதனால் ஒரு பகுதியில் வாழ்ந்த மக்களுக்கும் பிறதொரு பகுதியில் வாழ்ந்த மக்களுக்கும் சண்டை ஏற்பட்டது. சண்டை ஏற்படாமல் தடுக்கத் தனிக்குடும்பமாகப் பிரிந்து வாழ்ந்தனர். இதுவே பின்வந்த காலங்களில் நிலைத்துவிட்டது தலைவன், தலைவி ஆகியோரின் வாழ்க்கையை விளக்கும் வகையிலே சங்க இலக்கியத்தின் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளது. அவர்களின் காதல் வாழ்க்கை, அவர்களிடையே நிகழும் ஊடல், தலைவியின் விருந்து உபசரிப்பு, தலைவன் தலைவியைவிட்டுப் பிரிந்துசெல்லுதல் பரத்தையர் தொடர்பு போன்ற பல செயல்கள் மருதத்திணையில் சிறப்பாகக் காட்சிப்படுத்தியுள்ளது. எனவே குடும்ப உறவுகள் பற்றிய விரிவான செய்திகள் எதுவும் இடம்பெறவில்லை என்பதைச் ‘சங்கப் பாடல்கள் தலைவன் தலைவி எனும் இளந்தலைமுறை பற்றிய காதலைப் பாடுவனவாகவே உள்ளன என்பதனால் குடும்ப உறவுகள் பற்றிய விரிவான செய்திகள் அவற்றில் இடம்பெறவில்லை’[19] என்று பெ. மாதையன் குறிப்பிடுகிறார்.

சங்க கால வாழ்க்கையை களவு, கற்பு என இரண்டாகப் பிரித்தனர். அதாவது களவு என்பது திருமணத்திற்கு முன் நிகழும் காதல் வாழ்க்கையாகும். கற்பு என்பது திருமணத்திற்குப் பின் நிகழும் இல்லற வாழ்க்கையாகும்.

**களவு வாழ்க்கை**

அன்பின் ஐந்திணையில் களவு எனப்படும் ஒழுக்கம் சான்றோர்களால் வகுத்துக் கூறப்பட்ட வேதத்தில் வரையறுக்கப்பட்ட திருமண நிலைகள் எட்டில் காந்தர்வ வழக்கத்தைப் பற்றிச் சொல்கிறது என்பதை,

**அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவ**

**அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்**

**கந்தருவ வழக்கம் என்மனார் புலவர் (இறை.அகப்.நூ.1)**

என்று இறையனார் அகப்பொருள் விளக்கம் கூறுகிறது.

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் ஒன்றுபடுத்தும் ஊழ்நிலையால் கண்டு காதல் கொள்கின்றனர் என்பதை,

**ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**

**ஒன்றிஉயர்ந்த பாலது ஆணையின்**

**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**

**மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே (தொல். பொருள். நூ.93)**

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**காதல் மலர்தல்**

சங்க இலக்கியத்தில் தினைப்புலம் காத்தல், கடல் நீராடல், சோலையில் தங்கல், சிற்றில் இழைத்து விளையாடல், குரவைக் கூத்து ஆடல் போன்ற நிகழ்வுகள் தலைவன் தலைவியின் இடையே களவு தோன்றக் காரணமாக இருந்தன. இக்களவு ஒழுக்கத்திற்குப் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி போன்றோர்கள் உதவி செய்தனர்.

தலைவன் மதங்கொண்ட யானையின் தாக்குதலில் இருந்தும், பொய்கையில் பூ பறிக்கும் பொழுதும் தலைவியைக் காப்பான். இங்ஙனம் தனக்கு உதவி செய்த தலைவனைத் தலைவி விரும்புவாள். அன்றுமுதல் அவர்களிடையே காதல் வாழ்வு தொடங்கும். காதலை வெளிப்படுத்த தலைவன் தலைவிக்குப் பரிசுப்பொருட்களைக் கொடுப்பான். குறிஞ்சித்திணையில் தினைப்புலம் காக்கும் தலைவிக்குப் பரிசு தருவதைப்

போல மருதத்திணையில் மாட்டை மேய்க்கும்போது தலைவன் வந்து தலைவிக்கு விருப்பத்துடன் தழைஆடையையும் மாலையையும் தருவான் என்பதை,

**தழையும் தாரும் தந்தனன் இவன்என**

**இழைஅணி ஆயமொடு தகுநாண் தடைஇ (நற். 80:5-6)**

இவ்வாறாகத் தலைவிக்கும் தலைவனுக்கும் காதல் மலர்ச்சி பெற்றதை நற்றிணை அடிகள் பதிவு செய்கிறது.

தலைவன், தலைவியிடையே சந்திப்பு அடிக்கடி நிகழ்கிறது. கோவிலும்கூட காதல் நிகழ்ச்சிக்கு நிலைக்களமாதலைக் கலித்தொகை சித்தரிக்கிறது.

**பேயும் பேயும் துள்ளல் உறும்எனக்**

**கோயிலுள் கண்டார் நகாமை வேண்டுவல் (கலி.94 : 38 - 39)**

என்று இருவரின் சந்திப்பைப் பதிவு செய்கிறது.

தலைவன் தலைவிக்கு இடையே நிகழும் காதல் வாழ்வைத் தோழி தலைவியிடம் நிகழும் வேறுபாட்டை வைத்து அறிந்து கொள்வாள். அத்தகைய மதிநுட்பம் கொண்ட தோழி தன்னைப் பற்றியோ, தன் விருப்பு வெறுப்புகளைப் பற்றியோ அவள் எடுத்துரைப்பதில்லை. எண்ணத்தாலும், சொல்லாலும் செயலாலும் தலைவியின் நல்வாழ்வுக்கெனவே அவள் தொண்டாற்றுவாள். அவளுடைய வாழ்நாளானது தலைவியின் வாழ்க்கையோடு ஒட்டியே அமைந்துள்ளன. தலைவியின் வாழ்க்கையின் சிறப்பையே கருத்தாகக் கொண்டதால் தன் வாழ்க்கைப் பற்றிக் கவலைப்படாதவளாகத் தோழி விளங்கினாள்.

தோழி, செவிலியின் மகளாதலால் தலைவி, தோழியுடன் கொண்ட நட்பு இளம்வயதிலேயே தொடங்கி இருவரும் ஒருவரே என்ற நிலைக்கு வளர்ந்து விடுகின்றது. இருவரும் ஒருவரையொருவர் பிரியாதிருந்த நிலையை,

**யாமே பிரிவின் றியைந்த துவரா நட்பின்**

**இருதலைப் புள்ளி னோருயி ரம்மே (அகம். 12: 4-5)**

எனும் அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. இத்தகைய தோழி, தலைவியின் உள்ளத்தைப் போற்றிக் காப்பதைத் ‘தலைவியின் குழந்தைப் பருவத்தில் அவள் உடலைப் போற்றி வளர்ப்பவள் செவிலித் தலைவியின் இளமைப் பருவத்தில் அவள் உள்ளத்தைப் போற்றிக் காப்பவள் தோழி’[20] என்று பாஸ்கரதாஸ் குறிப்பிடுகிறார்.

தலைவிக்குப் பல தோழிமார்கள் இருப்பினும் ஒருவர் மட்டுமே உயிர்த்தோழியாக இருப்பதை அறிந்துத் தலைவன் தோழியை நாடி அவள் துணையைக் கொண்டு அடிக்கடி தன் காதலியைச் சந்திக்கலாம் என்று எண்ணுகிறான். அத்தகைய சிறப்பு உடையவளாகத் தோழி விளங்கினாள்.

**குறியிடம் கூறுதல்**

தலைவன் தலைவியிடம் சேர்ந்து சந்திக்க இடத்தைத் தீர்மானிப்பது தோழியே ஆவாள். அவர்கள் இருவரும் சந்திக்க ஒரு இடத்தைத் தெரிவு செய்வாள். அதற்குக் குறியிடம் ஆகும். அந்தக் குறியிடம் இரண்டு வகைப்படும் 1. பகற்குறி, 2. இரவுக்குறி

ஊரின் எல்லைக்கு உட்பட்டதாக அமைந்த இடமே தலைவன், தலைவி கூடுதற்குரிய பகற்குறியாக அமையும். ஆனால் வீட்டின் எல்லைக்கு உட்பட்டதாய் வீட்டில் உள்ளோர் பேசும் பேச்சைக் கேட்கும் வகையில் அமைவது இரவுக்குறியாகும். இதனை அகப்பொருள் விளக்கம்,

**இல்வரை இகந்தது பகற்குறி இரவுக்குறி**
**இல்வரை இகவா இயல்பிற்று ஆகும். (அகப். 38)**

எனக் குறிப்பிடுகிறது.

தோழி தலைவனிடம் குறியிடம் கூறும் பொருட்டு நான் கூந்தலில் உள்ள எண்ணெய்ப் பசையை நீக்கும் பொருட்டு களிமண்ணைக் கொண்டுவர பொய்கைக்குப் போவேன் அங்குத் தலைவி வருவாள். நீ அங்கு வந்தால் அவளைப் பார்க்கலாம் என்னும் பொருள்படும்படி,

**கூழைக்கு எருமணம் கொணர்கம் சேறும்**

**ஆண்டு வருகுவள பெரும்பே தையே (குறுந். 113: 5-6)**

என்ற பாடல் மருதத் திணையாக அமைந்து குறியிடத்தை விளக்கியிருப்பதை உணர முடிகிறது.

**தோழியின் திறம்**

குருகிற்கு அஞ்சி ஒளிந்த கெண்டை மீன் குருகு அல்லாத தாமரையின் முகையினை வடிவ நிற ஒப்புமைகளால் குருகு எனக் கண்டு அஞ்சிற்று அதுபோலத் தலைவனால் விடப்பட்ட பாணனின் பொய்யுரையைக் கேட்ட தலைவிக்கு அனைத்துப் பாணர்களும் பொய்யர்களாகவே தோன்றினர் என்று தலைவனின் நண்பனைப் பற்றி அவனிடமே திறம்படத் தோழி எடுத்துரைப்பதை,

**குருகு கொளக் குளித்த கெண்டை அயலது**

**உருகெழு தாமரை வான்முகை வெரூஉம் (குறுந். 127: 1-2)**

அகத்திணைப் பாடல்களில் அறிவு சான்ற பாத்திரமாய் விளங்குபவள் தோழி. காதலர் இருவரைக் காட்டிலும் அகத்திணையில் செல்வாக்கு மிக்கு விளங்குபவள் தோழி என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**பாட்டியின் காவல்**

தலைவியின் மாற்றத்தை அறிந்த செவிலித்தாய் வீட்டைவிட்டுத் தலைவி செல்லாதவாறு காவல் அதிகமாகிடவே தலைவன் தலைவியைக் காண்பதற்கு அவளுடைய இல்லத்திற்கே வந்தவுடன் அவள் தனக்குக் காவலாக உள்ள மெல்லிய தளர்ந்த நடையினையுடைய பாட்டியிடமிருந்து தப்பித்து அப்பாட்டியர் தடுத்தலையும் கடந்து வையையில் நீராடுவதற்காகச் சென்றதை,

**மடநடைப் பாட்டியர்த் தப்பிதடை இறந்து**

**தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும் (பரி. 10:37-38)**

இதன் மூலம் தலைவியின் தாய்வழிப் பாட்டியோ தந்தைவழிப் பாட்டியோ இருந்திருக் கின்றனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

**வெறியாட்டு**

தலைவனைப் பார்க்காமல் தலைவி வருந்தினாள். அவ்வருத்தத்தால் அவள் உடல் மெலிவுற்றது. அவனுடைய அழகு சிதைந்து அணிந்திருந்த கைவளையலும் கழன்று வீழ்ந்தன. இருந்தாலும் தலைவி தன்னுடைய துயரத்தைத் தன் வீட்டார்க்குக் கூறவில்லை. தோழி தலைவியின் காதலைப் பற்றி அறிந்திருந்தாலும் அவளாலும் கூறமுடியாத இந்த நிலையில் காதல் வயப்பட்ட தலைவிக்கு உடலில் மாற்றம் ஏற்படும். இதனைப் பார்த்த தலைவியின் தாய் வெறியாட்டு நிகழ்த்துதல் உண்டு. முருகனுக்கு வழிபாடு செய்தால் தலைவிக்கு வந்த நோய் நீங்கும் என்று பலர் கூற அங்கணமே வெறியாட்டு எடுக்கிறாள் தலைவியின் தாய். இது பழந்தமிழரின் தனித்த வழிபாடாகும். இந்த வழிபாட்டில் முருகன் வெளிப்பட்டுத் தன்னுடைய மகளுக்கு ஏற்பட்டு இருக்கும் நோயைத் தீர்ப்பான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இவ்வழிபாடு தோன்றியது. சங்க இலக்கியத்தில் இவ்வழிபாட்டு முறையை வெறியயர்தல் என்று சுட்டப்படுகிறது.

‘சங்க காலத்தே குறிஞ்சி நில மக்களிடத்தே வெறியாட்டு என்னும் வெறிக்கூத்து மிகப் பெரிதும் பரவியிருந்தது. ‘வெறி’ என்னும் சொல் தெய்வத்தைக் குறிப்பதாகும்’.[21] என்று தமிழ்க் கலைக்களஞ்சியம் விளக்கம் அளிக்கிறது. மேலும் சி.பாலசுப்பிரமணியன் ‘செவ்வேட் பெருமானின் திருக்கையிற் பொலிவுற கொலுவிருக்கும் வேலைத் தான் ஏந்தி ஆடுவதால் இம்முருக கோயிற் பூசாரி வேலன் என வழங்கப்பெற்றான். இவ்வேலன் வெறியாட்டாளன் என்றும் படிமத்தான் என்றும் வழங்கப்பெறுவான்’ [22] என்று விளக்கம் கூறுகிறார். உரையாசிரியரான நச்சினார்க்கினியர் ‘செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின் வேலனென்றார். காந்தள் சூடி ஆடுதலிற் காந்தளென்றார். வேலனைக் கூறினமையிற் கணிகாரியையுங் கொள்க. காந்தளையுடைமையானும் பனந்தோடுடை மையானும் மகளிரை வருந்துதலானும், வேலன் வெறியாட்டயர்ந்த என்றதனாலும் வேலன் ஆடுதலே பெரும்பான்மை ஒழிந்தோர் ஆடுதல் சிறுபான்மை யென்றுணர்க’.[23] என்று விளக்கியுள்ளார். இவரைப் போன்றே இளம்பூரணரும் ‘காமவேட்கையின் ஆற்றாளாகிற பெண்பாற் பக்கமாகிய வெறியும் அந்நிலத்துள்ளார் வென்றி வேண்டி ஆடும் வெறியும் கொள்ளப்படும். இவ்வெறி அந்நிலத்திற்குச் சிறந்தது’[24] என்று உரை

எழுதியுள்ளார். வெறியாட்டு என்பது தோழி அறத்தொடு நிற்றலுக்குக் களம் அமைத்துக் கொடுக்கிறது என்றும் தலைவி தலைவனுடன் கொண்ட காதலைத் தெரிவிப்பதற்கு ஒரு வாயிலாக அமைகின்றது என்றும் கூறலாம்.

**களத்தைத் தேர்வு செய்தல்**

நிகழ்ச்சி தொடக்கத்தில் வெறியாட்டு நிகழ்வதற்கான இடத்தைத் தேர்வு செய்வதைக் 'களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி' (அகம். 22:8) களம் தேர்வு செய்தவுடன் அதில் மணல் பரப்பிப் பலவகையான மலர்களால் அழகு செய்யப்படும். பிறகு செந்நெல்லையும் பூவையும் அதன் மீது தூவுவான். இவ்வாறு களம் அழகுப்படுத்தப்பட்டு அங்கு வெறியாட்டு நிகழ்த்தப்படும்.

வெறியாட்டினைப் பற்றிய குறிப்பினைத் தொல்காப்பியம் குறிப்பிடுகையில்,

**வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட் டயர்ந்த காந்தளும் (தொல். பொருள். நூ.60)**

இதில் தொல்காப்பியர் வெறியாட்டிற்குக் காந்தள் என்ற பொருளைப் பயன்படுத்தியுள்ளார்.

இந்த வழிபாட்டில் சேரியின் முதுபெண்டாகிய குறி சொல்பவளை வீட்டில் அழைத்து வந்து முறத்தில் பிடி நெல்லையிட்டு எதிரில் தலைமகளை நிறுத்தவர், உடனே தெய்வத்திற்கு வழிபாடு செய்வர். அவ்வாறு வழிபாடு செய்தபின் வீட்டின் முற்றத்தில் களம் தோறும் செந்நெல்லின் வெண்பொரிகள் சிதறிக் கிடக்கும் என்பதை,

**நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்**
**வேலன் புனைந்த வெறிஅயர் களந்தொறும்**
**செந்நெல் வான்பொரி சிதறி அன்ன (குறுந். 53: 2-4)**

ஆண்களே வெறியாட்டுச் சடங்கினை நடத்தியுள்ளார். பெரும்பாலும் பெண்கள் தலைவியின் நிலைக்கு முருகனே காரணம் என்று கண்டறிபவர்களாக மட்டுமே இருந்து இருக்கின்றனர்.

**அம்பலும் அலரும்**

தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் இருந்த காதல் உறவு தோழி போன்ற நெருங்கிய உறவுக்கு மட்டும் தெரிவது அம்பல். அதுவே பலர் அறியும் ஒழுக்கமாக மாறுவது அலர். இதற்கு வலுசேர்க்கும் வகையில் 'ஒரு குமரியின் காதலொழுக்கம் பற்றி ஊர் மகளிர் வாய்க்குள் பேசுவது அம்பல் எனவும் வெளிப்படையாகப் பேசுவது அலர் எனவும் பெயர்பெறும்'[25] என்று வ.சுப.மாணிக்கம் குறிப்பிடுகிறார்.

தலைவியின் காதலைப் பற்றி ஊர் முழுவதும் அலர் தூற்றுவதைக் கேட்டுத் தோழி தலைவியிடம் ஊரார் பேசிக் கொள்வது உண்மையா என்று வினவியபோது அதற்குத் தலைவி ஒருநாள் உப்பங்கழியில் கோரைத் தட்டையைப் பறிக்க முயன்றபோது கைவிரல்கள் சிவந்து போனது. அதனைப் பார்த்துத் தலைவன் தானாக முன்வந்து கோரைத் தட்டைப் பறித்துக் கிழித்துப் பொம்மை செய்து தந்த சிறிய உதவிக்காகவா? ஊரார் இவ்வாறு பேசுவது என்று கேட்பதாக அமைந்த பாடலில்,

செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றாய் என்றுஅவன்

பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ (கலி. 76: 6-7)

மற்றொரு சமயத்தில் குளத்தில் நீந்திச் செல்லத் தயங்கி நான் திரும்பிவிட அவன் அதைப் பார்த்துக் குளத்தில் பாய்ந்து நீந்தி நான் விரும்பிய மலரைப் பறித்துத் தந்தமைக்காகவா இவ்வாறு பேசுவது,

**ஒடுங்கி யாம்புகல்ஒல்லேம் பெயர்தர அவன்கண்டு**

**நெடும்கய மலர்வாங்கி நெறித்துத்தந் தனைத்தற்கோ (கலி. 76: 10-11)**

ஒரு நாள் அவன் என்மேனியில் எழுதுவரிக் கோலம் தீட்ட எனக்குத் தெரியவில்லை என்று கூறி என் முன்கையைப் பற்றிக் கொண்டு தோளில் கரும்பு உருவத்தை வரைந்த அச்சிறிய உதவிக்காகவா? இவ்வாறு பேசுவது என்று தனித்தனி நிகழ்வைக் கூறிக் கேட்பதாக அமைந்த பாடலில்,

**வரிதேற்றாய் நீஎன வணங்குஇறை அவன்பற்றித்**

**தெரிவேய்த்தோள் கரும்புஎழுதித் தொய்யில் செய்தனைத்தற்கோ (கலி. 76:14-15)**

தலைவன் தலைவியுடன் நீராடியும் நீராடும்போது காவலாக இருந்தும் நான் இட்ட பணியைச் செய்தும் இருந்தான் என்பதற்காகவா அவனுக்கும் எனக்கும் நட்பு உண்டு என்று ஊரார் பழி பேசுகின்றனர். அவர்கள் பேசுவதைக்கேட்டு நீயும் உண்மையா? என்று கேட்பது சரியா? என்று தோழியிடம் தலைவி கேட்பதாக அமைந்த பாடலில்,

**இனையள் என்று எடுத்துஓதற்கு அனையையோ நீயென?**
**வினவுதி ஆயின்! விளங்கிழாய் கேள் இனி (கலி. 76: 4-5)**

ஊர் முழுவதும் அலர் ஏற்படத் தலைவியிடம் கொண்ட காதல் பலருக்கும் தெரிந்துவிட்டதால் தோழி தலைவனிடம் தலைவியை விரைவில் திருமணம் செய்து கொள் என்று வற்புறுத்திக் கூறுகிறாள்.

**பெண் கேட்டல்**

தலைவன் தலைவியைச் சந்திக்கப் பல தடைகள் வரும்போதும் தோழி அறிவுறுத்துவதால் தலைவியைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற நிலைக்குத் தள்ளப்படுகிறான். அவன் தலைவியிடம் உன்னை எனக்குத் திருமணம் செய்து கொடுப்பது உறுதியாவதானால் நானே உன் ஊருக்கு வந்து பெண் கேட்பேன் என்று கூறுவதாக அமைந்த பாடலில்,

**நுந்தை நும்மூர் வருதும்**
**ஒண்தொடி மடந்தை! நின்னையாம் பெறினே (ஐங். 92: 3-4)**

என்று ஆறுதல் பொழியினைக் கூறித் தலைவியை ஆற்றுப்படுத்துகிறான்.

**பசலை படர்தல்**

தலைவியின் மேனி பசலை உறுதல் களவிலும் கற்பிலும் தலைவன் இல்லாதபோது ஏற்படும் மாற்றமாகும். தலைவனின் பிரிவைப் பொருத்துக் கொள்ளமுடியாமல் தலைவியின் உடலில் ஏற்படும் பசலையானது காதலர் வந்து தொடும்போது நீங்குகிறது. இதனை,

**பாசி அற்றே பசலை காதலர் (குறுந். 399:2)**

என்னும் அடிகள் மூலம் குறுந்தொகை பதிவுகிறது. தலைவனின் நினைவு பகல்பொழுதுகளில் மிகுதியாக எழுவதால் தலைவிக்கு மிகுந்த துன்பம் ஏற்படுவதை,

**புனல்முற்று ஊரன் பகலும்**

**படர்மலி அருநோய் செய்தனன் எமக்கே (ஐங். 95:3-4)**

**தாக்கணங்கு ஆவது எவன்கொல்? அன்னாய்! (ஐங் 23-4)**

பிரியமாட்டேன் என்று கூறிவிட்டு, இப்போது அதற்கு எதிர்மாறாக நடந்து கொண்டு என்னை வருத்தும் தெய்வம் போலவும் தலைவன் நடந்து கொண்டானே என்று தலைவி வருத்தப்படுவதை ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இலக்கியத்தில் தலைவியின் மேனி பசலையுற்றதைப் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**பூக்கஞல் ஊரனை உள்ளிப்**

**பூப்போல் உண்கண் பொன்போர்த் தனவே (ஐங். 16:3-4)**

**இறைஏர் எல்வளை நெகிழ்பு ஓடும்மே (ஐங். 20:5)**

**நிறத்தினும் நிழற்றுதல் மன்னே**

**இனிப் பசந்தன்றுஎன் மாமைக் கவினே (ஐங். 35:3-4)**

**கயல்எனக் கருதிய உண்கண்**

**பயலைக்கு ஒல்கா ஆகுதல் பெறினே (ஐங். 36:4-5)**

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் பதிவுசெய்கின்றன.

**விரைவில் மணம் கொள்**

தலைவன் தலைவியைத் திருமணம் செய்துகொள்ள காலம் நீட்டிக்கும்போது தோழி தலைவனைப் பார்த்து களவு காலத்தில் நீ வருந்திய காலத்து நான் உனக்கு மருந்தாகப் பயன்பட்டேன். இப்பொழுது தலைவிக்குத் துன்பம் தீர்க்கும் மருந்தாகாத நிலையில் இருக்கிறேன். அதனை நினைத்து என் நெஞ்சம் வருத்தம் கொள்கிறது. என்னுடைய

வருத்தம் தீர வேண்டுமானால் நீ விரைவில் திருமணம் செய்துகொள் என்று தலைவனை வற்புறுத்திக் கூறுவதை,

**பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும்**

**கழனி ஊர! நின்மொழிவல் என்றும்**

**துஞ்சுமனை நெடுநகர் வருதி**

**அஞ்சாயோ இவள் தந்தை கைவேலே? (ஐங். 60:1-4)**

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியமுடிகிறது.

**வரைவு**

கற்பு வாழ்க்கை தொடங்குவதற்கு வரைவு என்பது முக்கியமாகக் கருதப்படுகிறது. தலைமகன் தலைமகளை அவளுடைய பெற்றோர் முதலானோர் கொடுப்பவும் கொடுக்காத பொழுதும் திருமணச் சடங்கொடு தலைவன் மணம் செய்துகொள்ளவான் என்பதை,

**வரைவெனப் படுவது உரவோன் கிழத்தியைக்**

**குரவர் முதலோர் கொடுப்பவும் கொடாமையும்**

**கரணமொடு புணரக் கடிஅயர்ந்து கொளலே (அகப்.நூ.171)**

என்று அகப்பொருள் குறிப்பிடுகிறது.

**கற்பு வாழ்க்கை**

தலைவன் தலைவியைத் தமரறிய ஊரறியத் திருமணம் செய்து கொண்டு வாழும் வாழ்க்கை கற்பு வாழ்வாகும். இதனை,

**கற்பு எனப்படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே (தொல். பொருள். நூ. 142)**

என்கிறார் தொல்காப்பியர். எனவே களவு கற்பாக முடியவேண்டும் என்பதே நோக்கமாகும். மேலும் கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டு என்பதை,

**கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**

**புணர்ந்து உடன்போகிய காலையான (தொல். பொருள். நூ.143)**

தலைமக்கள் ஊரறியாமல் உடன்போக்கில் ஈடுபட்டபோது தலைவியின் உறவினர்கள் கொடுக்காமலே தலைவன் திருமணம் செய்து கொள்வான் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**திருமண ஏற்பாடு**

தலைவன் தலைவியிடையே நிகழ்ந்து வந்த களவு வாழ்க்கை கற்பு வாழ்க்கையாகத் தொடர தலைவனே திருமணம் செய்து கொள்ளட்டும். இல்லையேல் தலைவியின் தந்தை தலைவனுக்கே திருமணம் செய்து வைக்கட்டும் என்று தோழி கூற்றாக அமைந்த பாடலில்,

**தண்துறை ஊரன் வரைக!**

**எந்தையும் கொடுக்க! எனவேட்டேமே (ஐங். 6:5-6)**

தலைவன் தலைவியை மணந்து கொண்டு மகிழ்ச்சியாக இருக்கவே தோழி விரும்புகின்றாள். இதனைத் தவிர்த்து அவளுக்கு வேறு எண்ணமே இல்லை என்பதை,

**தண்துறை ஊரன் தன்னொடு**

**கொண்டனன் செல்க எனவேட்டேமே (ஐங். 10:5-6)**

இப்படிப் பல நிலைகளில் தலைவனைத் தோழி இடித்துக் கூறி வரைவு மேற்கொள்ள செய்ததால் வேறுவழி இன்றித் தலைவியைத் தலைவன் திருமணம் செய்து கொள்கிறான்.

**திருமணம்**

சங்க காலத்தும் அதனை அடுத்தும் நடந்த திருமணங்களைப் பற்றிய செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை. சங்க இலக்கியத்தில் ஒன்றாகிய அகநானூற்றில் வரும் 86, 136 ஆகிய இரு பாடல்களும் மருதத்திணையைச் சார்ந்ததே. இதில் தமிழர் திருமணமுறை குறித்துச் சில செய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது.

திருமணம் தோன்றியதற்கான காரணத்தைத் தொல்காப்பியர் கூறும்போது,

**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**

**ஐயர் யாத்தனர் கரணம் என்ப (தொல். பொருள். நூ. 145)**

களவு வாழ்க்கை முடிந்து கற்பு வாழ்க்கைக்கு வரும்போது பெரும்பாலான ஆண்கள் பொய் கூறலும், பிழைபட நடத்தலும் ஆகிய செயல்களில் ஈடுபட்டதால் பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டதே திருமணச் சடங்காகும்.

'மணம்' என்ற சொல்லுக்குச் சேர்தல் என்ற பொருள் உண்டு. தலைவனும் தலைவியின் இல்வாழ்க்கையில் ஒன்றாகச் சேர்ந்து வாழ்தலைக் குறிக்கும். இதேபோல் 'கல்யாணம்' என்ற சொல்லைக் கலி+ஆணம் என்று பிரிக்கலாம். இச்சொல் சாதாரண எளிய மக்களிடையே புழக்கத்திலிருக்கும் சொல்லாகும். 'கலி' என்பதற்கு மகிழ்ச்சி, எழுச்சி, விழா, வலி'[26] என்ற பொருளையும் 'ஆணம்' என்பதற்கு 'நேயம், பற்றுக்கோடு அல்லது ஊன்றுகோல்'[27] என்றும் அகராதி பொருள் கூறுகிறது.

தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் விரும்பிக் காதலித்துக் கிழவன் கிழத்தியாதலே பண்டை நாட்களின் நடைபெற்ற திருமணமாகும். அக்காலத்தில் திருமணம் புரோகிதர் இன்றி மணமக்கள் தம் பெற்றோரும் மற்றோரும் உற்றோரும் உறவினரும் சேர்ந்து மணவினையை நடத்தினார்கள் என்பதை அறியலாம். அக்காலத் திருமணங்கள் பெரும்பாலும் பெற்றோர்களாளே நடத்தி வைக்கப்பட்டது. காதலுக்குத் தடையிருந்ததையும் சமுதாயத்தில் எதிர்ப்பு இருந்ததையும் அறிகிறோம். எனவே ஒத்த குலத்தார் தம் தம் தகுதி நோக்கி உரிய இடத்தில் மணம் பேசி முடிப்பதே அன்றைய நடைமுறை வழக்கமாக இருந்ததைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு**

**உருவு நிறுத்த காம வாயில்**

**நிறையே அருளே உணர்வொடு திருஎன**

**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (தொல். பொருள். நூ. 273)**

என்று தலைவனுக்கும் தலைவிக்கும் பத்து வகையிலும் ஒத்து இருந்தால்தான் திருமணம் சிறப்பாக இருக்கும் என்று குறிப்பிடுகிறார்.

**அறத்தொடு நிற்றல்**

தலைவனும் தலைவியும் பிறர் அறியாமல் காதல் கொண்ட உண்மையை உரியவருக்கு உரியவாறு எடுத்துரைப்பது அறத்தொடு நிற்றல் ஆகும். இருவரின் களவு வாழ்க்கை கற்பு வாழ்க்கையாக மாறுவதற்கு அறத்தொடு நிற்றல் முக்கியக் காரணமாக அமைகிறது.

தலைவி தன்னுடைய காதல் வாழ்க்கையைப் பற்றி முதலில் தன்னுடைய தோழிக்குத் தெரிவித்து அறத்தொடு நிற்பாள் தோழி செவிலிக்கும் செவிலி நற்றாய்க்கும் நற்றாய் தம் ஐயர்க்கும் அறத்தொடு நிற்பாள் என்பதை,

**தலைவி பாங்கிக்கு அறத்தொடு நிற்கும்**
**பாங்கி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்**
**செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும்**
**நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு**
**நிற்கும் என்ப நெறி உணர்ந்தோரே (அகப். நூ.48)**

என்னும் அடிகளின் மூலம் அகப்பொருள் விளக்கம் உணர்த்துகின்றது.

**திருமணம் செய்யும் காலம்**

வேங்கை மலர் மலர்கின்ற காலமும் நெடுவெண் திங்கள் ஊர் கொண்ட காலமும் அக்காலத் தமிழர்களால் திருமணம் செய்யும் காலங்கள் எனக் கருதப்பட்டன. அக்காலத்தில்தான் மணநாளைப் பெற்றோர்கள் குறித்தனர் என்பதை,

**வேங்கையும் ஒள்இணர் விரிந்தன**
**நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே (அகம். 2:16-17)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

திருமணம் செய்வதற்குத் தேர்ந்தெடுக்கும் மணநாளாகத் திங்களை உரோகிணியுடன் கூடியிருக்கும் நாள் ஏன் தேர்ந்தெடுக்கப்பட்டது என்றால் இருக்கும் நட்சத்திரங்களில் உரோகிணி மட்டுமே எந்த நேரமும் சந்திரனோடு சேர்ந்தே இருக்கும்.

அந்த நாளில் திருமணம் நடந்தால் மணமக்களும் எந்நேரமும் பிரியாமல் சேர்ந்தே இருப்பார்கள் என்பதை,

**அம்கண் இரு விசும்பு விளங்க திங்கட்**

**சகடம் மண்டிய துகளதீர் கூட்டத்து**

**கடிநகர் புனைந்து கடவுட் பேணி (அகம்.136 : 4 - 6)**

என்னும் அகநானூற்று அடிகள் விளக்குகின்றன.

சங்ககால மக்கள் நல்ல நாள் பார்த்தே அனைத்துக் காரியத்தையும் செய்திருக்கின்றனர். நாளும் கோளும் சரியில்லை என்றால் தொழிலுக்குப் போவதையே நிறுத்தி இருக்கின்றனர். திருமணம் புரிவதற்கு ஏற்றக் காலமாகத் திங்களை உரோகிணி சேரும் நாளை தேர்ந்தெடுத்ததை,

**கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்**

**கேடுஇல் விழுப்புகழ் நாள் தலைவந்தென (அகம்.86 : 6 - 7)**

என அகநானூற்றுப் பாடல் அடிகள் பதிவுசெய்கின்றன.

நல்ல நாள் பார்த்துத் திருமண நாளினைக் குறிக்கும் வழக்கமும் பண்டைக் காலத்தில் இருந்ததை அகநானூற்றுப் பாடல்வழி அறிகின்றோம். தீய கோள்களின் தொடர்பு நீங்கிய சந்திரனை உரோகினி நட்சத்திரம் கூடும் நாளையே நல்ல நாள் எனக் குறிப்பிடும் நம்பிக்கை அக்காலத்தில் இருந்தது. இதனை,

திருமணத்தில் முகூர்த்தவேளைப் பார்த்தே திருமணம் நடைபெற்றதை

**இப்போழ்து போழ்து என்ற அதுவாய்ப்பக் கூறிய**

**அக்கடவுள் மற்றஅக் கடவுள் அது ஒக்கு (கலி. 93:12-13)**

என்னும் கலித்தொகைப் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**திருமண வீட்டின் காட்சி**

வீட்டில் நடைபெற உள்ள திருமண ஏற்பாடாகப் புதுமணல் பரப்பிய இடங்களில் கால் நட்டு மணப்பந்தல் போட்டுச் சுற்றிலும் மாலைகள் தொங்கவிட்டு பந்தல்கள் அமைத்து விளக்குகள் ஏற்றப்பெற்று வீடே விழாக்கோலம் கொண்டதைப் போல் இருக்கும் என்பதை

**தண்பெரும் பந்தர்த்தரு மணல் ஞெமிரி**

**மனைவிளக் குறுத்து மாலை தொடரி**

**கனைஇருள் அகன்ற கவின்பெறு காலை (அகம். 86:3-5)**

என்னும் அடிகள் மூலம் வீடுகளை அழகுபடுத்திய செய்தியை அகநானூறு குறிப்பிடுகிறது.

**மணவினையில் ஈடுபடக்கூடியவர்கள்**

திருமண நிகழ்வைத் திருமணமான பெண்களே முன்நின்று நடத்தினர். புறநானூற்றில் ‘ஈகை அரிய இழை அணி மகளிர்’ (புறம். 127:5) என்பதாலும், அகநானூற்றில் ‘வால் இழை மகளிர் நால்வர் கூடி’ (அகம். 86:12) என வருவதாலும் இதனை அறிந்துகொள்ள முடிகிறது.

**புதுத்துணி உடுத்தல்**

திருமணத்தின்போது மணமக்கள் புதுத்துணி உடுத்தவர் என்பதை,

**கொடும்புற வளைஇ கோடிக் கலிங்கத்து**

**ஒடுங்கினள் கிடந்த ஓர்புறம் தழீஇ (அகம். 86:21-22)**

என்னும் பாடல் அடிகள் மூலம் புத்தாடை உடுத்தித் திருமணம் நடைபெற்றதை அறியமுடிகிறது.

**முழவு ஒலிப்பு**

திருமணத்தில் மங்கல இசைக்காக முழவினை ஒலிக்கப்பட்டதை,

**முழவுமுகம் புலரா விழவுடை வியல்நகர்**

**வதுவை மேவலன் ஆகலின் (அகம். 206:11-12)**

**படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ (அகம். 136:7)**

என்னும் அடிகள் மூலம் அகநானூறு குறிப்பிடுகிறது. மேலும் கலித்தொகையிலும் முழவு ஒலிப்பதைப் பற்றி,

**மணமனைத் ததும்பும் நின் மணமுழவந்து எடுப்பும் (கலி.70 :10)**

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகிறது.

**மங்கலநாண் அணிவிக்கும் பழக்கம்**

திருமணத்தன்று மங்கலநாண் அணிவிக்கும் பழக்கம் தமிழ்நாட்டு முறை ஆகும். ஆரியர் முறை அன்று. வடநாட்டில் ஆரியர்கள் இன்றும் தாலிகட்டாமையே இதற்குச் சான்று என்று வி.சி.சசிவல்லி குறிப்பிடுகிறார். மேலும் இவர் 'இழையணி சிறப்பின்' (அகம். 136:17) என்பதிலும் 'வாலிழை மகளிர்' (அகம். 86:12) என்பதிலும் உள்ள 'இழை' என்ற சொல் ஒரு வகையான தொங்கும் அணியைக் குறிக்கிறது என்பதை 'இங்கு இந்நாளில் திருமணச் சின்னமாக நாம் வழங்கும் தாலி என்ற சொல்லுக்கு ஈடாக இழை என்ற சொல் வழங்கப்பட்டது'[28] என்னும் குறிப்பு உணர்த்துகின்றது.

தமிழர் திருமணத்தைப் பற்றிக் குறிப்பிடும் அகநானூற்றின் இரண்டு பாடல்களிலும் மங்கலநாண் அணிவித்ததைக் குறிப்பிடவில்லை என்றாலும் அக்காலத்தில் நீளமாகத் தொங்கும் அணிகலன்களில் ஒன்றை அணிந்து இருந்தனர் என்று வி. சி. சசிவல்லி அவர்கள் குறிப்பிடும் கருத்து ஏற்றுக்கொள்ளும் வகையிலே இருக்கின்றது.

**உறுதி உரைத்தல்**

திருமணத்தின்போது தீக்கடவுள் முன்பாகப் பிரியாது என்றும் ஏற்றுக் கொள்வதாகத் தலைவன் தலைவியின் கையைப் பற்றுதல் உண்டு என்பதை,

**தெறல் அருங் கடவுள் முன்னர்த் தேற்றி**

**மெல் இறை முன்கை பற்றிய சொல் இறந்து**

**ஆர்வ நெஞ்சம் தலைத்தலைச் சிறப்ப நின்**

**மார்பு தருகல்லாய் பிறன்ஆ யினையே (அகம்.396 : 7 - 10)**

என்னும் அகநானூற்றுப் பாடல் உறுதி செய்கிறது.

**வாழ்த்தும் முறை**

திருமணத்தின்போது வந்து இருந்த உறவினர்கள் நெல்லும் நீரும் சேர்த்து மணமக்கள் மீது தூவி வாழ்த்தியதை,

**நெல்நீ ரெறிந்து விரிச்சி ஓர்க்குஞ்**

**செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா (புறம். 280: 6-7)**

என்று புறநானூறு குறிப்பிடுகிறது. இதேமுறையைச் சற்று விரிவாக அகநானூறும் ‘நீரொடு சொரிந்த ஈர்இதழ் அவரி’ (அகம். 86: 15) என்று குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியத்தில் நெல்தூவி மணமக்களை வாழ்த்தினர். இப்பொழுது அரிசியோடு மஞ்சள் உடன்சேர்த்து வாழ்த்துகின்றனர். இவ்வாறு தூவி வாழ்த்தும் முறை பண்டைய நாகரிகங்களின் பழமையான வழக்கம் என்பர். மணமக்களைத் தீய சக்திகளின் பாதிப்பிலிருந்து காப்பதற்கும் அவர்கள் நிகழ்த்தும் செயலில் வளமை வேண்டுதற்கும் நெல்லினைத் தூவுவதாகக் குறிப்பிடுவர்.

**உணவு பரிமாறும் முறை**

ஊனும் நெய்யும் சேர்த்துச் சமைத்தப் புலால் உணவைச் சுற்றத்தார்க்குத் திருமணம் முடிந்த பின் பரிமாறப்பட்டதை,

**மைப்புஅறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு**

**வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி (அகம். 136: 1-2)**

என்னும் பாடல் அடிகள் மூலம் திருமணம் சிறப்பாக நடந்ததை அகநானூறு பதிவு செய்துள்ளது.

**பிறவிதோறும் தொடரட்டும்**

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தர்களில் முதன்மை இடத்தைப் பெறுபவளாகத் தலைவியே விளங்குகிறாள் என்று கூற இயலும். தலைவியை மையமாகக் கொண்டு மற்ற பாத்திரங்கள் படைக்கப்படுகின்றன. ஐந்திணைகளும் அதன் உரிப்பொருள்கள் அனைத்தும் தலைவியை மையமாகக் கொண்டே படைக்கப்படுகிறது. அத்தகைய சிறப்புமிக்கத் தலைவி, தலைவனிடம் கொண்டுள்ள காதல் உறவு பல பிறவிகளிலும் தொடர்ந்து வரவேண்டும் எனத் தலைவி விரும்பினாள். இதனை,

**தண்டுறை ஊரன் கேண்மை**

**வழிவழிச் சிறக்க! எனவேட் டேமே (ஐங். 2: 5-6)**

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

தலைவிக்கான இல்லறக் கடமைகளைத் தொல்காப்பியர் கூறும்போது வீட்டிற்கு வரும் விருந்தினர்களை மகிழ்வுடன் உபசரித்தல், பொய்ச் சத்தியத்திற்கு அஞ்சுதல், புதல்வனைப் பேணுதல் போன்ற கடமைகளைச் செய்து முடிப்பவளாகத் தலைவி இருக்க வேண்டும் என்கிறார். இதனை,

**கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்**

**மெல்லியற் பொறையும் நிறையும் வல்விதின்**

**விருந்து புறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவு மன்ன கிழவோள் மாண்புகள் (தொல். பொருள். நூ. 152)**

என்ற நூற்பாவின் மூலம் அறியலாம்.

**விடியலை உணர்த்தும் சேவல்**

தலைவியும் தலைவனும் சேர்ந்து இருந்தபோது காலை வேளையில் சேவலானது கூவி இருவரின் உறக்கத்தையும் எழுப்பிவிட்டது. இதனால் கோபம் கொண்ட தலைவி சேவலைப் பார்த்து அது கூவியதற்குத் திட்டுகிறாள் என்பதை,

**குவிஇணர்த் தோன்றி ஒண்பூ அன்ன**

**தொகுசெந் நெற்றிக் கணம்கொள் சேவல்! (குறு. 107:1-2)**

என்ற குறுந்தொகை அடிகள் காட்டுகின்றன.

தலைவனோடு மகிழ்ந்திருந்த வேளையில் சேவல் கூவித் தன்னுடைய மகிழ்ச்சியைக் கெடுத்துவிட்டதே என்ற வருத்தம் தலைவிக்கு எழுவதை அறிந்துகொள்ள முடிகிறது.

**உணவு சமைத்தல்**

தலைவி, தன்னுடைய தலைவனுக்காகத் தாமே சமைக்க முற்படுவதைக் குறுந்தொகை 167 ஆவது பாடல் தெளிவாகக் காட்டுகிறது.

**முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**

**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ**

**……………………………………….**

**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே (குறுந். 167:2)**

என்ற பாடலில் புதியதாகத் திருமணம் செய்து கொண்ட தலைவி ஒருத்தி தன்னுடைய கைகளால் புளித்த தயிரைப் பிசைந்து குழம்பு செய்தாள். அதனைத் தலைவன் இனிதென்று பாராட்டி உண்டதனால் தலைவி மகிழ்ச்சி அடைந்தாள் என்று கூடலூர்க்கிழார் படைத்துக் காட்டுகிறார். இதன்மூலம் முல்லைநிலத் தலைவியின் இல்லற மாண்பை அறிந்துகொள்ள முடிகிறது. மருதத்திணைத் தலைவி சமைத்த செய்தியை நற்றிணைப் பாடல்,

**வாளை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்**

**புகைஉண்டு அமர்த்த கண்ணள் தகைபெறப்**

**பிறைநுதல் பொறித்த சிறுநுண் பல்வியர்**

**அம்துகில் தலையில் துடையினள் நப்புலந்து (நற். 120: 5-9)**

எனக் காட்சிப்படுத்தியுள்ளது.

தலைவியின் விரல்கள் சிவக்கும்படி வாளை மீனைக் கொணர்ந்து அதன் அடி பகுதியை உண்ணும் வகையில் பொடிப் பொடியாக நறுக்கினாள். அவளது கண்கள் புகையுண்டும் உணவு ஆக்குவதால் ஏற்பட்ட சோர்வோடும் விளங்கின. அழகுடைய நெற்றியில் பல வியர்வைத் துளிகள் அரும்பின அவ்வியர்வையைப் புடைவையால் துடைத்தாள் என்ற செய்தியின் மூலம் அவளுக்குச் சமைப்பதில் அதிக அனுபவம் இல்லை என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

**அன்போடு விளங்குதல்**

தலைவி செடி, கொடி, குரங்கு, பறவை, கிளி என அனைத்து உயிர்களிடமும் அன்பு காட்டுபவளாகவும் தலைவனோடு மிகுந்த அன்பு கொண்டவளாக இருக்கின்றாள். இதனை,

**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கட் செல்வம் செல்வம் என் பதுவே (நற். 210: 8-9)**

ஒருவர் மற்றவர் இடத்தில் செலுத்தும் அன்பே சிறந்தது மற்றவை அனைத்தும் அன்பிற்குக் கீழானதே என்று நற்றிணை குறிப்பிடுகிறது.

**தேம்பூங்கட்டி**

தலைவனும் தலைவியும் சேர்ந்து வாழ்ந்த இல்லற வாழ்க்கையில் தலைவனுக்குத் தலைவி எது செய்தாலும் தவறாகவே படுகிறது. இருவரிடையே அன்பு குறைந்து விட்டது. இதனைப் பார்த்த தோழி தலைவனிடம் களவு காலத்தில் தலைவி செய்த எந்த ஒன்றையும் நீ புகழ்ந்து பாராட்டுவாய். இப்பொழுது நீ நேர்எதிர்மாறாக மாறிவிட்டாய் என்று கூறுவதை,

**வேம்பின் பைங்காய்என் தோழி தரினே**
**தேம்பூங் கட்டி என்றனிர் இனியே**
**பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்**
**தைஇத் திங்கள் தண்ணிய தரினும்**

**வெய்ய உவர்க்கும் என்றனிர் (குறுந். 196: 1-5)**

ஒரு காலத்தில் எம் தோழி பசிய வேப்பங்காயைத் தந்தாலும் அது வெல்லக்கட்டி போன்று இருக்கிறது எனக் கூறிச் சுவைத்து உண்டீர். ஆனால் இப்பொழுது பாரி மலையின் சுனைநீரைத் தந்தாலும் உவர்ப்புச் சுவையுடையதாக இருக்கிறது என்று கூறி மறுப்பது சரியா என்ற கேள்வியைத் தலைவனைப் பார்த்துத் தோழி கேட்பதாகக் குறுந்தொகைப் பதிவு செய்கிறது.

**புதல்வன் நடை பயிலல்**

தலைவியும் தலைவனும் சேர்ந்து வாழ்ந்ததின் அடையாளமாக ஒரு மகன் பிறக்கின்றான். அவனை வளர்ப்பதில் ஆர்வத்தோடு செயல்படுகிறாள் தலைவி தன்னுடைய புதல்வன் நடைபயிலும் காட்சியை,

**தேர்நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்**
**பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு (நற். 250: 3-4)**

கிண்கிணிகள் ஒலிக்குமாறு சிறிய தேரைப் பற்றி இனிமையான மொழியை உடைய புதல்வன் நடைபயின்றான் என்று நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது.

**அறமாவது எது?**

தலைவன் தலைவியிடம் சிறிது காலம் இன்பம் அனுபவித்துவிட்டு அவளைவிட்டுப் பிரிந்து செல்கிறான். அப்பொழுது தோழி ஆமையின் இளம்குட்டிகள் தம் தாய் முகம் நோக்கி வளர்வதைப் போன்று உன்னுடைய புதல்வனும் உன்னுடனே சேர்ந்து வளரவேண்டும். அதுதான் அறமாகும் என்று தலைவனுக்கு அறிவுரை கூறுவதாக அமைந்த செய்தியை,

**தீம்பெரும் பொய்கை யாமைஇளம் பார்ப்புத்**
**தாய்முகம் நோக்கி வளர்ந்திசி னாஅங்கு**
**அதுவே ஐயநின் மார்பே**
**அறிந்தனை ஒழுகுமதி: அறனுமார் அதுவே (ஐங். 44: 1-4)**

என்ற ஐங்குறுநூற்று அடிகள் மூலம் தலைவன் தலைவி வாழ்க்கையில் களவுக் காலத்திலும், கற்புக் காலத்திலும் தோழியின் பங்கு அளப்பரியதாக விளங்கியதை அறிந்துகொள்ள முடிகிறது.

**மழலைச் சொல்**

பிறந்த குழந்தையின் சொல்லைக் கேட்டலே இன்பமாகும். அவ்வாறு கேட்காதவர்களே குழலின் ஓசையையும் யாழின் ஓசையும் இனிமையானது என்று குறிப்பிடுவர் என்பதை,

**குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர் (குறள். 66)**

எனத் திருவள்ளுவர் குறிப்பிடுவதைப் போன்று தலைவி தன்னுடைய மகனைப் பார்த்து நீ அத்தா! அத்தா! என்று உன் தந்தையை அழைக்கும் இனிய மழலைச் சொல்லைக் கேட்டால் எனக்கு இன்பமாக இருக்கிறது என்பதை,

**ஐய! காமரு நோக்கினை அத்தத்தா என்னும்நின்**
**தேமொழி கேட்டல் இனிது மற்று இன்னாதே (கலி. 80: 14-15)**

என்ற அடிகள் மூலம் சங்க காலத்தில் தந்தையை அத்தா! என்று அழைக்கப்பட்டதை அறியமுடிகிறது.

**தலைவி வருத்தம்**

தலைவன் தம்மைத் தேடிவராது விலகிச் செல்வதைத் தலைவி காம உணர்வானது முற்றும் ஒழியுமாறு தொடர்பற்றவர்களின் சுடுகாட்டைக் கண்டு வெறுத்து விலகிச் செல்வதைப் போல என்னைக் கண்டும் காணாமலே விலகிச் செல்கின்றார் என்று தனது வருத்தத்தை,

**நல்லறிவு இழந்த காமம்**
**வில்உமிழ் கணையின் சென்றுசேண் படவே (குறுந். 231: 5-6)**

எனக் குறுந்தொகைப் பதிவு செய்துள்ளதை அறியலாம். மேலும் தன்னுடைய மகனிடம் உன் தந்தை பங்காக வைத்த பாலையும் எனது பங்காக உள்ள பாலையும் நீயே குடித்துவிடு என்று கூறுவதை,

**பாராட்டைப் பாலோ சில**

**செருக்குறித் தாரை உவகைக்கூத் தாட்டும்**

**வரிசைப் பெரும்பாட்டொ டெல்லாம் பருகீத்தை**

**தண்டுவெண் ஞாயர் மாட்டைப் பால் (கலி. 85:33-36)**

என்ற அடிகளின் மூலம் தலைவி தலைவனை நினைத்து நினைத்து பால் அருந்தாமலும் வருத்தப்பட்டாள் என்பதைக் கலித்தொகைப் பதிவு செய்துள்ளது. பரத்தை ஒருத்தி தன்னுடைய புதல்வனுக்கு மீன் கொடி பொறித்த மோதிரத்தை அன்பளிப்பாகக் கொடுத்ததைத் தன் தாயிடம் வந்து காட்டும் பொழுதும் தலைவன் பரத்தையர் செய்த வடுக்களைக் காட்டிக் கொண்டு வந்து நின்ற பொழுதும் அவளுக்கு வெந்தப்புண்ணில் வேலைப் பாய்ச்சுவதைப் போல் இருந்ததை,

**வெந்தபுண் வேல்எறிந்தாற்றா இஃது ஒன்று**

**தந்தை இறைத்தொடி மற்றுஇவன் தன்கைக்கண் (கலி. 84:30-31)**

**முந்தைஇருந்து மகன்செய்த நோய்த்தலை**

**வெந்தபுண் வேல்எறிந் தற்றால் வடுவொடு**

**தந்தையும் வந்து நிலை (கலி. 83: 29-31)**

என்ற பாடலடிகள் மூலம் தலைவனைப் பிரிந்த தலைவிக்குத் தாங்கொண்ணா துன்பம் ஏற்பட்டதை அறிந்து கொள்ளமுடிகிறது.

தலைவனைப் பிரிந்த தலைவியின் கண்கள் மழைக்காலத்தில் நனைந்த மலர் போல் கண்ணீரைச் சொரிகின்றன என்பதை,

**ஊரன் ஆகலின் கலங்கி**

**மாரி மலரின் கண்பனி உகுமே (ஐங். 19: 4-5)**

என்னும் ஐங்குறுநூற்று அடிகள் உணர்த்துகின்றன.

தலைவன் பரத்தையோடு சேர்ந்து இருந்தான் என்று பலர் பேசுவதைக் கேட்டாலே தலைவி கோபப்படுவதால் இந்நிலையில் அக்காட்சியைக் கண்ணால் கண்டால் அவள் என்ன ஆவாளோ? என்று தோழி தலைவனிடம் தலைவியின் வருத்தத்தைக் கூறுவதை,

**செவிலி கேட்பினும் சொல்இறந்து வெகுள்வோள்**

**கண்ணின் காணின் என்ஆ குவள் கொல்**

**நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்**

**தைஇத் தண்கயம் போல**

**பலர்படித்து உண்ணும்நின் பரத்தை மார்பே? (ஐங்.84: 1-5)**

என்ற அடிகள் மூலம் தலைவனைப் பிரிந்த தலைவிக்குப் பல நிலைகளில் வருத்தத்தை ஏற்படுத்தியதை ஐங்குறுநூறு புலப்படுத்துகிறது.

**அன்பு செலுத்தாத் தலைவன்**

தலைவி தலைவனைப் பார்த்து நீ என்னை மணந்து கொண்டு கணவன் ஆனாலும் அன்பு செலுத்தவில்லை. இதற்கு மாறாகப் பரத்தையர்கள் உனது மனைவி என்று ஊரார் கருதுமாறு மெல்லமெல்ல எம்மைவிட்டுப் பிரிந்து விலகிச் செல்கிறாய் என்று தனது ஆதங்கத்தை,

**மணந்தனை அருளாய் ஆயினும் பைபயத்**

**தணந்தனை ஆகி உய்ம்மோ நும்ஊர்**

**ஒண்தொடி முன்கை ஆயமும்**

**தண்துறை ஊரன் பெண்டுஎனப் படற்கை (ஐங். 83:1 - 4)**

என்னும் ஐங்குறுநூற்று அடிகளின் மூலம் அறியமுடிகிறது. தலைவன் இன்பம் கிடைக்கும் இடம் நோக்கியே செல்பவனாக இருக்கிறான் என்பதை,

**பூம்பொய்கை மறந்து உள்ளாப் புனல்அணி நல்ஊர**

**அணைமென்தோள் யாம்வாட அமர்துணைப் புணர்ந்துநீ (கலி. 66: 8 - 9)**

பூ எங்கெல்லாம் இருக்கிறதோ அங்கெல்லாம் சுற்றித் திரியும் வண்டு போல் இன்பம் கிடைக்கும் இடம் நோக்கிச் சென்று கொண்டு இருக்கிறாய் என்று தலைவனைப் பார்த்துத் தலைவி கேட்பதை கலித்தொகைப் பதிவு செய்துள்ளது.

**எப்படித் தனிமையில் இருப்பாள்?**

தலைவி, தலைவன் மீது மிகுந்த காதலோடு இருக்கிறாள் ஆனால் தலைவன் மகனைப் பெற்றெடுத்தவள் என்றுகூட பார்க்காமல் அவளைத் தனிமையில்விட்டுச் சென்று விடுகிறான். அப்படி நீ செல்லும்போது தனிமையில் இருந்து துன்பப் படுவதற்கு அவளுக்கென்ன தலை எழுத்தா? என்று தோழி தலைவனைப் பார்த்துக் கேள்வி கேட்பதை,

**எழுதுஎழில் சிதைய அழுதனள் ஏங்கி**
**அடித்தென உருத்த தித்திப் பல்ஊழ் (அகம். 176: 23- 24)**

என்னும் பாடலடி வெளிப்படுத்துகிறது.

**காமக்கிழத்தியர் காதல் பரத்தையர்**

தலைவன் தன் காமம் காரணமாக இற்கிழத்தியாகும் உரிமைக்காகப் பெரும்பொருள் கொடுத்துத் தலைவனால் உரிமையாக்கிக் கொள்ளப்பட்டவரே காமக்கிழத்தியர் எனப்படுவர். இவர் 1. ஒத்த கிழத்தியர் 2. இழிந்த கிழத்தியர் 3. வரையப்பட்டார் என மூவகைப்படுவர். இவருள் ஒத்த கிழத்தியரும் இழிந்த கிழத்தியரும் பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தி எனவும் குறிக்கப்பெறுவர். கணிகையர் குலத்தில் தோன்றித் தலைவனால் இற்கிழமை கொடுத்துத் தனக்கென உரிமையாக்கிக் கொள்ளப்பட்டாரும் காமக்கிழத்தியர் எனப்படுவர்.

**ஒருவன் தனக்கே உரிமை பூண்டு**
**வருகுலப் பரத்தையர் மகளிர் ஆகிக்**
**காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர் (அகம். 113)**

என்னும் அகநானூற்று அடிகளின் மூலம் சேரிப்பரத்தையர் போலப் பலருக்கும் உரிமையாகாமல் ஒருவனுக்கே உரிமை பூண்டு வரும் குலப்பரத்தையரின் மகளே காமக்கிழத்தியராவார். இவர் காமம் காரணமாகத் தலைமகனால் மணந்து கொள்ளப்பட்டவராவார் என்பதை அறியலாம்.

பரத்தையரிலிருந்து காமக்கிழத்தியர் மேம்பட்டவர்களாக இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் கருதுகிறார்கள். நச்சினார்க்கினியர் சற்று வேறுபட்டு இருபாலரும் பரத்தையர் எனினும் காமக்கிழத்தியர் ஆடவனோடு இல்வாழ்க்கை நடத்துகின்ற உயர்பரத்தையர் என்றும் மற்றையோர் கூத்தும் பாட்டும் நிகழ்த்துகிற சேரிப்பரத்தையர் இழிகுலத்தோர், பணிப்பெண்கள் என்றும் பாகுபடுத்திக் கூறுகின்றார்.

மக்கட்பேறு இம்மை, மறுமை இன்பங்களிலும் பெரிதாகக் கருதப்பட்டது. புதல்வரின் மழலைக் கேட்டுத் தளர்நடைகண்டு இன்புறுவதிலும் பொருள் பெரிதன்று என்ற எண்ணம் மக்கட் செல்வத்தின்பால் அவர்கள் கொண்ட பற்றினைத் தெளிவாக்கும். மக்கட்பேறு இல்லாத தலைவர் மகட்பேறு வேண்டி முதல் மனைவி இருக்கும் பொழுதே தன் குலத்திற்கேற்றப் பெண்ணை மீண்டும் மணத்தலுண்டு. இதனை அவனது இல்லக்கிழத்தியும் மகிழ்வுடன் ஏற்றுக்கொள்பவளாக இருந்திருக்கிறாள்.

**திருமண உரிமை**

தலைவன் காமக்கிழத்தியரைத் திருமணம் செய்துகொண்டதை அகநானூறு குறிப்பிடுகிறது.

**நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு**
**வதுவை அயர்ந்தனை என்ப. (அகம். 36:11-12)**
**பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து**
**வதுவை அயர்ந்தனை என்ப (அகம். 46:9-10)**
**ஒண்தொடி ஆயத்துள்ளும் நீநயந்து**
**கொண்டனை என்ப ஓர் குறுமகள் (அகம். 96:9-10)**

மேற்கண்ட பாடலடிகளின் மூலம் காமக்கிழத்தியர் தலைவியைப் போல் திருமண உரிமை பெற்றவர்களாக இருந்ததை அறிய முடிகிறது.

காமக்கிழத்தியும் தலைவியைப் போன்றே பரத்தையிடம் சென்று திரும்பும் தலைவனைக் கண்டிக்கிறாள். இவளும் தலைவியைப் போன்றே செயல்படுவதை,

**மாரிக்கு அவாவுற்றுப் பீள்வாடும் நெல்லிற்கு ஆங்கு**

**ஆராத் துவலை அளித்தது போலும்நீ**

**ஓர்யாட்டு ஒருகால் வரவு (கலி. 71: 24-26)**

என்ற அடிகளின் மூலம் பரத்தையிடம் சென்று வந்த தலைவனைக் காமக்கிழத்தி மழைக்காக ஏங்கிப் பிடித்த கதிர் வாடிக்கொண்டிருக்கும் நெற்பயிருக்கு ஒருமுறை சிறுமழை பெய்து அவ்வாட்டத்தைப் போக்கியது போல ஆண்டுக்கு ஒருமுறை வரும் உன்னுடைய வரவை எப்பொழுதும் நீ வருவதுபோல் எண்ணிக் கொள்கிறேன். நீ இப்போது உன் பரத்தையரிடமே செல் என்று கூறுவதாகக் கலித்தொகைப் பதிவு செய்துள்ளது.

**காமக்கிழத்தியின் வருத்தம்**

தலைவன் காமக்கிழத்தின் வீட்டிற்கு எப்பொழுதாவது வருகிறான் என்பதை,

**நனவினான் வேறாகும் வேளா முயக்கம்**

**மனைவரின் பெற்றஉவந்து மற்றுஎம்தோள் வாட (கலி. 68: 21-22)**

எப்போதாவது வரும் தலைவனின் விருப்பம் இல்லாத அணைப்பைப் பெற்று மகிழ்கிறோம். மற்ற நேரத்தில் எனது தோள் வாடியே கிடக்கிறது. கனவில் வந்து சேரும் செல்வம் விழித்தவுடன் இல்லாமல் போவது போல உனது மார்பு எனக்கு நிலையாகக் கிடைக்காமல் போய்விடுகிறது என்று தலைவி வருத்தப்பட்டதைக் கலித்தொகை அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

காமக்கிழத்தி தலைவனிடம் நீ இங்கு வந்து தங்குவதால் எனக்கு மகிழ்ச்சி இல்லை. நீ மனக்குறை உடையவன் போல இங்கு வந்து தகுதியில்லாச் செயல்களைச் செய்யாமல்

உன்னை விரும்புகின்ற பெண்களின் விருப்பம் நீங்கும்போதுதான் உனக்கு என்னுடைய நினைப்பு வரவும் அப்பொழுதுதான் எனது அருமை தெரியவரும் என்று கூறுவதை,

**தருக்கேம் பெரும! நின் நல்கல் விரும்புற்றுத்**
**தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது**
**சூழ்ந்தவை செய்து மற்று எம்மையும் உள்ளுவாய்**
**வீழ்ந்தார் விரும்பு அற்றக்கால் (கலி. 69: 21-24)**

என்ற பாடலடிகள்வழி அறியலாம்.

**காதற்பரத்தை**

இவள் ஆடல், பாடல் ஆகிய இரண்டிலும் வல்லவர் ஆவர். தன் அழகையும் இளமையையும் காட்டி இன்பத்தையும் பொருளையும் விரும்பும் இயல்பினர், இவருள் ஒரு பிரிவினராய்ப் பலருக்கும் உரியவராவர். இச்சேரிப் பரத்தையின் மகளாய்ப் பிறந்து அப்பரத்தையரின் இயல்பிலிருந்து மாறி ஒருவனுக்கு மட்டுமே உரிமை பூண்டு அவன் மீது கொண்ட காதல் காரணமாகப் புணர்வோள் காதற் பரத்தையர் ஆவார் என்பதை,

**யாரையும் நயவா இயல்பிற் சிறந்த**
**சேரிப் பரத்தையர் மகளிர் ஆகிக்**
**காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர் (அகப். 114)**

என்று அகப்பொருள் விளக்கம் விரித்துக் கூறுகிறது. இவளுக்குத் தலைவனைத் திருமணம் செய்துகொள்ளும் உரிமை உண்டு என்பதை,

**அவருளும் வரைதற்கு உரியோர் உளரே (அகப். 115)**

என்ற பாடலடியில் அறிந்துகொள்ள முடிகிறது.

தலைவனால் காம இன்பங் கருதி வரைந்து கொள்ளப்பட்ட காதற்பரத்தை தலைவன் தன்னைவிட்டுச் சேரிப்பரத்தையரிடம் சென்றான் என்பதை அறிந்துகொண்டு தலைவன் தன்னிடம் வந்தபோது அதைப்பற்றிக் கேட்க, அதற்குத் தலைவன் ஊடல் கொண்டு செல்வதை,

**துய்த்தலை முடங்இறாத் தெறிக்கும் பொற்புடைக்**

**குரங்குளைப் புரவிக் குட்டுவன்**

**மரந்தை அன்னவென் நலம்தந்து சென்மே (அகம். 376: 16-18)**

**ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்ப நின் (அகம். 396: 9)**

என்ற அடிகளின் மூலம் தலைவன் தன்நலத்தை அழித்துவிட்டு ஏனைய பரத்தையிடம் செல்வதைக் காதற்பரத்தை இடித்துக் கூறுவதாக அகநானூறு விளங்குகின்றது.

**சத்தியத்தை மீறிய தலைவன்**

தலைவன், தலைவியிடமும் காமக்கிழத்தியிடமும் காதற்பரத்தையிடமும் சொல்லிய வார்த்தையைக் காக்கவில்லை, அவன் தன்னுடைய விருப்பப்படியே நடந்துக் கொண்டான். காதற்பரத்தை, தலைவனிடம் தெய்வத்தின் முன் தனக்குச் சத்தியம் செய்த வார்த்தையைக் கைவிட்டமைக்காகத் தன்னுடைய கோபத்தை வெளிப்படுத்திய விதத்தை,

**தெறல்அருங் கடவுள் முன்னர்த்தேற்றி**

**மெல்இறை முன்கை பற்றிய சொல்இறந்து (அகம். 396: 7 - 8)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவன் சத்தியத்தை மீறியே நடந்து கொண்டு இருக்கிறான் என்பதை இதன் மூலம் அறியமுடிகிறது.

**காதற்பரத்தையின் இரக்கம்**

காதற்பரத்தை தலைவனிடம் உன்னுடைய பிரிவை நினைத்த எந்நேரமும் நீர் பெருகி ஒழுகும் கண்ணையுடைய தலைவியின் நெஞ்சம் மீண்டும் வருந்தும்படி செய்து என்னிடத்தே வருவதை இனித் தவிர்ப்பாயாக என்று தலைவனிடம் கூறுவதை,

**பனித்துப் பனி வாரும் கண்ணவர் நெஞ்சம்**

**கனற்றுபு காத்தி வரவு (பரி. 6: 85-86)**

என வரும் அடிகள் மூலம் அறிய முடிகிறது.

காதற்பரத்தைத் தன்னுடைய இன்பத்தைக் காட்டிலும் தலைவியின் மீது இரக்கம் கொண்டவளாக இருந்து இருக்கிறாள் என்பதைப் பரிபாடல் மூலம் அறியலாம்.

**பரத்தமை**

சங்க இலக்கியத்தில் பரத்தையர் என்னும் ஒரு பிரிவினர் ஏன் தோன்றினர் என்பதும் எப்பொழுது தோன்றினர் என்பதும் வரையறுத்துக் கூறமுடியாது. பரத்தை, பரத்தைமை என்னும் சொற்களுக்குரிய வரையறைகள் சங்க இலக்கியத்தில் இல்லை. எனினும் அவர்களுடைய பண்புகள் பலவற்றையும் உள்ளடக்கி ஒரு வரையறையை இளம்பூரணர் 'பரத்தையராவார் யாவரெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லாராகி அழகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெஃகி யாவர் மாட்டும் தங்காதார்'[29] என்று விளக்கம் தருகிறார்.

இதேபோல் மற்றொரு உரையாசிரியரான நச்சினார்க்கினியர் கலித்தொகையில் எழுதிய உரையில் பரத்தையரைப் பகலில் ஆடவருடன் கூடும் சேரிப் பரத்தையர் இரவில் மணமான ஆண்மகனுடன் கூடித் துயிலும் இற்பரத்தையர் ஏனைய பரத்தையரோடு தங்கிவந்த ஆணை ஊடுகிற காமக்கிழத்தி ஆகிய மூன்று வகையாகப் பிரித்துக் கூறியுள்ளார். இதில் பரத்தையை அகஇலக்கியங்கள் கையாளும் விதத்தைப் பற்றி 'தலைவியின் உள்ளத்தில் ஊடற் பொறியை உருவாக்கும் கருவியாகவே பரத்தையை அகஇலக்கியங்கள் உருப்படுத்துகின்றது'[30] என்று குளோறியா சுந்தரமதி குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியங்களில் பரத்தையர்க்கு ஓர் இடம் வகுத்தளித்தற்கு நேரிய காரணம் ஒன்று இருத்தல் வேண்டும். பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தையர் ஒழுக்கம் குடும்பவொழுக்கம் போலப் பரவி இருந்ததால் தலைவனுக்கு மிக இயல்பான ஒன்றாகவும் பொழுதுபோக்காகவும் இருந்தமையால் தலைவன் வெளிப்படையாகப் பரத்தையுடன் மகிழ்ந்து புனலாடியபின் பரத்தையின் இல்லத்தில் தங்கி விடுவான். போர் மேல் செல்லா நாட்களிலும் பொருள்தேடச் செல்லா நாட்களிலும் உழவுத்தொழிலில் வேலையில்லாப் பொழுதும் பரத்தையர் இல்லத்தை நாடியிருப்பாரோ? அதனால்தான் பரத்தமை ஒழுக்கம் மிகுதியாகக் காணப்பட்டதோ எனும் ஐயங்கள் இங்கு எழுகின்றன.

பரத்தையர் என்பதற்கு அயலவர் என்று பொருள் கொள்ளப் பெற்றுள்ளது. குறு+ஸ்திரி = குறத்தி என்றாற் போலப் பர + ஸ்திரி = பரத்தி பரத்தை என்றாயிற்று எனப் பரத்தை என்ற சொல்லுக்கு விளக்கம் கூறியுள்ளார் க.ப.அறவாணன். பரத்தை என்பது தமிழ் வேர்ச்சொல் அன்று என இறையனார் களவியல் உரைகூறும்.

பரத்தை தலைவிக்குச் சவால் விடுவதாக ஒரே ஒரு பாடல் குறுந்தொகையில் காணப்படுகிறது. இவ்வாறு ஒரு சில பாடல்களைத் தவிர்த்து மற்றைய மருதப் பாடல்கள் தலைவனிடம் அவன் செய்த தவறுக்காகத் தலைவி ஊடுவதாகவும் அப்போது தலைவன் நாணி நிற்பதாகவும், தன் தவற்றுக்கு வருந்துவதாகவும் பாணனின் செயல்களிலும் எனப் பலவற்றைக் கருவாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன. பரத்தமை ஒழுக்கத்திற்கு விளக்கம் அளிக்கும் வகையில் ‘பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் பரத்தையொழுக்கம் ஒருவகைக் குடும்ப ஒழுக்கம் போலப் பரவிக்கிடந்தது. வரைவின் மகளிர் தம் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் உகந்த சூழ்நிலை சமூகத்தில் நிலவியிருந்தது. இடையறா இன்பப் புணர்வுக் கென்று கணவன் மார்கள் வைப்பு எடுத்துக்கொள்ளும் பழக்கம் சமுதாய மரபுபோல் ஊறிநின்றது’[31] என்னும் வ. சுப. மாணிக்கத்தின் கூற்று அமைந்துள்ளது.

**பரத்தையின் பொருட்டுப் பிரிந்து செல்லும் காலம்**

தலைவியின் கருவுயிர்த்த காலம், மகப்பேற்றுக்காலம், புனிற்றுத் தீட்டுக்காலம், மகவுக்கு முலைப்பால் ஊட்டும் காலம் ஆகிய பாலுறவு தவிர்க்கும் காலங்களில் தலைவன் பரத்தையர் சேரிக்குப் போய் வருவதாகச் சான்றுகள் உள்ளன. தொல்காப்பியர் பரத்தையர் பிரிவைப் பற்றிக் கூறும்போது,

**பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**
**நீத்து அகன்று உறையார் என்மனார் புலவர்**
**பரத்தையின் பிரிந்த காலையான (தொல். பொருள். நூ.187)**

தலைவிக்குப் பூப்புத் தோன்றிய பன்னிரண்டு நாட்களுக்குப் பின் தலைவன் பரத்தையின் பொருட்டுப் பிரிந்து சென்றாலும் திரும்பி வந்து விடுவான் என்று கூறியிருப்பதில் இருந்து பரத்தையின் பிரிவை அறிந்து கொள்ள முடிகிறது.

**கலைகளில் சிறந்து விளங்குதல்**

பரத்தையர்கள் ஆடல், பாடல், முதலிய கலைகளில் சிறந்து இருப்பதை,

**மண்கணை முழவொடு மகிழ்மிகத் தூங்க**
**தண்டுறை ஊரன் எம்சேரி வந்தென (அகம். 76:1-2)**
**ஒண்தொடி மகளிர் பண்டையாழ் பாட**
**ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப**
**தண்ணுறுஞ் சாந்தம் கமழும் தோள்மணந்து**
**இன்னும் பிறள்வயி னானே (அகம். 186: 10-14)**

என்ற பாடல்கள் அடிகளால் அறிந்துகொள்ள முடிகிறது.

**தலைவனின் காதல் மொழி**

தலைவன், தலைவியைவிட்டுப் பரத்தையிடம் சென்றபின் அவளிடம் மயக்கம் தரும் காதல் மொழியைப் பேசுகிறான் ‘என்னை நயந்தனென் என்றிநின்’ (ஐங். 81:4) இதனைக்கேட்ட பரத்தை இந்த வார்த்தையை உன் மனைவி கேட்டால் மிக வருத்தப்படுவாள் என்று அதற்குப் பதில் உரைத்தாள். இதிலிருந்து தலைவன் பரத்தையிடம் காதல் மொழி பேசியிருப்பதை உணரலாம்.

**பரத்தையர்கள்**

சங்கச் செய்யுட்களில் ‘விலை நலப்பெண்டிர்’ புறம். 365:8, ‘விலைக் கணிகை’ (பரி. 20:49), ‘கொண்டிமகளிர்’ (மதுரை. 583) என இடம்பெறும் அடிகளால் பரத்தையர் பொருளின் பொருட்டே தலைவனோடு பழகினார்கள் என்பதை அடையாளப் படுத்துகிறது. ‘தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின்’ (பரி. 20:36) என்ற அடிகளால் தன் மனைவியின் வளையல்களையும் ஆரத்தையும் பரத்தைக்குத் தந்த தலைவனின் முகம் வெளுத்து இருந்ததைத் தலைவிக்குத் தோழி கூறுவதில் இருந்து தலைவன் தலைவியின் அணிகலன்களைப் பரத்தையிடம் கொடுத்துள்ளான் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

தலைவியின் காதணியைக் கழற்றி எடுத்துக் கொண்டு பரத்தையிடம் சென்று கொடுத்ததை ‘ஐய! எம் காதில் கனங்குழை வாங்கிப் பெயர்தொறும்’ (கலி. 80:22) என்ற அடியால் தலைவன் எடுத்துச் சென்ற பொருள் தீர்ந்து போனால் மீண்டும் தலைவியிடம் வந்து எடுத்துச் சென்றுள்ளான்.

பரத்தையர்கள் பொருள் இருப்பவரிடமே பழகுவர் என்பதையும், அவர்களுடைய வாழ்வு பழுமரம் தேடிச் செல்லும் பறவையின் வாழ்வினைப் போன்றது என்பதையும்,

**நுண்தாது உண்டு வறும் பூத் துறக்கும்**

**மென்சிறை வண்டினம்மான புணர்ந்தோர்**

**நெஞ்சு ஏமாப்ப இன்துயில் துறந்து**

**பழம் தேர் வாழ்க்கைப் பறவைபோல (மதுரை. 573-576)**

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

**பாணனின் வரவு**

பாணன் என்ற சொல் ‘பாண்’ என்பதன் அடியாகத் தோன்றுகிறது. இச்சொல்லை விளக்கும் வகையில் அ. சிதம்பரம், ‘பாண் என்பது பண்ணிசைக்கும் ஒருவகையைக் குறிக்க வந்த சொல்லாகும். பாணாற்றுப்படை என்பதிலும் பாண் என்பது பண்ணிசைப்பவனைக் குறிக்கின்றது. பிறகு அச்சொல்லோடு ‘அன்’ விகுதி சேர்த்து பாணன் என்று விளக்குகிறது’[32] என்று குறிப்பிடுகிறார். பாணன் என்பதற்குப் ‘பாடவல்ல ஒரு சாதி’[33] என்று தமிழ்ப் பேரகராதி சுட்டுகிறது.

தலைவனைப் பரத்தையிடம் சேர்ப்பிக்க, பாணன் தலைவியின் இல்லம் வந்தான். அப்போது கன்று ஈன்ற பசு தன்னை நோக்கி வருவதைப் பார்த்துத் தான் வைத்திருந்த யாழைக் கீழே போட்டுவிட்டு வீட்டிற்குள் வந்தவனிடம் தலைவி அவன் முன் சென்று உன் இல்லம் இது அன்று என்று கூறினாள். அதற்குப் பாணன் தலைவியைத் தொழுது நின்றான் என்பதை,

**இம்மனை அன்று அஃது உம்மனைஎன்ற**

**என்னும் தன்னும் நோக்கி**

**மம்மர் நெஞ்சினோன் தொழுதுநின் றதுவே (அகம். 56: 14- 16)**

தலைவனை அழைத்துச் செல்ல தலைவி வீட்டிற்கே பாணன் சென்றதை இவ்வடிகளால் அறிந்துகொள்ள முடிகிறது.

**பரத்தையின் துணிவு**

ஆநிரைக் கூட்டத்தைக் கவர்ந்து செல்லும்போது இடையில் சென்று வழிமறித்து ஆநிரையை மீட்பது போன்ற தன் கணவன்மார்களைத் அவர்களின் சுற்றத்தினருடன் வந்து காத்துக்கொள்ளட்டும் என்ற துணிவோடு பரத்தை பேசுவதை,

**முனைஆன் பெருநிரை போல**

**கிளையொடும் காக்கதன் கொழுநன் மார்பே (குறுந். 80: 6-7)**

என்னும் அடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. பரத்தையின் துணிவான பேச்சால் அச்சப்பட்டு பெண்கள் அனைவரும் பரத்தையிடம் இருந்து கணவனைப் பாதுகாத்ததை,

**காவல் செறிய மாட்டி ஆய்தொடி**

**எழில்மா மேனி மகளிர்**

**விழுமாந்தனர் தம் கொழுநரைக் காத்தே (நற். 320: 8-10)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

தம்முடைய கணவரைக் கைப்பற்றிக் கொண்டு சென்று காவலில் வைத்துப் பரத்தையிடமிருந்து பாதுகாத்தனர் என்பதில் இருந்து அவர்கள் எந்த அளவிற்குத் துணிவுடன் இருந்துள்ளனர் என்பதை அறியலாம்.

தலைவனோடு பரத்தை கொண்ட நட்பினால் ஊரார் பழிச்சொற்கள் கூறினார்கள். இதனைக் கேட்ட பரத்தி மீண்டும் தலைவன் சேரிக்கு வரும்போது அவனைச் சார்ந்த பெண்கள் முன்னே தலைவனை இழுத்துச் செல்கின்றேன் என்று சவால் விடும் தொனியில் பேசியதை,

**சாஅய் ஒதுங்கும் துறைகேழ் ஊரனொடு**

**ஆவது ஆக! இனிநாண் உண்டோ? (அகம். 276: 5-6)**

என்னும் அடிகளின் மூலம் தலைவனிடம் அதிக உரிமையுடைய தலைவியையே மிஞ்சும் அளவிற்குப் பரத்தையின் கூற்று அமைந்ததனை அறியமுடிகிறது.

**பரத்தையின் தோழி**

சங்க இலக்கியத்தில் பரத்தையின் தோழிக்குப் பெரிதும் இடமில்லை. இருப்பினும் பரணரும் ஓரம்போகியாரும் ஒரு சில பாடல்களைப் பாடியுள்ளனர்.

தலைவியும் தோழியும் எவ்வாறு நட்போடு விளங்கினார்களோ அதேபோல் பரத்தையும் அவளது தோழியும் நட்போடு விளங்கினார்கள் என்பதை,

**புதுப்புன லாடி யமர்த்த கண்ணள்**
**யார்மகள் இவளெனப் பற்றிய மகிழ்ந**
**யார்மக ளாயினும் அறியாய்**
**நீயார் மகனையெம் பற்றியோயே (ஐங். 79)**

என்னும் அடிகளின் மூலம் தலைவன், பரத்தையின் கையைப் பற்றி யார் மகள் எனக் கேட்டபோது அதற்குப் பரத்தையின் தோழி நீ யார் மகன் என எதிர் கேள்வி கேட்கும்போது எம் கையைப் பற்றிய நீர் யார் என்ற கேள்வி கேட்பது தலைவியின் தோழி. தலைவன் பிரிவைப் பற்றிக் கூறும்போது 'எம்தோள் பிரிவரிவிலரே' என்று தலைவியின் தோழி எப்படிக் கூறுகிறாளோ அதேபோல் பரத்தையின் தோழியும் கூறுவதில் இருந்து இவர்களுக்கிடையே உள்ள நெருக்கத்தை அறியலாம்.

பரத்தையைவிட்டுப் பிரிந்து சென்ற தலைவன் என்னை விட்டு உடல் அளவிலே பிரிந்து இருக்கிறான். உள்ளத்தால் நம்மைப் பிரியவில்லை என்று தன் தோழிக்குச் சொல்வதை,

**திருந்து இழைப் பணைத்தோள் ஞெகிழ**
**பிரிந்தனன் ஆயினும் பரியலன் மன்னே (ஐங். 39: 3-4)**

என்னும் அடிகளின் மூலம் பரத்தையும் தன் தோழிக்குச் சொல்லும்போது நம்மைப் பிரியவில்லை என்று தோழியைச் சேர்த்தே சொல்கிறாள்.

தலைவன் பரத்தையிடம் சென்று வந்ததை அறிந்த தலைவி அவனையும் பரத்தையையும் திட்டினால் என்ற செய்தியைக் கேள்விபட்ட பரத்தை தன் தோழியிடம் கூறுவதை,

**செறிதொடி தெளிர்ப்ப வீசி சிறிதுஅவண்**

**உலமந்து வருகம் சென்மோ – தோழி (அகம். 106: 8-9)**

என்னும் அடிகளின் மூலம் தலைவனின் இருப்பிடத்தின் அருகே சென்று கைகளை வீசியவாறு உலா வருவோம் வா என்று தன் தோழியிடம் கூறியதை அறியலாம்.

தலைவிக்கு மட்டும் அல்லாது பரத்தைக்கும் தோழி இருந்ததையும் அத்தோழி மதிநுட்பத்தோடு செயல்பட்டதையும் அறிந்துகொள்ள முடிகிறது.

**பரத்தையை அழைத்து வரச்செய்தல்**

தலைவன் பரத்தையின் இருப்பிடம் நோக்கிச் செல்வதோடு மட்டுமல்லாமல் அவனது ஏவலர்களான பாங்கன், விறலியை அனுப்பி பரத்தையைத் தன்னிடம் வரவைத்தான் என்பதை,

**விழவுக்களம் பொலிய வந்து நின்றனளே (நற். 170:4)**

**உண்துறை மகளிர் இரிய குண்டுநீர்**

**வாளை பிறழும் ஊரற்கு (நற். 310: 3-4)**

என்னும் நற்றிணைப் பாடல்கள் வழித் தலைவனின் நிலையைத் தெளிவாக அறிந்துகொள்ள முடிகிறது.

**அலர் ஏற்படுதல்**

தலைவன் பரத்தையோடு நீராடியதைத் தலைவி அறியாது மறைத்த பொழுது இச்செய்தியைப் பலரும் அறிந்ததால் ஊர் முழுவதும் அலர் எழுந்தது. இதனை,

**ஆடினை என்ப புனலே அலரே**

**மறைத்தல் ஒல்லுமோ மகிழ்ந?**

**புதைத்தல் ஒல்லுமோ ஞாயிற்றது ஒளியே? (ஐங். 71: 3-5)**

**பலர்இவண் ஒவ்வாய் மகிழ்ந அதனால்**

**அலர் தொடங் கின்றால் ஊரே மலர (ஐங். 75: 1 - 2)**

என்ற இரண்டு பாடல்களின் மூலம் ஞாயிற்றின் ஒளியை எப்படிப் புதைக்க முடியாதோ அதுபோல் ஊராரின் அலர் வார்த்தையையும் மறைக்க இயலாதவாறு எங்கும் பரவியதை அறியமுடிகிறது.

**தலைவனின் ஊடல்**

தலைவன் பரத்தையோடு கொண்ட உறவை ஊரார் அலர் தூற்றுவதில் இருந்து தலைவி அறிந்து கொள்கிறாள். தன்னை நாடி வரும் தலைவன் பொய்யாகப் பல காரணத்தைக் கூறும்போது தலைவனோடு ஊடல் கொள்கிறாள் என்பதை,

**யாமக்குறை ஊடல் இன்நசைத் தேன் நுகர்வோர் (பரி. 10:32)**

தலைவி தலைவனோடு முந்தைய நாள் இரவில் தாம் கொண்ட ஊடல் தீராது ஊடலோடு காணப்பட்டாள் என்பது மேற்கண்ட பாடலடியின் மூலம் தெளிவாகிறது.

தலைவி தலைவன் உடலில் பரத்தையர் உண்டாக்கிய தழும்புகளான பற்குறி, நகக்குறியோடு தன்னை நாடி வரவேண்டாம் என்று கடிந்து கூறுவதை,

**யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர!**

**வேண்டேன் பெருநின் பரத்தை**

**ஆண்டுச்செய் குறியோடு ஈண்டுநீ வரலே (ஐங். 48: 3 - 5)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

தலைவியின் அழகைப் பற்றிக் கவலைப்படாமல் தலைவனைக் கடிந்து விரட்டுகிறாள் என்பதை,

**தொல்கவின் தொலையினும் தொலைக! சார**

**விடேஎன் விடுக்குவென் ஆயின் கடைஇக் (நற். 350: 5-6)**

எனது அழகு நீங்குவதாயினும் நீங்கட்டும் நீ என் அருகில் நெருங்க அனுமதிக்க மாட்டேன் என்று தலைவனை வெறுத்து ஒதுக்கியிருப்பதை மேற்கண்ட பாடல் விளக்குகின்றது.

ஒரு சில சமயம் தலைவனைத் தலைவி நேரில் கண்டிக்காமல் தன்னுடைய மகனைத் திட்டுவதுபோல் திட்டித் தலைவனை மறைமுகமாகச் சாடுவதை,

**பிறன் பெண்டிர் ஈத்தவை கொள்வானாம்**

**இஃது ஒத்தன் சீத்தை (கலி. 84:17-18)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

**கண்டிக்கும் உரிமை இல்லாதவர்கள்**

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவி, தோழியைத் தவிர்த்து உறவினர்களுக்குக் கண்டிக்கும் உரிமை இல்லை என்பதை,

**தண்புனல் ஆடும் தடங்கோட்டு எருமை**

**திண்பிணி அம்பியின் தோன்றும் ஊர**

**ஒன்தொடி மடமகள் இவனினும்**

**நுந்தையும் ஞாயுங் கடியரோ நின்னே (ஐங். 98)**

என்ற பாடலில் மனைவியைக் காட்டிலும் கணவனின் தாயும் தந்தையும் பரத்தைமை நடத்தைக்காக அவனைக் கண்டிக்க உரிமையுள்ளவர்கள் அல்லர் என்ற அக்கால நடைமுறை வழக்கம் கூறப்பட்டுள்ளது.

**விருந்தோடு வருதல்**

பெண்ணின் சிறந்த பண்புகளைக் குறிப்பிடும் தொல்காப்பியர் விருந்தோம்புதல் ஒரு பண்பாக இருப்பதை,

**கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்**

**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**

**விருந்து புறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள் (தொல்.பொருள். நூ.152)**

என்று எடுத்துரைக்கிறார். அது மட்டுமின்றி ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒன்றாக விருந்தோம்பலை வைத்துள்ளார்.

தலைவன், பரத்தையிடம் சென்று வரும்போது தலைவியின் ஊடலைத் தீர்க்க விருந்தினரையும் உடன் அழைத்து வருவான் என்பதை,

**விருந்துஎதிர் கோடலின் மறப்பல் என்றும்**
**வாடிய பூவொடு வாரல்எம் மனைஎன**
**ஊடி இருப்பே னாயின் நீடாது (கலி. 75: 17-19)**

என்னும் கலித்தொகைப் பாடல் விளக்குகிறது.

விருந்தினர்களை உபசரிப்பின் பொருட்டுத் தன்மீது கொண்ட ஊடலைக் கைவிடுவாள் என்று தலைவன் நினைத்துச் செயல்பட்டதை அறிகிறோம்.

தலைவி ஊடலில் இருக்கும்போது தலைவன் இப்பொழுது விருந்தினர் வந்தால் தலைவியின் ஊடல் தனிந்து அவர்கள் பொருட்டு என்னிடம் பேசுவாளே என்று தலைவன் உள்ளுக்குள் நினைப்பதை,

**எமக்கே வருகதில் விருந்தே! சிவப்பு ஆன்று**
**சிறியமுள் எயிறு தோன்ற**
**முறுவல் கொண்ட முகம்காண கம்மே (நற். 120: 10-13)**

தலைவியின் ஊடலை எப்படியேனும் தனித்து விடவேண்டும் என்ற தலைவனின் எண்ணம் இந்நற்றிணை அடிகளால் தெளிவாகிறது.

**தலைவனின் பணிவு**

தலைவன் தலைவியிடம் பணிந்து போகும் இடமும் உண்டு என்பதைத் தொல்காப்பியர்,

**மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்**

**நினையுங் காலைப் புலவியுள் உரிய (தொல். பொருள். நூ.227)**

என்று குறிப்பிடுகிறார்.

தலைவன் தவறு செய்யும் பொழுதெல்லாம் தலைவியிடம் பணிவாகவே இருக்கிறான். தலைவன் எண்ணற்ற பொய் கூறியும் தலைவி அதனை நம்பவில்லை. இனியும் அவளோடு வாதாட முடியாது என்று நினைத்த தலைவன் தவறு செய்தது உண்மை என்று ஒப்புக்கொள்வதை,

**நல்லாய்! பொய்யெல்லாம் ஏற்றித்தவறு தலைப்பெய்து**

**கையொடு கண்டாய் பிழைத்தேன் அருள்இனி**

**அருளுகம் யாம்யாரேம் எல்லா! தெருள? (கலி. 95: 27-29)**

தலைவன், தலைவியிடம் நீ என்னை ஏற்று அருள்செய்வாயாக என்று இறங்கிக் கேட்பதை மேற்கண்ட கலித்தொகைப் பாடல் உணர்த்துகின்றது.

தலைவன் தம்முடைய சுற்றத்தார் முன் இனிப் பரத்தையரோடு உறவு கொள்ளமாட்டேன் என்று உறுதிமொழி சொன்னதை,

**உடன்ஆடு ஆயமோடு உற்ற சூளே? (ஐங். 31:4)**

என்னும் பாடலடி தெளிவாக்குகிறது.

கணவன், மனைவிக்கு இடையில் பிரச்சனை வரும்போது தலைவன் பலரின் முன்னிலையில் தான் செய்த தவற்றினை இனி செய்யமாட்டேன் என்று உறுதிமொழி கூறியிருப்பதை அறிய முடிகிறது.

**வாயில்களை வேண்டி நிற்றல்**

தலைவன், தலைவி இடையே ஏற்பட்ட ஊடலை நீக்க பாணன், தோழி ஆகியோரின் உதவியை நாடி அவர்களைத் தூதுவனாக அனுப்பி வைப்பான் இதனை,

**இல்லின் எழீஇய யாழ்தழீஇ கல்லாவாய்ப்**

**பாணன் புகுதராக் கால் (கலி. 70: 22-23)**

என்னும் கலித்தொகை அடிகள் காட்டுகின்றன.

இருவருக்கும் இடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்க தூதுவனாகப் பாணன் செயல்பட்டான் என்பதையும் அறியமுடிகிறது.

தலைவன், தோழியிடம் வாயில் வேண்டி நிற்கும்போது அதற்குத் தோழி தலைவியின் வளையல்கள் நெகிழ்ந்தாலும் நெகிழட்டும். ஆனால் நீ நினைத்த இடத்திற்குச் செல்ல உன்னைத் தடுப்பவர் யாருளர்? நீ உன்னுடைய விருப்பத்திற்கு ஏற்பச் செயல்படு என்று கடிந்து சொல்வதை,

**ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க**

**சென்றீ பெரும! நின் தகைக்குநர் யாரோ? (அகம். 46: 15-16)**

எனவரும் அடிகள் மூலம் தோழி, தலைவனிடம் தலைவியின் பொருட்டுக் கண்டிப்புடன் நடந்து கொள்கிறாள் என்பதை அறியமுடிகிறது.

**தோழியின் அறம்**

தலைவனின் பரத்தைமை வழக்கத்தைத் தட்டிக் கேட்ட தோழி பெரியோர் ஒழுக்கம் எதுவென்று அவனிடமே அறம் உரைப்பதை,

**வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்**

**தாழ்சினை உறங்கும் தண்துறை ஊர**

**…………. …………….. ………………**

**மெய்யாண்டு உளதோ, இல்உலகத்தானே? (அகம். 286: 6-17)**

என்ற அடிகளின் மூலம் தோழி, தலைவனுக்கு அறிவுரை கூறும்போது பெரியோர் தமது மனம் விரும்பாத ஒன்றை விரும்பினால் பல கேள்விகள் தமக்குள் கேட்டு மனத்தை நல்வழியில் திருப்பி இல்லறமும் பொருளும் வழுவாத வகையில் தமது தகுதிக்கேற்பத் தம்முடைய விரும்பம் உள்ளதா? என்று ஆராய்ந்த பின்னரே அதன்படி முடிவு செய்வர் அல்லது விட்டுவிடுவர் என்று தெளிவாகத் தலைவனுக்கு எடுத்துக் கூறுகிறாள்.

தலைவனின் பரத்தைமை நடத்தைக்கு அறமும், பெண்ணின் பெற்றோரும், ஊர் அலரும் எதிராக இருந்தன என்பதை ஓரம்போகியார் தமது மருதத்திணைப் பாடல்களில் வலியுறுத்தியுள்ளார்.

பரத்தை, தலைவனை இகழ்ந்து பேசிக்கொண்டே அவனோடு ஊடல் கொண்டு சண்டையிட்ட பிறகு வீதியின் வழியே சென்றாள். அதற்கு மாறாக நீ ஒரு வார்த்தைக்கூட பேசவில்லை. இதுதான் உம்முடைய தலைமைப் பண்பா? என்று தோழி கேட்பதாக அமைந்ததை,

**நெல்லுடை மறுகின் நன்னர் ஊர!**

**இதுவோ மற்றுநின் செம்மல்? (அகம். 306: 8-9)**

என்னும் அடிகளின் மூலம் தலைவனிடம் என்னைப் புகழாது இங்கிருந்து சென்று விடு என்று குறிப்பிடுவதை அறியலாம். தோழி தலைவனுக்கும் தலைவிக்கும் அறத்தைக் கூறியிருப்பதை,

**செய்யோள் நீங்க சில்பதம் கொழித்துத்**

**தாம்அட்டு உண்டு தமியர் ஆகி (அகம். 316: 13-14)**

என்னும் அடிகளின் மூலம் தலைவனைப் பிரிந்து வாழும் மகளிர் திருமகள் நீங்க சிறிதளவு அரிசியைப் புடைத்துத் தாமே சமைத்து உண்டு தனித்து வாழ்வார்கள். அவர்கள் நிலைமை உனக்கு நிகழாமல் இருக்க நீ தலைவனோடு கொண்ட ஊடலைவிட்டு அவனை ஏற்றுக்கொண்டு வாழவேண்டும் என்று கூறியுள்ளதை அறியலாம்.

**தலைவியின் மனமாற்றம்**

பரத்தையிடம் இருந்து வரும் தலைவனின் உடலின் மேல் உள்ள புண்ணைப் பார்க்கும்போதும், விருந்தினர் வரும்போதும் அவனிடம் கொண்டுள்ள மிக்கக் காமத்தினாலும் தலைவனுக்குத் தலைவியின் மேல் உள்ள ஊடல் காணாமல் போய் விடுகிறது.

தலைவன் பரத்தையர் தம் தலைமாலையால் அடித்த புண்ணின் வடுவைக் காட்டிக்கொண்டு நம்மிடம் அன்பில்லாமல் இங்கு வந்தால் கோபம் கொள்ள வேண்டும் என்று உறுதியாக நினைத்திருந்தாலும் அவனைக் கண்டவுடன் என்னுடைய மனம் மாற்றம் கொள்கிறது என்று தன்னுடைய நிலையைத் தோழியிடம் கூறுவதை,

**புலப்பேன்யான் என்பேன்மன்? அந்நிலையே அவற்காணின்**
**கலப்பேன் என்னும்இக் கையறு நெஞ்சே (கலி. 67: 8-9)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

தலைவனைக் கண்டதும் ஊடல் கொள்ளவேண்டும் என்று நினைத்து இருந்தாலும் அவனைக் கண்டவுடன் தழுவும் ஆசை ஏற்படுகிறது என்ற தலைவியின் ஏக்கத்தை,

**ஊடுவேன் என்பேன்மன்? அந்நிலையே அவற்காணின்**
**கூடுவேன் என்னும் இக்கொள்கையில் நெஞ்சே (கலி. 67: 12-13)**
**துனிப்பேன்யான் என்பேன்மன்? அந்நிலையே அவற்காணின்**
**தனித்தே தாழும் இத்தனியில் நெஞ்சே (கலி. 67: 16-17)**

என்னும் கலித்தொகைப் பாடல் அடிகள் விவரிக்கின்றன.

எவ்வளவு பெரிய கோபமாக இருந்தாலும் தலைவனைப் பார்த்தவுடன் அனைத்தும் மறந்து போகும் தலைவியாகச் சங்க காலத்தில் படைக்கப்பட்டு இருப்பதைக் கொண்டு சமூக நிலையை அறியமுடிகிறது.

**ஊடலைக் கைவிடுவதற்கான காரணங்கள்**

பரத்தையிடம் சென்று திரும்பும் தலைவனிடம் தலைவி ஊடல்கொண்டு இருந்தாலும் விருந்தினரை உபசரிப்பதிலும் பொய்ச் சத்தியத்திற்கு அஞ்சுவதாலும் அவன் தன் மகனைத் தழுவிக்கொள்வதைக் காணும்பொழுதும் என் மனம் ஊடலை இறுதிவரை தலைவனிடம் காட்ட முடியாமல் போவதை,

**விருந்துஎதிர் கொள்ளவும் பொய்ச்சூள் அஞ்சவும்**
**அரும்பெற்ற புதல்வனை முயங்கக் காணவும்**

**ஆங்கு அவிந்து ஒழியும்என் புலவி தாங்காது (கலி. 75: 27-29)**

என்னும் அடிகளின் மூலம் தலைவனிடம் கொண்ட ஊடலைக் கைவிடுதற்குச் சங்ககாலத் தலைவி காரணங்களைக் கூறுவதை அறியமுடிகிறது.

**தனித்து வாழ்தல் இயலாது**

தலைவன் தலைவிக்குப் பல இன்னாத செயல்களைச் செய்தாலும் தலைவனைப் பிரிந்து வாழ்தல் தலைவிக்கு முடியாத காரியமாகும் என்பதை,

**நீ எமக்கு இன்னாதனபல செய்யினும்**
**நின் இன்று அமைதல் வல்லா மாறே (குறுந் 309: 7-8)**
**இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார் (பரி. 20:89)**

என்னும் அடிகளின் மூலம் தலைவன் இழிவான செயல்கள் செய்தாலும் அதனை மறந்து தலைவி அவனை ஏற்றுக்கொள்பவளாகவும், தலைவன் இல்லாமல் தனித்து வாழ முடியாதவளாகவும் இருந்து இருக்கின்றாள் என்பதை உணரமுடிகிறது.

**தந்தை மகன் உறவு**

தலைவன், பரத்தையின் பொருட்டுப் பிரிந்து சென்ற பின் தந்தையை நினைத்து அழும் மகனைத் தலைவி தன்னுடைய தோளில் தூக்கி வைத்தாலும் அவன் மீண்டும் அத்தா! அத்தா! என்று தலைவனை நினைத்தே அழுகிறான் என்பதை,

**ஓவாது அடுத்து அடுத்து அத்தா அத்தா என் பான்மாண (கலி. 81:19)**

என்னும் கலித்தொகை அடி எடுத்துரைக்கிறது.

தந்தையின் பாசத்திற்காக ஏங்கிய மகனைத் தலைவி எவ்வளவு சமாதானம் செய்தாலும் அடங்காமல் இருந்தான் என்பதை உணர முடிகிறது.

தலைவன் தன்னுடைய மகனை மார்பில் கிடத்தி வைத்திருக்கும்போது அவன் மாலையைப் பிரித்து விளையாடுவான் என்பதை,

**ஏதிலார் கண்சாய நுந்தை வியன்மார்பில்**

**தாதுதேர் வண்டின் கிளைபடத் தைஇய (கலி. 80: 24-25)**

என்னும் கலித்தொகை அடி எடுத்துரைக்கிறது.

தலைவன் மார்பில் உள்ள மாலையை பிரிக்காமல் இருக்கத் தலைவி தன்னுடைய மார்பில் கிடத்தி வைத்து இருப்பாள். இத்தகைய மகனுக்காகத் தலைவன் தன்னுடைய பயணத்தையே நிறுத்தினான் என்பதை,

**கொடுப்போற்கு ஒல்லான் கலுழ்தலின் தடுத்த**

**மாநிதிக் கிழவனும் போன்ம் என மகனொடு (அகம். 66: 16-17)**

என்னும் அகநானூற்று அடிகள் காட்டுகின்றன.

தலைவன் தன்னை அழகுபடுத்திக் கொண்டு பரத்தையைக் காணச் செல்கையில் தேரோசைக் கேட்டு மகன் தந்தையைக் காண வெளியே வர தலைவன் அவனைப் பார்த்ததும் தன்னுடைய பயணத்தை நிறுத்திவிட்டு மகனை வாரி அனைத்து தன் மார்புறத் தழுவிக் கொண்டான்.

தலைவி, தலைவன் மீது கோபத்தோடு இருக்கும்போது தன்னுடைய மகனை அவனிடம் போகாமல் தடுத்தாலும் மலைச்சாரலில் புலிக்குட்டி பாய்ந்தது போலத் தந்தையின் மார்பில் பாய்ந்து விளையாடியதை,

**தந்தை வியன்மார்பில் பாய்ந்தான் – அறன்இல்லா**

**அன்பிலி பெற்ற மகன் (கலி. 86:32-33)**

என்னும் கலித்தொகை அடிகள் எடுத்துரைக்கின்றன.

தந்தை தன்னைவிட்டுப் பிரிந்து சென்றாலும் தந்தையைப் பார்த்தவுடன் அனைத்தையும் மறந்து விளையாடினான் என்பது தெரியவருகிறது.

**தாயின் அறிவுரை**

தலைவி தன்னுடைய மகனுக்கு நீ தந்தையை ஒத்திருந்தாலும் குணங்களைப் பொறுத்தவரை நான் கூறுவதைப் போலே நடக்கவேண்டும் என்கிறாள். இதனை,

**கன்றிய தெவ்வர்க் கடந்த களம்கொள்ளும்**
**வென்றி மாட்டுஒத்தி பெரும! மற்று ஒவ்வாதி**
**ஒன்றினேம் யாம் என்று உணர்ந்தாரை நுந்தைபோல்**
**மென்தோள் நெகிழ விடல் (கலி. 86: 13-16)**

போர்க்களத்தில் உன் தந்தை பகைவரைப் பெறுவது போல் நீயும் பெறுக. ஆனால் மகளிர் மெலியுமாறு அவர் கைவிடுவதை நீ செய்யலாகாது. அதேபோல் வழக்குத் தீர்ப்பதில் ஒரு பக்கம் சாராமல் கலப்பையில் உள்ள நடுவுநிலைமை தவறாத பகலாணியைப் போல் நீ இருத்தல் வேண்டும். அதுமட்டும் இல்லாமல் விரும்பியவர்க்கு நிறைந்த செல்வத்தை அளிக்கும் உன் தந்தையின் செயலை நீ பின்பற்று, ஆனால் மகளிரைக் கைவிடுகின்ற உன் தந்தையைப் போன்று இராதே என்று கூறுவதாக மேற்கண்ட பாடல் அமைந்துள்ளது. மேலும்,

**கோல்சென்மை ஒத்தி பெரும – மற்று ஒவ்வாதி**
**------------------------------------------------------------**
**மாதர்மென் நோக்கின் மகளிரை நுந்தைபோல் (கலி. 86: 18-23)**
**பெருமான் பரத்தைமை ஒவ்வாதி என்றாள் (கலி. 82:22)**

என்னும் கலித்தொகை அடிகள் எடுத்துரைக்கின்றன.

தலைவி தன்னுடைய மகனுக்கு அறிவுரை கூறும்போது எந்தக் குணத்தைத் தந்தையிடம் இருந்து கடைபிடிக்க வேண்டும் என்பதையும் எதனை நீக்கவேண்டும் என்பதையும் தெளிவாகக் காட்டுவதை அறியலாம்.

**பரத்தையுடன் தலைவி காட்டும் இரக்கம்**

பரத்தையைத் தலைவி வெறுத்து பேசினாலும் ஒரு சில சமயங்களில் அவளோடு இரக்கத்தோடு நடந்து கொள்கிறாள். பரத்தையர்களும் தாய்மைக்காக ஏங்கித் தவித்தனர்.

எம்மோடு சண்டைபோடும் புதல்வனின் தாய் என்பதன் மூலம் பிள்ளைப்பேற்றிற்காக ஏங்கியது தெரியவருகிறது. இதேபோல் ஒரு சமயம் தலைவனின் மகன் தெருவில் விளையாடியபோது அவனை யாரும் அறியாமல் பரத்தை தூக்கி மார்புறத் தழுவி நிற்றவளைப் பார்த்துத் தலைவி அவளிடம் ஏன் அச்சப்படுகிறாய் நீயும் இக்குழந்தைக்குத் தாய்தான் என்று கூறியதை,

**மாசுஇல் குறுமகள்! எவன்பே! துற்றனை?**
**நீயும் தாயை இவற்கு? என யான்தன் (அகம். 16: 12-13)**

என்னும் அகநானூற்று அடிகள் உணர்த்துகின்றன.

பரத்தையின் ஏக்கத்தை அறிந்து தலைவி செயல்பட்டு அவளின் உள்ளக் குமுறலைப் போக்கி இருக்கிறாள்.

**பரத்தையின் வருத்தம்**

தலைவனோடு தனக்குரிய தொடர்பைப் பரத்தி கூறும்போது நீராடுவோர் கொறுக்கச்சித் தட்டையால் செய்த தெப்பத்தை வைத்து நீராடி முடித்த பின்பு அதனை வீசி எறிவதைப் போன்று தலைவன் நீங்கிவிடுவான். இதனை,

**கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்**
**புனல்ஆடு கேண்மை அனைத்தே அவனே**
**ஒண்தொடி மகளிர் பண்டையாழ் பாட**
**ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப (அகம். 186: 8-11)**

தலைவன் தன்னுடன் இன்பம் நுகர்ந்த பின் கொறுக்கச்சித் தட்டைத் தூக்கி எறிவதைப் போல் தன்னையும் தூக்கி எறிந்து விடுவான் என்று பரத்தி தன்நிலையை நினைத்து வருத்துவதை மேற்கண்ட பாடல் விளக்குகின்றது.

**பரத்தையின் மனமாற்றம்**

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையின் இல்லத்தில் தொடர்ந்து தங்கி இருந்தான். அதற்குப் பரத்தி நீ இனி எம் இல்லத்தில் வாழ்ந்து எம்மோடு மகிழ்தல் அரிது அதனால் உன் இல்லத்தரசியுடன் சென்று வாழ்வாயாக என்று கூறுவதை,

**எம்இவண் நல்குதல் அரிது**

**நும்மனை  மடந்தையொடு தலைப்பெய் தீமே (ஐங். 86: 3-4)**

என்ற அடிகள் மூலம் அறியலாம்.

**குடும்ப வாழ்க்கை**

தங்களுக்குள் இருக்கும் இல்லற ஒழுக்கத்தில் தலைவன் தவறே செய்தாலும் அவனைப் பிறரிடம் விட்டுக்கொடுக்காத தலைவியின் நிலையைக் காண முடிகிறது.

**மனைநடு வயலை வேழம் சுற்றும்**

**துறைகேழ் ஊரன் கொடுமை நாணி**

**நல்லன் என்றும் யாமே**

**அல்லன் என்னும்என் தடமென் தோளே (ஐங். 11: 1-4)**

தலைவி குடும்பச் செய்திகள் வெளியில் தெரிய வேண்டாம் என்று கருதி, தலைவன் புறத்தொழுக்கத்தால் தனக்குக் கொடுமை செய்தாலும் பிறரிடம் தலைவனை நல்லவன் என்றே சொல்கிறாள். மேற்கண்ட பாடலின் மூலம் தலைவன், தலைவியிடையே இருந்த இல்லற ஒழுக்கத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள முடிகிறது.

புலவர்கள் பரத்தையர் பிரிவைப் புனையும்போது தலைவன் பரத்தையுடன் சேர்ந்து இருக்கும் காட்சியைக் கூறாமல் பரத்தையிடம் செல்வது நல்ல குடும்பத் தலைவனுக்கு இழுக்கான செயல் என்பதைச் சுட்டிக்காட்டும் வகையில் தலைவி, தலைவனிடம் அச்செயலைக் கடிந்து ஊடல் கொள்வதாகப் படைத்திருப்பது இலக்கியத்தைப் படிப்பவர்கள் தீமையை உணரவேண்டும் என்பதற்காகவே அவ்வாறு படைத்து இருக்கின்றனர் என்ற கருத்திற்கு வலுசேர்க்கும் வகையில் தமிழண்ணல், 'தலைவன்

பரத்தையுடன் இன்புற்றிருந்த நிலைகளைப் புனைந்து படிப்பவர் அவ்இன்பப் பொழுதுபோக்கை நினைத்து மகிழும் ஆர்வத்தை உண்டாக்காமல் அதனைத் தீங்கென நினைத்து ஊடுவதையும் ஊடல் உணர்த்துவதையுமே சங்கப் படைப்பாளிகள் பாடியுள்ளனர்'[35] என்று தம்முடைய ஆய்வுக் கட்டுரையில் கூறியுள்ளார்.

பரத்தை, தலைவியிடமும் தோழியிடமும் தொடர்பு கொண்டவளாகவும் அவர்களுடைய குடும்பச் செய்திகளுடன் தொடர்பு கொண்டவளாகவும் இருந்தாள். தலைவியுடனோ, தலைவனுடனோ சண்டை போடுபவளாக அவள் படைக்கவில்லை என அறிந்து கொள்ள முடிகிறது.

தலைவி களவுக்காலத்தில் ஒன்றும் தெரியாதவளாக இருந்தாலும் தலைவனை வரைவு கொண்ட பிறகு கற்பு வாழ்க்கையில் ஏற்படும் அனுபவம் அவளுக்குப் பல படிப்பினைகளைத் தருவதால் மேன்மையோடே செயல்படுகிறாள் என்பதைத் தொல்காப்பியர்,

**அருமைக் காலத்துப் பெருமை காட்டிய**
**எண்மைக் காலத்து இரக்கத் தானும் (தொல். பொருள். நூ. 150 : 23 - 24)**

தலைவி களவுக்காலத்தில் அரியவளாக இருந்து கற்புக் காலத்தில் எளியவளாக இருந்து தன் குடி மேன்மையடைய செய்கிறாள் என்று குறிப்பிடுகிறார்.

**பேரன் உறவுமுறை**

ஒரு தந்தைக்கு மகன் மகள் ஆகிய இருவரின்மூலமாகப் பிறக்கும் குழந்தை பேரக்குழந்தையாகிறது. சங்க இலக்கியத்தில் கூட்டுக்குடும்பத்தைப் பற்றி அறிய முடியவில்லை, என்றாலும் தலைவன் வாயாலே என் தந்தையின் பேரன் 'மேதக்க எந்தை பெயரனை யாம்கொள்வேம்' (கலி. 81-35) என்று சொல்வதில் இருந்து தலைவனின் தந்தையை அறிய வாய்ப்பு ஏற்படுகிறது. தலைவன் தன்னுடைய மகனைத் தூக்கத் தலைவி அனுமதிக்காதபோது அதற்குத் தலைவன் நான் என் தந்தையின் பேரனைத் தூக்கிக் கொள்வேன் அதாவது என்னுடைய மகனைத் தூக்க அனுமதிக்காவிட்டாலும்

என்னுடைய தந்தையின் பேரனையாவது தூக்க அனுமதிக்க வேண்டும் என்று தலைவியிடம் வேண்டுகிறான்.

தலைவன் தலைவியிடையே இருந்த களவு வாழ்க்கையும் கற்பு வாழ்க்கையும் அறிவதோடு இல்லற ஒழுக்கத்திற்கு ஏற்பத் தலைவி செயல்பட்டவிதம் மற்றும் அக்காலத்தில் இருந்த சமூகக் கட்டமைப்பு முதலியவற்றைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிகிறது.

**தவறுக்குத் தண்டனை வழங்கல்**

சங்க இலக்கிய மக்கள் தம்முடைய சமுதாயத்தில் நடைபெறும் நன்மை தீமையைப் பகுத்துப் பார்க்கும் தன்மை உடையவர்களாக இருந்தனர். அவர்கள் தங்களிடம் வரும் வழக்கினை விசாரிக்க ஊர் பொது அமைப்பின் மூலம் விசாரித்து நீதிவழங்கியதை,

**திருநுதற் குறுமகள் அணிநலம் வல்விய**
**---------------------------------------------------**
**அறனி லாளன் அறியேன் என்ற**
**திறர்இல் வெஞ்கள் அறிகிரி கடாஅய்**
**முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி**
**நீறுதலைப் பெய்த ஞான்றை**
**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே (அகம். 256 :16 -21)**

என்னும் பாடல் உணர்த்துகிறது.

தலைவன் தலைவியிடம் இன்பம் துய்த்துவிட்டுத் திருமணம் செய்துகொள்ள மறுக்கும்பொழுது அங்கு இருந்த சான்றோர்கள் அத்தலைவனை ஒரு மரத்தில் கட்டி வைத்துத் தலையில் நீரினை ஊற்றித் தண்டனை வழங்கினர். அப்போது அத்தலைமகனின் செயலினைக் கேட்ட ஊர்மக்கள் அனைவரும் பழித்துப் பேசினர் என்பதை மேற்கண்ட பாடல் மூலம் அறிய முடிகிறது.

**பொழுதுபோக்கு**

சங்க காலத்தில் மக்கள் உழைக்கும் நேரம் போக மீதி நேரத்தைப் பொழுது போக்கில் செலவழித்தனர். அவர்கள் விரும்பி ஆடும் விளையாட்டாக நீர்விளையாட்டு இருந்தது. இவ்விளையாட்டினை ஆடிய இளைய மகளிர்களைப் பற்றி,

**பழனப் பைஞ்சாய் கொழுதி கழனிக்**

**கரந்தைஅம் செறுவின் வெண்குருகு ஓப்பும்**

**வல்வில் எறுழ்த்தோள் பரதவர் கோமான் (அகம். 226 5-7)**

நீர் விளையாட்டு விளையாடி வெறுப்புக் கொண்ட இளைய மகளிர்கள் பொய்கைக் கரையில் வளர்ந்திருக்கும் கோரைப் புற்களைக் கோதி சாட்டைபோல் வைத்துக் கொண்டு இரை தேடும் நாரைகளை ஓட்டி தனது ஓய்வு நேரத்தைச் செலவழித்தனர் என மேற்கண்ட பாடல் மூலம் அறிய முடிகிறது.

**நானில வாழ்க்கை**

சங்க காலத்தில் நானில மக்கள் ஒருவரோடு ஒருவர் நெருங்கியத் தொடர்பு கொண்டிருந்தனர். இதனால் தமது தேவைகளை எளிதில் பூர்த்தி செய்து கொண்டனர். ஒவ்வொரு நிலத் தன்மைகளுக்கு ஏற்பப் பொருள், உற்பத்தி, தொழில் ஆகியவை மாறுபட்டிருந்தன. நிலத்திற்கேற்பத் தெய்வம் வரையறுக்கப்பட்டாலும் குறிஞ்சிநிலத் தெய்வமான முருகன் பிறநிலத்திலும் வெறியாட்டு எடுக்கும்போது வழிபடும் தெய்வத்தின் வழிபாட்டு முறை பிற நிலமக்கள் பின்பற்றி ஒரு இனக்கமான நல்லுறவை ஏற்படுத்திக் கொண்டனர்.

மருதநிலத் தலைவன், தலைவியைக் கண்டிப்பாகத் திருமணம் செய்து கொள்வதாகக் குறிஞ்சிநிலத் தெய்வமான முருகன் மீது சத்தியம் செய்தான். ஆனால் செய்தவாறு நடக்காததால் எங்குத் தனது தலைவனுக்கு முருகன் கோபம் விளைவித்து விடுவானோ என்று தலைவனுக்காக வருத்தப்படுவதை,

**திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகு சேஎயொடு உற்றசூளே! (அகம். 266: 20-21)**

என்னும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

பல நிலைகளில் முருகனை வழிபடு தெய்வமாக நானில மக்களும் அறிந்து இருந்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

ஒரு நிலத்தில் இருந்து மற்றொரு நிலத்திற்கு இரைதேடும் பொருட்டுக் காட்டுக்கோழி செல்வதை,

**கானக் கோழி கதிர் குத்த**

**மனைக்கோழி தினைக் கவர (பொருந. 222 - 223)**

முல்லைநிலத்துக் காட்டுக்கோழிகள் மருதநிலத்திற்குள் சென்று நெற்கதிரைக் குத்தித் தின்னும். மருதநிலத்து மனைக்கோழிகள் குறிஞ்சிநிலத்திற்குச் சென்று தினையை விருப்பத்தோடு தின்னும் என்பதை மேற்கண்ட அடிகள் உணர்த்துகின்றன. இதேபோல் முல்லைநிலத்துக் கானவர் மருதநிலத்து பண்ணைப் பாடுவர். மருதநிலத்து உழவர்கள் முல்லைநிலத்தைச் சிறப்பித்துக் கொண்டாடினர்.

**கானவர் மருதம்பாட அகவர்**

**நீல்நிற முல்லைப் பல்திணை நுவல (பொருந. 220-221)**

என வரும் அடிகள் இதனை விளக்குகிறது.

மருதநிலத்தில் மக்கள் காற்றில் நெல்லைத் தூற்றியபோது அதிலிருந்து பறந்து போன துரும்புகள் உப்பளத்தின் பாத்திகளில் பரந்து நிறைந்தன. கடற்பரப்பின் துறையில் இருந்த பரதவர் இனிமையான வெள்ளை உப்பு கெட்டமையால் மருதநில மக்களோடு சண்டை போட்டபோது தங்களுக்குள் சகதியை ஒருவர் மீது ஒருவர் எறிந்து சண்டையிட்டனர் என்பதை,

**தீம்பொழி வெள்உப்புச் சிதைதலின் சினைஇ**

**கழனி உழவரொடு மாறுஎதிர்ந்து மயங்கி**

**இருஞ்சேற்று அள்ளல் எறிசெருக் கண்டு (அகம். 366 7-9)**

மருத நிலத்திற்குப் பக்கத்திலேயே நெய்தல் நிலம் இருந்ததால் அவர்கள் ஒருவருக்கொருவர் சண்டை போட்டும் சமாதானம் பேசியும் வாழ்ந்து இருக்கின்றனர். நானிலத்தில் விளைந்த பொருளும் நானில மாந்தர்க்கும் பயன்தருபடி வாழ்ந்தனர். நானிலமும் ஒன்றனோடு ஒன்றிப் பொருந்துமாறு இனிதாக வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

**தொகுப்புரை**

- இனக்குழு வாழ்க்கையில் இயற்கையோடு இயல்பான மனப்போக்கிற்கிணங்க வாழ்ந்த முறை மாறித் தனக்கான உடைமைகளைப் பாதுகாக்கும் குடும்ப அமைப்பு உருவாக்கப்பட்டபோது ஒழுக்கம் என்பது ஆண்ணிற்கும் பெண்ணிற்கும் தனித்து வரையறை செய்யப்பட்டன.
- தனிமனித வாழ்விலிருந்து குடும்பம் என்ற பிணைப்பு முதலில் உண்டானது இதுவே சமூகம் உருவாவதற்கு அடிப்படையாக அமைகின்றது.
- சங்க இலக்கியத்தில் தனிக்குடும்ப அமைப்புமுறையே காணப்படுகிறது.
- அகத்திணைப் பாடல்களில் அறிவுசான்ற பாத்திரமாய் விளங்குபவள் தோழி என்பதும், காதலர் இருவரைக் காட்டிலும் அகத்திணையில் செல்வாக்கு மிக்கவளாகத் தோழி விளங்கியதையும் அறியமுடிகிறது.
- காமக்கிழத்தி என்பவள் பரத்தை போன்று இல்லாமல் தனித்து இருக்கின்றாள் என்பதும் இவர்கள் பொருளின் பொருட்டு ஆடவர்களோடு பழகமாட்டார்கள் என்பதும் சங்க இலக்கியத்தின் வழி அறியமுடிகிறது.
- பரத்தைமையொழுக்கம் சங்க காலத்தில் அங்கீகரிக்கப்பட்ட ஒழுக்கமாக இருந்ததையும் இவ்வொழுக்கம் புலவர்களால் மக்களை நெறிப்படுத்த அதிகம் பேசப்பட்டு இருக்கலாம் என்பதையும் அறியமுடிகிறது.
- மருதநில மக்களின் வாழ்க்கை மற்ற நில மக்களின் வாழ்க்கையைக் காட்டிலும் சிறப்பு மிக்கதாக இருந்ததை அறியமுடிகிறது.
- தவறினை விசாரித்து நீதி வழங்கிய முறை இருந்ததை அறியமுடிகிறது.
- தனிமனித வளர்ச்சிக்குச் சமூகமும் சமூக வளர்ச்சிக்குத் தனிமனிதரும் காரணமாகின்றனர் என்பது பெறப்படுகிறது.
- ஒரு சமூகக் குழுக்கள் மற்றொரு சமூகக் குழுவோடு சென்று பழக எந்தத் தடையும் இல்லை இருப்பினும் எளிதில் ஓரிடமிந்து வேறொரிடம் செல்ல வசதியின்மை மற்றும் பழகிய இடங்களைவிட்டுப் பிரிந்துச் செல்ல விருப்பமின்மை ஆகிய

காரணங்களால் சமூகக் குழுக்கள் ஓரிடத்தில் நிலைத்துத் தங்கிவிட்டதை அறியமுடிகிறது.

- சங்க கால வாழ்க்கையைக் களவு, கற்பு என இரண்டாகப் பிரிந்தனர். களவு என்பது திருமணத்திற்கு முன் நிகழும் காதல் வாழ்க்கையாகும். கற்பு என்பது திருமணத்திற்குப் பின் நிகழும் இல்லற வாழ்க்கையாகும்.
- சங்க இலக்கியத்தில் திணைப்புலம் காத்தல், கடல் நீராடல், சோலையில் தங்கல், சிற்றில் இழைத்து விளையாடல், குரவைக் கூத்தாடல் போன்ற நிகழ்வுகள் தலைவன் தலைவியின் இடையே களவு தோன்ற காரணமாக இருந்தன. இக்களவு ஒழுக்கத்திற்குப் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி போன்றோர்கள் உதவி செய்தனர் என்பதை அறிய முடிகிறது.
- தலைவன் தலைவி இருவரைக் காட்டிலும் அகத்திணைப் பாடல்களில் அறிவு சான்ற பாத்திரமாகவும் செல்வாக்கு மிக்கவளாகவும் விளங்குபவள் தோழி என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.
- தலைவன், தலைவியை தமரறிய ஊரறிய திருமணம் செய்துகொண்டு வாழும் வாழ்க்கை கற்பு வாழ்க்கையாகும்.
- அக்காலத்தில் திருமணம் புரோகிதர் இன்றி மணமக்கள் தம் பெற்றோரும் மற்றோரும் உற்றோரும் உறவினரும் சேர்ந்து மணவினையை நடத்தினார்கள் என்பதை அறிய முடிகிறது.
- சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தர்களில் முதன்மை இடத்தைப் பெறுபவளாகத் தலைவி விளங்குகிறாள். அவளை மையமாகக் கொண்டே மற்ற பாத்திரங்கள் படைக்கப்படுகின்றன. ஐந்திணைகளும் அதன் உரிப்பொருள்கள் அனைத்தும் தலைவியை மையமாகக் கொண்டே படைக்கப்படுகின்றன என்பதை அறிய முடிகிறது.
- தலைவனைக் காமக்கிழத்தியர் திருமணம் செய்துகொள்ளும் உரிமையைப் பெற்று இருந்ததை அறிய முடிகிறது.

❖ சங்க இலக்கியத்தில் பரத்தையர் தோழிக்குப் பெரிதும் இடமில்லை. இருப்பினும் பரணரும் ஓரம்போகியாரும் ஒரு சில பாடல்களில் பரத்தையின் தோழியைப் பற்றிப் பாடியுள்ளனர்.

❖ தலைவன், பரத்தையிடம் சென்று வரும்பொழுது தலைவியின் ஊடலைத் தீர்க்க விருந்தினரையும் உடன் அழைத்து வருவான் என்பதை அறிய முடிகிறது.

❖ பரத்தையிடம் இருந்து வரும் தலைவனின் மீது கொண்ட ஊடல் தலைவனின் மேலுள்ள புண்ணைப் பார்க்கும்பொழுதும் விருந்தினர் வரும்பொழுதும் அவனிடம் கொண்டுள்ள மிக்கக் காமத்தினாலும் தலைவிக்குத் தலைவன் மேலுள்ள ஊடல் காணாமல் போய்விடுவதை அறிய முடிகிறது.

❖ தலைவி தன்னுடைய மகனுக்கு அறிவுரை கூறும்போது தன்னுடைய தந்தையிடமிருந்து எதனைப் பின்பற்ற வேண்டும் என்பதையும் எதனை நீக்கவேண்டும் என்பதையும் தெளிவாகக் கூறுகின்றாள்.

❖ தலைவன் தலைவியிடையே இருந்த களவு வாழ்க்கையும் கற்பு வாழ்க்கையும் அறிவதோடு இல்லற ஒழுக்கத்திற்கு ஏற்பத் தலைவி செயல்பட்ட விதம் மற்றும் அக்காலத்தில் சமூகக் கட்டமைப்பு போன்றவை தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. சி.கலைமகள், இலக்கியக் கட்டுரைகள், ப.71
2. அன்னிதாமசு, சமூகத்திலும் இலக்கியத்திலும் ஊனமுற்றோர், ப.1
3. ஆ.ஜெகதீசன், இலக்கியங்களில் மனித உரிமைக் கோட்பாடுகள், ப.13
4. கலைக்களஞ்சியம், தொகுதி – 1, ப.477
5. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 8, ப.588
6. அ.மு.பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், ப.26
7. கு.வெ.பாலசுப்பிரமணியம், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.1
8. மேலது, ப.2
9. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.311
10. நா.வானமாலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.52
11. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி எட்டு, ப.564
12. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப.16
13. தி.அன்புச்செல்வன், தமிழ் இலக்கணங்களில் சமூக நிறுவனங்கள், ப.55
14. Cencise Oxford Dictionary of Current English, P.436
15. Cambridge International Dictionary of English, P.500
16. கு.வெ.பாலசுப்பிரமணியம், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.34
17. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.52
18. கார்த்திகேசு சிவத்தம்பி, சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும், ப.40
19. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.66
20. மேலது. ப.66
21. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப.99
22. தமிழ்க் கலைக்களஞ்சியம், தொகுதி – 6, ப.505
23. சி. பாலசுப்பிரமணியன், இலக்கியக் காட்சிகள், பக். 40 – 41
24. தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, நூ.60
25. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, நூ. 60

26. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.53
27. Tamil Lexicon, Vol.II, P.781
28. Tamil Lexicon, Vol.I, P.222
29. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.233
30. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, நூ.149
31. இலா.குளோறியா சுந்தரமதி, சங்க இலக்கியம் மருதம், ப.76
32. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல்,ப.302
33. அ.சிதம்பரம், சங்க இலக்கியத்தில் பரத்தமை, ப.208
34. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, தொகுதி – IV
35. உலகத் தமிழர் பண்பாட்டுக் களஞ்சியம், கட்டுரைத் தொகுப்பு, ப.248

# இயல் – 3

## நம்பிக்கைகளும் பண்பாடுகளும்

மனித மனம் இயற்கையைப் புரிந்துகொள்ள முடியாதபோதும் தங்கள் வாழ்க்கையில் நிகழும் பல துன்பங்களுக்குத் தீர்வு காண முடியாதபோதும் மனித மனம் தாமாகவே சிலவற்றைப் படைத்துக் கொண்டு அதற்குக் காரணம் கற்பிக்கிறது. பின்னர் அதுவே நம்பிக்கையாக மாறுகின்றது. நம்பிக்கை என்பதற்கு 'விசுவாசம், ஆணை நம்பியொப்புவிக்கட்டது. உண்மை'[1], என்றும் 'சத்தியம், நிசம், உறுதிப்பாடு'[2] என்ற பொருட்கள் இருப்பதாக முறையே தமிழ் அகராதியும் மதுரைத் தமிழ்ப் பேரகராதியும் குறிப்பிடுகிறது.

முதல் இலக்கண நூலான தொல்காப்பியம் 'நம்பும் மேவும் நகையாகும்மே' (தொல்.எழுத்து.நூ.329) என்று குறிப்பிடுகிறது. நம்பு என்னும் சொல் நகை அல்லது விருப்பம் என்னும் பொருளைத் தருகின்றது. நம்புதல் என்னும் சொல் 'நம்பிக்கை' என்று பொருள்படும்படி நற்றிணையில் வருவதை,

**சேரியன் பெண்டிர் சிறுசொல் நம்பிச்**
**சுடுவான் போல நோக்கு (நற். 175 : 7-8)**

எனும் அடிகள் விளக்குகின்றன.

ஒரு மனிதன் தனக்கானவற்றை அடையவும், தனக்கானவற்றை விட்டுச் செல்லவும் தனக்கானவற்றைத் தேடவும் ஒரு தனி மனிதனாகவும் ஒரு சமூக மனிதனாகவும் தன்னை அடையாளங் காணவும் அவன் பயணித்துக் கொண்டிருக்கிறான்.

'தமிழன் என்றொரு இனமுண்டு தனியே அவனுக்கொரு குணமுண்டு' என்று நாமக்கல் கவிஞர் கூறுவதைப் போன்று தனித்த அடையாளமாக விளங்கும் தமிழ்ச் சமூகப் பண்பாட்டை வெப்ஸ்டர் என்னும் ஆங்கில அகராதி 'மனிதர்களின் ஒரு குழுவானது கட்டமைத்த ஒரு தலைமுறையிடமிருந்து இன்னொரு தலைமுறைக்குக் கடத்திவிட்ட வாழ்க்கை முறைகளின் மொத்தத் தொகுப்பு' என்று விளக்கம் கூறியுள்ளது.

அரசு உருவாக்கத்தில் முக்கியப் பங்கினை வகித்த மருதத்திணையில் வாழ்ந்த மக்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களைத் தாங்களே உற்பத்தி செய்து கொண்டார்கள். தங்களுக்குத் தேவையானதைப் போகப் பிறவற்றைப் பிற திணை மக்களுக்குப் பண்டமாற்று முறையில் கொடுத்தனர். பிற திணையைக் காட்டிலும் ஓய்வு நேரத்தை அதிகமாகக் கொண்ட மருதநில மக்களின் வாழ்வியல் கூறுகளில் மிக முக்கியமானதாக விளங்கக்கூடிய நம்பிக்கை மற்றும் பண்பாடு பற்றி ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**நம்பிக்கையின் தோற்றம்**

மனித இனம் இயற்கையின் செயல்களை உணர இயலாத நிலையிலும், காரணம் அறியாத நிலையிலும் மனம் தன் போக்கில் பதிவு செய்து கொண்ட காரணகாரியங்களே நம்பிக்கையின் தோற்றத்திற்கு அடிப்படை எனலாம். மனித வாழ்வில் நம்பிக்கைகள் எப்படித் தோன்றின என்று திட்டவட்டமாகக் கூற இயலாது என்றாலும் இவை மக்களின் வாழ்வில் தொடர்ந்து இருந்து வருவதை அறியமுடிகிறது. அறிவு நிலைக்கு அப்பாற்பட்ட எண்ணங்களை நம்பிக்கை என்பர். மனிதன் அச்சத்தின் காரணமாக இயற்கையின் சீற்றங்களைத் தனது வாழ்வோடு இணைத்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன எனலாம்.

பழந்தமிழர் பல வகை நம்பிக்கைகளை உடையவராக இருந்தனர். நம்பிக்கை மக்களின் அச்ச உணர்வின் அடிப்படையில் தோன்றியது. ஆயினும் ஒவ்வொரு நம்பிக்கைக்கும் ஏதேனும் ஒரு காரண காரியத் தொடர்பு பின்னணியாக அமைந்து இருக்க வேண்டும் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

நம்பிக்கையைப் பற்றி சு. சக்திவேல் ‘நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்சவுணர்வின் அடிப்படையாகத் தோன்றியனவாகக் காட்சியளித்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராத பொழுதும் மனித வாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத பொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவைகளே நம்பிக்கைகளாக உருவாகின்றன’[3] மேலும்

க.கைலாசபதி ‘நம்பிக்கைகளுக்குக் காரணம் காணுதல் இலகுவன்று’[4] என்று குறிப்பிடுகிறார்.

சிந்திக்கத் தொடங்கிய மனிதன் தான் பார்த்த பொருள்கள் அனைத்தையும் ஆராயத் தொடங்கினான். அவற்றின் உண்மைத் தன்மையைக் காண முயன்றான். அதன் விளைவாகக் கேள்விக் கேட்பதும் அதன் வழியே விடையைக் காண்பதும், அவ்வாறு கண்டுபிடிக்கப்பட்ட விடையின் மீது மேலும் கேள்விகளைக் கேட்பதுமாகத் தனது அறிவை விரிவாக்கிக் கொண்டான். தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் எங்கிருந்தோ ஓர் ஆற்றல் இயக்குகிறது என்று கருதியவன். அதற்கேற்றார்போல அடையாளப்படுத்திக் கொள்ள அதற்குப் பெயர் கொடுத்துக் கதைகளாக மாற்றிக் கொண்டான். இது நம்பிக்கை சார்ந்த இறையியல் கோட்பாடாக வளர்ந்தது.

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுவன. அவை வழக்கில் மிகுதியாகவும் இலக்கியங்களில் குறைந்தும் காணப்படும் அனைத்துப் பகுதியில் இருந்த நம்பிக்கையை ஒட்டுமொத்தமாகச் சொல்லிவிட முடியாது. இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டு இருக்கும் நம்பிக்கைகள் அன்றைய மக்களிடையே பெரும்பாலும் செல்வாக்குப் பெற்றவையே ஆகும். இத்தகைய நம்பிக்கையைப் பற்றி ஆங்கிலப் பேரகராதி ‘பத்தாயிரக்கணக்கான நம்பிக்கைகளும் நூற்றுக்கணக்கானப் போக்குகளும் எண்ணிக்கைக்குட்பட்ட குறிக்கோள்களும் ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் இருக்கும்’ என்று Encyclopedia என்ற ஆங்கிலப் பேரகராதி கூறுகிறது.

மருதத்திணை மக்கள் பேய், அணங்கு என்பனவற்றைத் தீய சக்திகள் என்றும் கடவுள் வழிபாடு என்பது வாழ்விற்கு நன்மை செய்வது என்றும் நம்பினர்.

**சத்தியம் பற்றிய நம்பிக்கை**

தலைவனோ, தேர்ப்பாகனோ தலைவியிடம் தான் கூறும் கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் தெய்வத்தின் மீதோ, தேரின் மீதோ சத்தியம் செய்துள்ளார். அவ்வாறு செய்யும்போது கேட்பவர்கள் நம்பிவிடுவார்கள் என்ற நம்பிக்கை அவர்களிடம் காணப்படுகிறது.

தலைவனுக்குரிய பெண் நீ மட்டுமே என்று பாகன் தேரின் மீது சத்தியம் செய்வதை,

**மடுத்துஅவள் புகுவழி மறையேன் என்று யாழொடும்**
**எடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந்த தீயான்கொல்.     (கலி. 71 :13 - 14)**

என்னும் பாடல் அடிகள் மூலம் பாகன் தலைவியிடம் சத்தியம் செய்து கூறிய முறையை அறிந்து கொள்ளமுடிகிறது.

தலைவி, தலைவன் கூறிய சூளுரைகளை நம்பாதபோது தெய்வத்தின் மீது ஆணையிட்டு சத்தியம் செய்ததை,

**தெய்வத்தான் கண்டீ – தெளிக்கு     (கலி.91:8)**

என்ற பாடலடி குறிப்பிடுகிறது.

மருதத்திணையில் தெய்வம் சார்ந்த நம்பிக்கை இருந்ததையும், அதன்மீது சத்தியம் செய்தால் தீங்கு விளையும் என்ற நம்பிக்கை இருந்ததையும் சங்கப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

தன்னோடு ஊடல் கொண்டு இருக்கும் தலைவியின் ஊடலைத் தீர்ப்பதற்குத் தலைவன் பொய்ச் சத்தியம் செய்வான். அந்தச் சத்தியத்தால் அவனுக்கு ஏதேனும் தீங்கு நிகழ்ந்து விடுமோ? என்று எண்ணித் தன்னுடைய கோபத்தைக் கைவிட வேண்டி உள்ளதே என்று தலைவி எண்ணுவதை,

**பொய்ச்சூள் அஞ்சிப் புலவேன் ஆகுவல்**
**பகல்ஆண்டு அல்கினை பரத்த என்னுயான்**
**இகலி இருப்பே னாயின் தான்தன்     (கலி. 75 :21 - 23)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

இப்பொழுது இருப்பதைப் போன்றே பொய்ச் சத்தியத்தால் நிச்சயம் தீங்கு ஏற்படும் என்ற நம்பிக்கை தொன்றுதொட்டு இருந்ததை அறியமுடிகிறது.

தலைவி வையையில் ஏற்பட்ட புதுப்புனலில் பரத்தையோடு நீராடியதைப் பிறர் மூலமாகக் கேள்விப்படுகிறாள். எனவே, மிகுந்த கோபத்தோடு இருக்கும் அவளிடம் தலைவன் நான் வையையில் நீராடச் செல்லவில்லை. உனக்கு யாரோ தவறான செய்தியைச் சொல்லிவிட்டார்கள். எனவே, அவர்கள் கூறியதை வைத்து நான் கூறுவதைக் கேட்க மறுக்கிறாய். உன்னை நம்ப வைக்க நான் தெய்வத்தின் மேல்கூட சத்தியம் செய்யத் தயாராக இருக்கிறேன் என்று தலைவன் கூறுவதை,

**வையைப் புதுப்புனல் ஆடத் தவிர்ந்ததைத்**
**தெய்வத்தின் தேற்றித் தெளிப்பேன் பெரிதுஎன்னைச்**
**செய்யா மொழிவது எவன்? (கலி. 98: 31-33)**

என்று கலித்தொகை அடிகள் மூலம் தெய்வத்தின் மீது சத்தியம் செய்யும் நம்பிக்கை இருந்ததை அறிந்துகொள்ளமுடிகிறது.

தலைவன் கூறுவது பொய்ச் சத்தியம் என்று அறிந்துகொண்ட தலைவி அவனிடமே தகுந்த காரணத்தைக் கூறி மறுத்தும் இருக்கிறாள் என்பதை,

**நீஉறும் பொய்ச்சூள் அணங்காகின் மற்றுஇனி**
**யார்மேல்? விளியுமோ? கூறு (கலி.88: 20 - 21)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

தலைவன் பரத்தையிடம் சென்று வந்ததை மெய்ப்பிக்கும் வகையில் அவள் அணிவித்த மாலை அணிந்து கொண்டே தன்னுடைய இல்லத்திற்குத் திரும்பினான். வந்தவன் தலைவியின் ஊடலைப் போக்கத்தான் எங்கும் செல்லவில்லை என்று சத்தியம் செய்தான். அதற்குத் தலைவி நீ அணிந்துள்ள மாலையே நீ கூறுவது பொய்ச் சத்தியம் என்பதை உணர்த்துகிறது என்கிறாள். இவ்வாறு சத்தியம் பற்றிய நம்பிக்கையை மருதத்திணைப் பாடல்கள் விளக்குகின்றன.

**நிமித்தம்**

மனிதன் தன் முயற்சியில் ஐயம் ஏற்படும்போது அவனால் முடிவு எடுக்க இயலாத சூழலில் நிமித்தம் பற்றிய நம்பிக்கை மனிதனுக்கு மன ஆறுதலைத் தருகின்றது. அக்கால மக்கள் நல்ல நாள் பார்த்ததோடு சகுனமும் பார்த்தனர். சிற்சில பறவை விலங்குகளின் காட்சியும் அவற்றின் குரல்களும் நன்மை, தீமைகளை அறிவிக்கும் என நம்பியுள்ளனர். ஒன்றை நினைக்கும்போது அது தொடர்பாகச் சொல்லோ செயலோ நிகழ்ந்தால் நினைத்த செயல் சிறப்பாக முடியும் என்பது அக்கால மக்களின் நம்பிக்கை, நிமித்தமானது நன்நிமித்தம், தீ நிமித்தம் என்ற இருவகைப்படும். 'சகுனங்கள் பாமரர்களுக்கு மட்டுமல்ல. மிக முன்னேற்றமடைந்த நாகரிக மக்களுக்கும் உண்டு' எனச் சுட்டுகிறார் வேலண்ட் என்னும் அறிஞர்.

தொல்காப்பியத்தில்,

**அச்சமும் உவகையும் எச்சம் இன்றி**
**நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்** **(தொல். பொருள். நூ. 91 : 16-17)**

என்னும் தொல்காப்பிய நூற்பா நிமித்தம் குறித்து எடுத்துரைக்கிறது.

நிமித்தம் என்ற சொல் 'குறிப்பு' அல்லது அறிவிப்பு என்ற பொருளில் ஆட்சிப் பெறுகிறது. 'நிமித்தம்' என்ற சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி 'காரணம்', 'நிமித்தம்', 'சகுனம்', 'பொருட்டு', 'அடையாளம்'[5] ஆகிய பொருள்களைச் சுட்டுகிறது.

**நற்சொல் கேட்டல்**

ஒரு செயலைத் துவங்குவதற்கு முன் பிறர் கூறும் சொற்களை நிமித்தமாகக் கொள்ளும் வழக்கம் நற்சொல் கேட்டல் எனப்படும். இவ்வழக்கமானது தொன்றுதொட்டே தமிழரிடம் நம்பிக்கையாக வழங்கி வருகிறது. இதனை இலக்கியங்கள் விரிச்சி கேட்டல் எனச் சுட்டுகின்றன. 'விரிச்சி என்பது வருங்காலத்தை விரிவாய் முன்னே தெரிவிப்பதாகும்'[6] என்று குறிப்பிடுகிறார் சு. வித்தியானந்தம். தமிழரின் திருமணத்தைக் குறிப்பிடும் அகநானூற்றின் 136 ஆம் பாடலில் பறவைகள் மூலம் நல்ல சகுனம் பார்த்துள்ளனர் என்பதை,

**புள்ளும் புணர்ந்து இனியஆக தெள்ஒளி (அகம்.136:3)**

என்னும் பாடலடி உணர்த்துகிறது.

சகுனங்கள் பார்த்த பிறகே எந்த ஒரு நல்ல காரியத்தையும் செய்தனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. மேலும் காவல் மிக்க நகரில் அழகிய அணிகலன்கள் அணிந்த மகளிர் நன்னிமித்தமாக நிற்பர் என்பதை,

**பெரும்பான் காவல் பூண்டென ஒருசார்**
**திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப (நற்.40:3-4)**

என்னும் நற்றிணை அடிகளின் மூலம் மங்கல மகளிரைப் பார்த்தால் போதும் காரியம் வெற்றி பெறும் என்ற நம்பிக்கை இருந்திருப்பதை அறியமுடிகிறது.

**வழிபாட்டு முறைகள்**

வழிபாட்டு முறைகள் தொடக்க காலத்தில் அச்சத்தின் விளைவாகத் தோன்றின. இயற்கைக் கூறுகளில் தொடங்கிய வழிபாட்டு முறைகள் நடுகல் வழிபாட்டை எட்டிய நிலையில் உருவ வழிபாட்டிற்கு வழிகோலின. வழிபாடு என்ற சொல் ‘வழிபடு’ என்ற வேர்ச்சொல்லினின்று பிறந்த தொழிற் பெயராகும். வழிபடு என்ற சொல்லுக்கு வணக்கம் வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, பூசனை, வழக்கம் என்று பல்வேறு பொருள்கள் இருப்பதை நிகண்டுகளும், அகராதிகளும் புலப்படுத்துகின்றன. இதற்கு மேலும் விளக்கம் அளிக்கும் வகையில் ‘மக்கள் தம்மைச் சூழ்ந்துள்ளவற்றையும் தமக்குத் தேவையாக இருக்கின்ற நெருப்பு, காற்று, மழை, ஞாயிறு முதலிய இயற்கைப் பொருட்களையும் முதற்கண் வழிபட்டு வந்தனர்’[7] என்று பக்தவச்சல பாரதி குறிப்பிடுகிறார்.

பண்டைத் தமிழ் மக்கள் தங்களின் பழக்கவழக்கத்தின் அடிப்படையிலேயே தாங்கள் நம்பிய கடவுளர்களையும் வழிபட்டு வந்தனர். தனக்கு அச்சத்தைத் தரக்கூடிய ஒன்றை உள்ளத்தால் நெருங்கவும் உணரவும் மனிதன் மேற்கொண்ட வழிமுறையே வழிபாடு ஆகும். மன்னனின் வெற்றிச் சிறப்பைப் பாடும்போதும், மாற்றாரது அரணை

அழித்த வெற்றியைப் பாடும் போதும், மன்னனின் வள்ளல் தன்மையைப் பாடும்போதும், பாட்டுடைத் தலைவனைப் பாடும்போதும் கடவுள் வாழ்த்தோடு பாடல்களைப் பாடத் தொடங்குவர் என்பதை,

**கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே (தொல். பொருள்.நூ. 88)**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

**இயற்கை வழிபாடு**

இயற்கையின் பகுதிகளான நிலம், நீர், தீ, காற்று, மலை, ஆகாயம், ஞாயிறு, திங்கள் போன்ற இயற்கைப் பொருட்களை வழிபடும் தன்மையே இயற்கை வழிபாடாகும்.

மனிதனுக்கு இயற்கையே அச்சம் தரத்தக்கதாய் இருந்தநிலை காலம் செல்லச் செல்ல மாற்றமடைந்து இந்த இயற்கைக்குள் இருந்து இயங்கும் ஏதோ ஒன்று அச்சம் தரத்தக்கதாய் இருக்கிறது என்ற எண்ணம் எழுந்தது. அந்த அச்சம் கடவுள் தோன்ற தொடக்கமாக அமைந்தது.

பழந்தமிழர் இயற்கையைக் கண்டு அஞ்சிய மனநிலையிருந்து கொஞ்சம் தெளிந்து தேறி இயற்கைப் பொருட்களான காடும், மலையும் மரங்களும் நீர்நிலைகளும் அச்சம் தரத்தக்கன அல்ல என்றும் அறிந்து கொண்டாலும் ஏதோ ஒன்று அச்சத்தைத் தரத்தக்கதாக இருக்கிறது என்று எண்ணி அதற்கு அணங்கு என்று பெயரிட்டனர்.

இச்சொல்லை வள்ளுவரும் எடுத்தாண்டு இருக்கிறார்.

**அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலும்என் நெஞ்சு (குறள்.1081)**

தொல்காப்பியரும்,

வழிபடு தெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து (தொல். பொருள்.422:1-2)

எனக் குறிப்பிடுவதை அறியலாம்.

ஒவ்வொரு மனிதனும் பிறப்பும் இறப்பும் பிணியும் விருப்பும் வெறுப்பும் மற்றும் வாழ்க்கைப் பிரச்சனைகள் பலவும் தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கையின் மூலமே நிகழ்கின்றது எனத் துணிவுடன் தெரிந்து கொள்கின்றான்.

மனிதனிடம் ஏற்பட்ட அச்ச உணர்வும் குற்ற மனப்பான்மையுமே வழிபாடு தோன்றக் காரணமாக இருந்துள்ளது. இடி, மின்னல் போன்ற இயற்கைச் சீற்றங்கள் மனிதனுக்கு அச்சத்தை ஏற்படுத்தியது. இதிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அவற்றை வழிபடத் தொடங்கினான். இச்செயல் ஒரு வகையில் அவனுக்கு ஆறுதலையும் நம்பிக்கையையும் ஊட்டியது. இதனால் இயற்கை வழிபாடே வழிபாட்டின் தொடக்கமாக அமைந்துள்ளதை அறிந்து கொள்ளலாம்.

**தாய்த்தெய்வ வழிபாடு**

தொடக்க காலத்தில் வளமை தொடர்பான சடங்குகள் பெண்களைக் கொண்டே மேற்கொள்ளப்பட்டதால் பின்னாளில் பெண்களே வளமையின் குறியீடாகக் கருதி வழிபட்டனர். இதுவே தாய்த்தெய்வ வழிபாடு தோன்றி வளருவதற்குக் காரணமாய் அமைந்தது.

தாய்த்தெய்வ வழிபாடே தமிழர்களின் முதல் பெருந்தெய்வ வழிபாடாக இருந்தது. இந்தியா முழுக்கத் திராவிடர்கள் பரவியிருந்த காலத்தில் தாய்த்தெய்வ வழிபாடு பரவி இருந்தது. தாய்வழிச் சமூகத்தின் வளர்ச்சியாகவே தாய்த்தெய்வ வழிபாட்டைப் பார்க்க வேண்டியுள்ளது.

**கோவில்கள்**

அலைவாய் எனப்படும் திருச்செந்தூர் இன்று போலவே அலை வந்து மோதும் கடல் பக்கத்திலேயே அன்றும் விளங்கியது. முருகப்பெருமான் கோவில் நிலைபெற்றிருத்தலாகிய சிறப்பினைப் பெற்றது. எங்கும் புகழ்ந்து பேசும் நிலையில் அது விளங்கியது. இதனை,

**திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகு சேஎயொடு உற்ற சூளே (அகம். 266 : 20 – 21)**

என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

மக்கள் தாம் கண்ட பொருட்கள் அனைத்திலும் தெய்வத்தின் உருவமாகவே கருதினார்கள். பெருந்தெய்வங்களுக்கும் சிறுதெய்வங்களுக்கும் கோவில் எடுத்து வழிபட்டனர். மன்னர்கள் காட்டை அழித்து மக்கள் வாழ்வதற்கு ஏற்ற இடமாகச் செய்யும் போது வளம் பெறுவதற்கு ஆங்காங்கே நீர்நிலைகள் அமைத்தனர். ஊர்களையும் உண்டாக்கி மக்களைக் குடியேற்றி அப்பகுதியிலேயே கோவிலையும் அமைத்தனர் என்பதை,

**காடு கொன்று நாடாக்கி**

**குளம் தொட்டு வளம் பெருக்கி**

**பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி**

**கோயிலொடு குடி நிறீஇ**

**வாயிலொடு புழை அமைத்து (பட்டி. 283 - 287)**

என்று பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

சங்கத் தமிழர்கள் தாம் போற்றிய தெய்வத்திற்குக் கோயிலெழுப்பிச் சடங்குகள் செய்துள்ளனர் என்பதை அறிந்துகொள்ள அகநானூறு சான்றாக அமைகிறது.

**…….மரஞ்சேர் மாடத்து**

**எழுதணி கடவுள் போகலின் புல்லென்று**

**ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணை (அகம்.167: 14 - 16)**

**கடவுள் போகிய கருத்தாட் கந்தம் (அகம். 307:12)**

என்னும் அடிகள் மூலம் தெய்வ உருவம் அமைத்தல், படையல் செய்தல் போன்ற பழக்கங்கள் இருந்ததை உணரமுடிகிறது. இதனுடைய நீட்சியே நாம் இன்று படையல் இட்டு வழிபடுவதாகும்.

சங்க இலக்கியத்தில் கோயில் இருந்ததையும் தலைவியும் தோழியும் கோவிலைச் சுற்றி வந்தனர் என்பதையும் தலைவி இன்றி அவளுடைய மகனை அழைத்துக் கொண்டு சென்று வணங்கிய பின் தோழி மகனோடு இல்லம் திரும்பியதையும் கலித்தொகை நமக்கு எடுத்துரைக்கிறது.

**புத்தேளிர் கோட்டம் வலம்செய்து இவனொடு**
**புக்க வழிஎல்லாம் கூறு (கலி.82:4-5)**
**கடவுட் கடிநகர் தோறும் இவனை**
**வலங்கொளீஇ வா எனச் சென்றாய் – விலங்கினை (கலி. 84:6-7)**

என்னும் அடிகள்வழி அறியலாம்.

கோவிலை வழிபட்டதோடு வையையும் வழிபட்டனர் என்பதை,

**புகை பூ அவி ஆராதனை அழல் பல ஏந்தி (பரி. 6:11)**

என்னும் பரிபாடல் அடி உணர்த்துகிறது.

வையை ஆற்றில் ஏற்பட்ட புதுப்புனலில் நீராடச் சென்ற மகளிர் தம்முடைய கூந்தலை உலர்த்துவதற்கு அகில் கட்டையையும் சூடிக்கொள்வதற்குரிய மலர்களையும் வையை ஆற்றிற்கு வழிபாடு செய்வதற்குரிய அவிப்பொருள்களையும் கொண்டு சென்றனர் என்பதில் இருந்து வையை ஆற்றை வழிபட்டனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

வழிபாட்டு முறையைப் பொறுத்து மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. சிறுதெய்வ வழிபாடு
2. பெருந்தெய்வ வழிபாடு
3. மத வழிபாடு

### 1 சிறுதெய்வ வழிபாடு

இம்மை நலத்தை மட்டும் மனதில் எண்ணிக் குல முன்னோர்களுக்கும் கூட்டத் தலைவர்களுக்கும் ஆவிகளுக்கும் உயிர்க்காவு கொடுப்பதும் அவற்றைச் சமைத்துப் படைத்து வழிபாடு செய்வதையும் பத்தினி வழிபாடு, வீர வழிபாடு, நடுகல் தெய்வ வழிபாடு போன்றவையும் காத்தாயி, பேச்சியாயி போன்றவற்றையும் முனியாண்டி, மாடசாமி முதலானவற்றையும் வழிபடும் வழிபாடு சிறுதெய்வ வழிபாடாகக் கருதப்படுகிறது.

### 2 பெருந்தெய்வ வழிபாடு

இம்மை நலத்துடன் மறுமை நலத்தையும் எண்ணிக் கொண்டு இருப்பவர்கள் இவர்கள் உயிர்க்கொலை தவிர்த்து அன்பு நெறியில் நன்மை செய்வதுடன் சமய அடையாளங்களை அணிந்து சமய ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து வாழ்பவர்களைப் பெருந்தெய்வ வழிபாடு என்று குறிப்பிடுகிறார்கள்.

### 3 மத வழிபாடு

இம்மை மறுமை நலத்தைப் பற்றி எண்ணாமலும் மதச் சட்ட திட்டங்களைப் பற்றிக் கவலைப்படாமலும் அறவழியில் வாழ்ந்து ஐம்புலங்களை அதன் வழியில் விடாமல் கட்டுப்படுத்தித் தன்னுள்ளே இறைவனைக் கண்டு மெய்ஞ்ஞானம் அடைபவர்களை மத வழிபாட்டினர் என்று குறிப்பிடுகிறார்கள்.

இனக்குழுச் சமூகத்தில் இருந்து அரசுகள் உருவாகி வளர்ந்தபோது ஆள்பவர், ஆளப்படுவோர் என்ற நிலையில் தெய்வங்களும் பெருந்தெய்வங்கள், சிறுதெய்வங்கள் என்ற பிரிவுகளோடு அமைந்தன. பெருந்தெய்வக் கதைகளை மையமாகக் கொண்ட புராணங்கள் உருவாயின. சிறுதெய்வங்களின் கதைகள் பாமர மக்களின் வாய்மொழிப் பாடலாக மலர்ந்தன. வாய்மொழி மரபு காலப்போக்கில் மறைந்தன. ஒரு சில பாடல்கள் பெருவழிபாட்டு முறையோடு கலந்து அதனுள் ஒன்றாகி விட்டது.

**மருதநிலத்தின் வழிபாடு**

மருதநிலத்தில் வாழும் மக்கள் அந்நிலத் தெய்வமாகிய இந்திரனுக்கு ஆண்டுதோறும் விழாக் கொண்டாடினர். இவ்விழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றதாகச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் குறிப்பிடுகின்றன. இந்த விழாவில் மக்கள் மிகுதியாகப் பூக்களைப் பயன்படுத்தினர் என்பதை,

**இந்திர விழாவில் பூவினன்ன (ஐங். 62:1)**

என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. மேலும் தெய்வத்திற்கு நறுமணநீர்த் தெளித்து மலர்மாலைகள் அணிவித்துப் படையல் வைத்து வழிபடுவர். அவ்வாறு வழிபடும் மாலைகளில் வண்டுகள் மொய்க்காது என்பதை,

**நறுவிரை தெளிந்த நாறுஇணர் மாலை**
**பொறிவரி இனவண்டு ஊதல கழியும்**
**உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம் (அகம். 166:5-7)**

என்னும் அடிகளின் மூலம் தெய்வத்திற்கு நறுமணநீர் தெளித்து வழிபடுவதன் எச்சமே தெய்வத்திற்கு நீராட்டும்போது பல வகையான வாசனை வேர்கள் மற்றும் நறுமணப் பொருட்களைப் பயன்படுத்துகின்றனர்.

**பெண்கள் வழிபாடு**

வழிபாட்டில் பெண்கள் அதிக அளவில் ஈடுபட்டனர். இந்திரவிழாவைப் போன்றே தைநீராடலும் பெண்கள் பலர் கூடி ஒன்றாகச் செய்யும் வழிபாடாகும். தை மாதத்தில் நீராடி இறைவனை வழிபட்டால் இளம்பெண்களுக்கு விரைவில் திருமணம் நிகழும் என்ற நம்பிக்கை மக்களிடம் இன்றும் இருக்கின்றது. சங்க காலத்திலும் குளிர்ந்த நீரில் நீராடி நோன்பு மேற்கொண்ட தலைவியைப் பற்றிய செய்தி கிடைக்கிறது.

**தைஇத் திங்கள் தண்கயம் படியும் (நற். 80 : 7)**

என்னும் நற்றிணை அடி உணர்த்துகிறது.

பெண்கள் மூன்றாம்நாள் பிறையைத் தொழுது வழிபட்டனர் என்பதை,

**தொழுதுகாண் பிறையின் தோன்றி யாம்நுமக்கு (குறுந். 178 : 5)**

என்ற குறுந்தொகை அடி எடுத்துரைக்கிறது.

**விழாக்கள்**

ஆடவரும் பெண்டிரும் இளையரும் முதியவரும் ஒன்றாகக் கூடி நின்று கண்டுகளிக்கும் வண்ணம் தெய்வத்திற்குரிய சிறப்பு விழாக்கள் வீதிகளில் கொண்டாடப் பெற்றன என்பதை,

**ஆல்அமர் செல்வன் அணிசால் மகன்விழாக்**
**கால்கோள் என்று ஊக்கி கதுமென நோக்கி (கலி. 83 : 14 - 15)**

என்னும் கலித்தொகைப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

மேலும் ஒவ்வொரு தெய்வத்திற்கும் தனித் தனியே விழா எடுக்கப்பட்டது. ‘விழாக்கள் என்பன மக்கள் ஒன்று சேர்ந்தும் கூட்டுச்சடங்கிலிருந்து தோன்றின எனலாம். மக்களே விரும்பி ஏற்றுக் கொண்டாடும் நிலையில் கூட்டுச்சடங்கிலிருந்து விழா வேறுபட்டு நிற்கிறது.’[8] என்று விழாவைப் பற்றி அருள் பத்மராசன் விளக்கியுள்ளார். விழாவின்போது

ஆறு போன்ற நீண்ட தெருவில் விழா நடைபெற்றது என்பதைத் தெரிவிப்பதாக அமைந்த பாடலில்,

**யாறுகிடந் தன்ன அகல்நெடுந் தெருவில்**
**சாறுஎன நுவலும் முதுவாய்க் குயவ! (நற். 200 : 3 - 4)**

விழாவைப் பற்றி கூறுகிறது.

**உணவு கொடுத்தல்**

வறுமையில் வாடிய பாணர், பொருநர் போன்ற பலரும் விழாவில் கொடுக்கும் உணவிற்காகவே வருவதையும் திருவிழா முடிந்ததும் வேறு இடத்தில் நடைபெறும் விழாவைத் தேடிச் செல்வதையும்,

**அறாஅ யாணர் அகன் தலைப் பேரூர்**
**சாறு கழி வழிநாள் சோறு நசை உறாது**
**வேறு புலம் முன்னிய விரகு அறிபொருந (பொருந. 1 - 3)**

என்ற அடிகள் விழாவில் உணவு கொடுத்தனர் என்ற குறிப்பினைத் தருகின்றன.

**தைந்நீராடல்**

தைந்நீராடலானது இளம்பெண்களால் நிகழ்த்தப் பெறும் ஒரு நிகழ்ச்சியாகும். இது பண்டைத் தமிழரின் பண்பாட்டுத் தொடர்புடையதாகும். மணமாகாத பெண்கள் மார்கழி முழுமதி நாள் தொடங்கித் தை முழுமதி நாள் வரை காலையில் நீராடி நோன்பு இருப்பர். புது மழை பெய்த பின் பெருக்கெடுத்து ஓடும் ஆற்றில் மக்கள் சென்று நீராடித் தங்களின் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதோடு தங்களின் வாழ்வாதாரமாக விளங்கும் நீரை வாழ்த்தி வழிபடும் முறையில் இத்தகைய நீராடல் அமையும். அகநானூற்றில் ஆதிமந்தி ஆட்டனத்தியோடு நீராடிய செய்தியும் அவன் நீரில் அடித்துச் செல்லப்பட்டு ஆதிமந்தி

துன்பம் அடைந்த செய்தி பல பாடல்களில் பதிவாகியுள்ளது. (அகம். 46, 236, 376, 396) பொன்னாலாகிய சங்கு, நண்டு, இறவு, வாளை ஆகியவற்றைப் புதுப்புனலில் இட்டுப் பெண்கள் நெல் விளையவும் பொலியவும் வேண்டியமையும் (பரி.10 : 84 - 86) காமக் குறிப்பில்லாத தோழியர் கூட்டத்தினையுடைய கன்னி மகளிர் அவரவர் தாய்மார் தம் பக்கத்தில் நின்று இருக்க வையையில் இறங்கி தைந்நீராடுவர் என்பதை,

**தாய் அருகா நின்று தவத் தைந்நீராடுதல் (பரி.11 : 91)**

என்ற பரிபாடல் அடி மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

ஐந்தாக வகுக்கப் பெற்ற அழகிய கூந்தலில் மணமலர்களைச் சூடிய பெண்கள் தை மாதத்தில் குளிர்ச்சிப் பொருந்திய ஆழமான குளத்தில் நீராடுவர் என்பதை,

**நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்**
**தைஇத் தண்கயம் போல (ஐங்.84 : 3 - 4)**
**தைஇத் திங்கள் தண்கயம் படியும் (நற்.80 : 7)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

நீராடும் பொழுது வெண்சிறுகடுகைத் தேய்த்து நீராடினர் என்பதை,

**ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்**
**பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்**
**சீர்கெழு மடந்தை ஈர்மை பொருத்த (நற். 40 : 7 - 9)**

என்னும் அடிகளின் மூலம் உணர முடிகிறது.

இதுவே பின்னாளில் மார்கழி நீராடலாகச் சமய நிலையில் திருப்பாவை, திருவெம்பாவை எனச் சமய வழிபாடாக மாறியதை அறிந்துகொள்ள முடிகிறது. தொல்காப்பியர் கூறும் ‘நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி’ (கற்பியல் - 5) என்ற நூற்பா இவ்வழக்கத்தை ஒட்டியதாகவும் இருக்கக்கூடும் என்று எஸ். வையாபுரிப்பிள்ளை கருதுகிறார்.

**இந்திரன் விழா**

இந்திரன் வேதகாலக் கடவுள்களின் சிறப்பு மிக்கவன். ஆரியக் கடவுளருள் இந்திரனே வலிமை மிகுந்தவனாகவும் விளங்கினான் என்பர். மழை வேண்டி எடுக்கப்படும் விழாவில் ஒன்று இந்திர விழா. இந்த விழா நடைபெறுவதற்கு ஊரில் உள்ள மங்கையரை அனைவரையும் ஓர் இடத்தில் கூட்டினர் என்பதை,

**இந்திரவிழாவில் பூவின் அன்ன**
**புன்தலைப் பேடை வரிநிழல் அகவும்**
**இவ்வூர் மங்கையர்த் தொகுத்துஇனி (ஐங்.62 : 1 - 3)**

இந்திரா விழாவின் சிறப்பைப் பற்றி மேற்காணும் ஐங்குறுநூற்றுப் பாடல்வழி அறிந்துகொள்ள முடிகிறது.

சங்க இலக்கியத்தை ஒட்டி எழுந்த சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரண்டு காப்பியங்களிலும் இவ்விழாவைப் பற்றிய குறிப்பு கிடைக்கிறது. களப்பிரர் காலத்திற்குப் பிறகு இந்திரவிழா தமிழகத்தில் வழக்கிழந்து விட்டதை அறியமுடிகிறது.

**காமன் விழா**

இளவேனிற் காலத்தில் மன்மதன் விழா நடைபெற இருக்கிறது. அதை வரவேற்று மதுரையில் மகளிரும் ஆடவரும் வண்டுகள் ஒலிக்கும் சோலைகளில் கூடியிருந்து விளையாட மிக்க விருப்பமோடு அணிகலன்களை அணிந்து கொண்டு வருவார்கள். எனவே இணைந்தவர்கள் பிரியாதீர்கள். நீண்ட காலம் பிரிந்திருப்போர் விரைந்து இணைந்து விடுங்கள் என்று அறிவுறுத்துவதை,

**நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்**
**தேன்இமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்**
**ஆனர் விருப்போடு அணிஅயர்ப காமற்கு**
**வேனில் விருந்தெதிர் கொண்டு (கலி. 92 : 65 - 68)**

என்னும் கலித்தொகைப் பாடலடிகள் காட்டுகின்றன.

இவ்வாறு காமன்விழாவின் சிறப்பைச் சொல்வதின்மூலம் இந்த விழா மருதநிலத்தில் எவ்வாறு சிறந்து விளங்கி இருந்தது என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. இவ்விழா பங்குனி முழுநிலா நாளுக்குப்பின் நடைபெறுவது என்று மு. இராகவையங்கார் குறிப்பிடுகிறார். ஆடவரும் மகளிரும் இன்பமாகப் பொழுதுபோக்கும் ஓர் இன்பவிழா காமன் விழா என்பார்.

**மழைச் சடங்கு**

உயிர் வாழ்வதற்கும் உழவுத்தொழிலுக்கும் அடிப்படை ஆதாரமாகத் திகழ்வது நீர். எனவேதான் வள்ளுவர் ‘நீர்இன்றி அமையாது உலகு’ (குறள். 20) என்று குறிப்பிடுகிறார். இத்தகைய நீருக்குக் காரணமாக இருப்பது மழை. இந்த மழையை வேண்டி சங்க இலக்கியத்தில் சடங்குகள் பல செய்யப்பட்டன. அதிலும் குறிப்பாக மருதநிலம் சார்ந்த உழவர்கள் இம்மழைச் சடங்கினைச் செய்தனர் என்பதை ஐங்குறுநூற்றின் மருதத்திணைப் பாடல்கள் மூலமாகவும் உழவர்கள் தாம் இட்ட பயிர் விளைச்சலுக்கேற்றவாறு மழையை வேண்டுகின்ற போது மிகாமலும் குறையாமலும் பெய்து விளைச்சலுக்கு மழை உதவிய தன்மையை ‘மழைதொழில் உதவ’ (மதுரை.10) என்ற மதுரைக்காஞ்சிப் பாடல்கள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

மருத்திணையில் பதிவாகி உள்ள விழாக்களைக் கொண்டு அக்கால மக்களின் பண்பு நலனையும் நம்பிக்கைச் சார்ந்த சடங்குமுறையையும் அறிந்துகொள்ள முடிகிறது.

**பண்பாடு**

சமுதாயத்திற்கு உள்ளிருக்கும் பண்பாடு பற்றி ஏராளமான இலக்கண வரையறைகள் உள்ளன. பண்பாடு என்ற சொல் மனிதனோடு தொடர்புடையது. இதுவே பிற உயிர்களிடமிருந்து மனிதனைப் பிரித்துக் காட்டுகிறது. வின்ஸ்லோ என்பவர் 1862

ஆம் ஆண்டில் வெளியிட்ட தமிழ் – ஆங்கில அகராதியிலும் “சென்னைப் பல்கலைக்கழகம் 1963 இல் வெளியிட்ட அகராதியிலும் பண்பாடு என்ற சொல் இடம்பெறவில்லை. ஆனால் அதில் பண்பட்டவன், பண்பாடு, பண்பாளன், பண்பு ஆகிய சொற்கள் உள்ளன. பண்பட்டவன் – கல்வியறிவும் அனுபவமும் உள்ளவன். பண்பாடு சீர் திருத்துதல். பண்பாளன் – குணவான் பண்பு பிறரியல்பை அறிந்து நடக்கும் நற்குணம்” என விளக்கம் உள்ளது.[9] பண்பாடு என்பதற்குக் ‘குரோபரும் குளுக்கானும்’ Culture & Critical review of Concepts என்ற நூலில் 160க்கும் மேற்பட்ட வரையறைகளைத் தொகுத்துக் கூறியுள்ளார். பண்பாடு என்ற சொல் ‘Culture’ என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழ் ஆக்கமாக இரசிகமணி டி.கே.சி. யால் முதன்முதலில் அறிமுகம் செய்யப்பட்டது. பண் + பாடு – பண்பாடு என்று ஆனது. ‘பண்பாடு என்பது ஒரு குறிப்பிட்ட மக்கட் கூட்டம் தனது சமூக வரலாற்று வளர்ச்சியினடியாகத் தோற்றுவித்துக் கொண்ட பௌதீகப் பொருள்கள் ஆத்மார்த்தக் கருத்துக்கள் மத நடைமுறைகள். சமூகப் பெருமானங்கள் ஆகியவற்றினதும் தொகுதியேயாகும். ஒரு கூட்டத்தினரின் பண்பாடு என்பது அக்கூட்டத்தினரின் தொழில்நுட்ப வளர்ச்சி உற்பத்தி முறைமை, உற்பத்தி உறவுகள், கல்வி, விஞ்ஞானம், இலக்கியம், கலைகள், நம்பிக்கைகள் ஆகியனவற்றின் தொகுதியாகும்’[10] என்று கார்த்திகேசு சிவத்தம்பி குறிப்பிடுகிறார்.

மக்களின் அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்கம், சட்டம், வழக்கம் முதலியவைதாம் பண்பாடாக மலர்கின்றன என்கிறார் மானிடவியல் பேரறிஞர் டெய்லர். மக்களின் வாழ்க்கை முறைகளின் கூட்டுச்சேர்க்கை பண்பாடு என்கிறார் மாலினோவஸ்கி. கிளைட் கிளக் ஹாசன் என்பவர் தனிமனிதனுடைய நடத்தையைக் கொண்டே சமூகத்தின் பண்பாட்டைக் கணிக்கலாம் என்றார். இதேபோல் பண்பாட்டை விளக்கப் புகுந்த மத்தியூ ஆர்னால்டு ‘மக்கள் அறிந்தவற்றுள்ளும் சிந்தித்தவற்றுள்ளும் சிறந்தவற்றுள்ளும் சிறந்தவற்றால் அறியப்படுவது’[11] என்று கூறுவதாகச் சி. தில்லைநாதன் குறிப்பிடுகிறார். வரலாற்று ஆசிரியர்கள் இலக்கியவாதிகள் பண்பாட்டை ஒழுகலாறு அல்லது வாழ்வியல் (way of life) என்று குறிப்பிடுவர்.

சமூக மானிடவியலாளர் பார்வையில் வாழ்வியலே பண்பாடு ஆகும். அதாவது ஒரு இனத்தின் வாழ்க்கை முறையை வாழ்வியலை நோக்கி அந்த இனத்தின் பண்பாடு என்பர்.

'ஒருவன் தன் பண்புநலன்களை நிரப்புவதிலும் தன்னைச் சூழ்ந்த சமுதாயத்தின் நலன்களைப் பேணுவதிலும் பேரவாக் கொண்டிருக்கும் நிலையே பண்பாடு'[12] மு.பி.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். மானுடவியல் ஆய்வாளரான பக்தவத்சல பாரதி 'பண்பாடு என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பட்ட கருத்துகளும் சமுதாய மரபுரிமையாகப் பெறப்பட்ட நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும் அடங்கிய தொகுப்பாகும்.'[13] என்று விளக்கம் அளித்துள்ளார்.

பண்பு என்ற சொல் தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் இருந்திருக்கிறது. இதனை,

**இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (தொல். சொல். நூ. 297)**

என்ற உரியியல் முதல் நூற்பாவில் இருந்து அறிய முடிகிறது.

பண்பாடு என்பது தனிமனிதனின் நடத்தை அன்று. அது அனைத்து மக்களின் கூட்டு வெளிப்பாடாகும் என்பார் குரோபர். எனவே மனிதன் தான் வாழும் சமுதாயத்தோடு உறவு கொள்ளப் பயன்படுவது பண்பாடாகும் எனலாம்.

பண்பாடு என்பது மாறிக் கொண்டே இருக்கும். எந்த ஒரு பண்பாடும் மாற்றமே இல்லாமல் அப்படியே இருப்பதில்லை என்பார் ஜார்ஜ் பாஸ்டர்.

'பண்பாடு என்பது ஒழுகலாறு தொடர்பான நெறிகளையும் விழுமியங்களையும் வழக்காறுகளையும் கொண்ட ஒரு சிக்கலான தொகுதி'[14] என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகிறது. தெ.பொ.மீயும் பண்பாடு குறித்து, 'பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம்'[15] என்று விளக்கியுள்ளார்.

பண்படுத்தபட்ட நிலத்தை நன்செய் நிலம் என்பர். இந்நிலத்தின் விளைபொருட்கள் விளையும் அதேபோல் பண்பட்ட உள்ளத்திலே நல்ல எண்ணங்கள் தோன்றும்.

பண்படுத்தாத நிலத்தில் எப்படி விளைபொருள்கள் விளையாதோ பண்பற்ற உள்ளத்திலும் நல்ல எண்ணம் தோன்ற முடியாது. ‘ஒருவன் தன் குணநலன்களை நிரப்புவதிலும் தன்னைச் சூழந்துள்ள சமுதாயத்தின் நலன்களைப் பேணுவதிலும் பேரவாக் கொண்டிருக்கும் நிலை பண்பாடு ஆகும்’.[16] என்று ஆ. தட்சிணாமூர்த்தி விளக்கியுள்ளார்.

ஒவ்வொரு நாட்டார்க்கும் இனத்தார்க்கும் மொழியார்க்கும் தனித்ததொரு பண்பாட்டு மரபு இருப்பதனை அவர்களின் வாழ்வியல் முறையின் மூலம் அறிந்துகொள்ளலாம். ஓரினத்தாரின் மொழியாரின் நீண்ட நெடுங்காலமாக அமைந்த பண்பாட்டுக் கூறுகளை அவர்களுடைய இலக்கியங்களைக் கற்பதன் மூலம் தெரிந்து கொள்ளலாம். அந்த வகையில் சங்க இலக்கியத்தைப் படிப்பதன் மூலம் அக்கால மக்களின் பண்பாட்டை உணர்ந்து கொள்ளமுடியும்.

**விருந்தோம்பல்**

சங்க காலத்தில் விருந்தோம்பல் ஒரு சிறந்த பண்பாடாகக் கருதப்பெற்றது. தங்கள் விருந்தினரை வரவேற்று உபசரிப்பதும் வீட்டுக்கு வரும் விருந்தினரை எதிர்நோக்கி இருப்பதும் தமிழரின் சிறந்த பண்பாடாகும். விருந்தினர்கள் உண்ட பின்பே எஞ்சியவற்றையே தாம் உண்ண வேண்டும் என்ற சிறந்த பண்பாடு கொண்டவர்களாகத் தமிழர்கள் இருந்தனர். அவர்களின் சிறப்பை உணர்ந்த வள்ளுவரும் ‘விருந்தோம்பல்’ என்னுமோர் அதிகாரத்தைப் படைத்துள்ளார். விருந்தினரை உபசரிக்கும் முறை பற்றி ‘இனிய முகமலர்ச்சியுடன் இன்சொல் கூறல், கால் கழுவநீர் தருதல், இருக்க மணை தரல், தாம்பூலம் தரல், சோறிடுதல், பருக நீர் தரல், படுக்க இடம் கொடுத்தல், பிராயாணமானால் வழிவிடல்’[17] என்று விருந்தின் சிறப்பைப் பற்றி ஆ. சிங்காரவேலு முதலியார் கூறியுள்ளார். ‘விருந்து என்னும் சொல்லுக்குப் புதுமை என்பது பொருள். எனவே முற்றிலும் புதியவராகத் தம்மிடம் வந்தோரைப் பேணுதலையே விருந்தோம்பல் என்று தமிழர் கருதினர்’[18] என்று விளக்கம் தருகிறார் ஆ.தட்சிணாமூர்த்தி.

**‘வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்’ (திரி.12-2)**

எனத் திரிகடுகம் கூறுகிறது. இவற்றால் விருந்து பற்றிப் பழந்தமிழர் கொண்டிருந்த மதிப்பீடுகளை உணரமுடிகிறது. இதேபோல் சிறுபாணாற்றுப்படையும் விருந்து என்பதற்குப் புதியதாய் வருபவரைக் குறிக்கும் என்று குறிப்பிடுகிறது.

வீட்டில் பொருட்களைக் காத்து இல்வாழ்க்கை நடத்துவதெல்லாம் விருந்தினரைப் போற்றி உதவி செய்யும் பொருட்டே என்பதை,

**இருந்துஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி**
**வேளாண்மை செய்தல் பொருட்டு (குறள்.81)**

என்று திருவள்ளுவர் விருந்தின் சிறப்பை எடுத்துக் கூறியுள்ளார்.

பண்டைத் தமிழர்கள் தாங்கள் கடைபிடித்த பண்புகளில் விருந்தோம்பல் பண்பாடு தனிச்சிறப்புடையது. தங்கள் இல்லத்தை நாடி வந்தவர்கள் எவராக இருந்தாலும் அவர்களை மகிழ்ச்சியோடு வரவேற்று உபசரித்து அனுப்புவதைக் கடமையாகக் கருதினார்கள். விருந்து போற்றுதல் மகளிர் கடமைகளில் தலையாய ஒன்றாக இருந்தது என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். தலைமக்களின் பண்புகளைக் குறிப்பிடும் பொழுது,

**கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும் (தொல். பொருள். நூ.152 : 1-3)**

என்றும் தொல்காப்பியக் கற்பியல் நூற்பா,

விருந்தோம்பலையும் சுற்றம் ஓம்புதலையும் தலையாய அறமாகக் கொண்டு தலைவி திகழ்ந்தாள் என விளக்குகிறது.

**விருந்து உபசரிப்பு**

ஒரு இனக்குழு மக்களுக்கும் பிறிதோர் இனக்குழு மக்களுக்கும் பாலமாக விருந்து என்பது இருந்திருக்கிறது. விருந்தினருக்குச் சமைப்பதற்கு வீடுதோறும் கீரையும் காய்கறி செடி கொடிகளும் இருந்தன என்பதை,

**.........சிறீறி லாங்கன்**

**பீரை நாறிய சுரையிவர் மருங்கின்      (புறம்.116 : 5 - 6)**

என்னும் அடிகளால் அறியலாம். மேலும் மற்றொரு புறநானூற்றுப் பாடல் அதிக எண்ணிக்கையில் விருந்தினர் வந்தாலும் அவர்களின் மனம் வருத்தப்படாமல் உணவினைப் பரிமாறும் பண்பினை,

**தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்**
**தீள்நெடும் பந்தர் ஊன்முறை ஊட்டும்**
**இறப்பொலி மகடூஉ ...........              (புறம்.331 : 7 - 9)**

என்னும் அடிகளின் மூலம் சங்க இலக்கியத்தில் தமிழ் மக்கள் வீட்டிற்கு எத்துணை விருந்தினர் வரினும் உணவு குறைவாக இருப்பினும் மனம் கோணாது நெடிய பந்தலிலே அமரச்செய்து உணவினைப் பரிமாறும் பண்புடையவர்களாய்த் திகழ்ந்தனர் என்பதை அறியமுடிகிறது.

சங்க காலத்தில் இரவலனாக வரும் பாணனைப் புரவலர்கள் போற்றி வரவேற்று உபசரித்தனர் என்பதை,

**இரந்தூண் நிரம்பா மேனியொடு**
**விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே     (குறு. 33 : 3 - 4)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

பாணன் அக்காலத்தில் அனைவரும் விரும்பி ஏற்கக் கூடியவனாக வாழ்ந்து இருக்கின்றான் என்பது இதன்மூலம் தெளிவாகிறது.

**தலைவியின் வேண்டுதல்**

போருக்குச் சென்ற தலைவன் வெற்றியோடு திரும்பி வர வேண்டும் என்று தலைவி நடுகல்லை வணங்கித் தன் வேண்டுதலைக் கூறியபோது அவற்றுள் முதன்மையானதாக நாள்தோறும் விருந்தினர் வரவேண்டும் என்பதே அவளின் விருப்பமாக இருந்ததை அள்ளூர் நன்முல்லையார் பதிவு செய்துள்ளார்.

**விருந்துஎதிர் பெறுகதில் யானே என்ஐயும் (புறம். 306 : 5)**

என்பதன் மூலம் அக்கால மகளிரின் விருப்பமாக விருந்தோம்பல் இருந்தது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

பிற மக்களைக் காட்டிலும் வேளாளர்களே விருந்து உபசரிப்பில் அதிகம் ஈடுபட்டனர் என்பதை 'வேளாளரல்லாத பிறர் பிறர்க்கு உதவி செய்தல் அரிதாயிருக்கின்றது. எனவேதான் ஈகையும் விருந்தோம்பலும் வேளாளர்க்கே சிறந்தனவாக வைத்து நூல்கள் பின்னப்பட்டுள்ளன.'[19] என்று மறைமலையடிகள் கூறியுள்ளார்.

**விருந்தோம்பலைப் போற்றியமைக்கான காரணங்கள்**

விருந்தோம்பலைப் பெரிதாக அன்றைய சமூகம் போற்றியமைக்குக் காரணத்தை ஆ.தட்சிணாமூர்த்தி, 'இன்றுபோல் அன்று உணவு விடுதிகள் இல பண்டமாற்றே வழக்கிலிருந்தது. எனவே பழக்கமில்லாதவரிடம் பணம் கொடுத்து உணவு பெறல் இயலாததாக விருந்து உணவுக்கு வேண்டிய பொருள்களைப் போகுமிடமெல்லாம் சுமந்து போதல் கடுஞ்சுமையாம் போக்குவரவுக்குரிய வசதிகள் இல்லாத அந்நாளில் பெரும்பாலோர்க்கு கால்நடைப் பயணமே நடக்கக் கூடிய ஒன்றாக இருந்தது'[20] என்று குறிப்பிடுகிறார்.

பயணக் கலைப்பு நீங்க முன்பின் அறியாதவர் வீடுகளில் தங்கி ஓய்வு எடுக்கும் பொழுது அவர்களுக்குத் தேவையான உணவினைப் பரிமாறி நல்ல முறையில் உபசரித்து அனுப்பி வைத்தனர். எனவேதான் உண்பதற்கு முன் வீட்டின் அருகே யாரேனும் இருக்கின்றனரா என்று பார்க்கும் முறை ஏற்பட்டது. அக்காலத்தில் ஓர் இடத்தில் இருந்து வேறொரு இடத்திற்குச் சென்ற பலரின் பயணமே விருந்தோம்பலைப் போற்றியமைக்குக் காரணமாக அமைந்தது என்பதை அறியலாம்.

**ஊடல் கொள்ள நேரம் இல்லாத் தலைவி**

சங்க காலத்தில் பரத்தையருடன் செல்லும் கணவர்களைச் சங்கப் பாடல்கள் காட்டும். இவ்வாறு பரத்தையிடம் சென்று திரும்பும் தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் ஏற்பட்டுவிடும். ஆனால் நற்றிணைக் காட்டும் ஒரு தலைவி விருந்தினர் வருகையால் பரத்தையரிடம் சென்று திரும்பிய தன் கணவனிடம் ஊடல் கொள்ளக்கூட நேரமில்லையாம். அப்படி என்றால் அந்தப் பெண்ணின் விருந்து உபசரிக்கும் தன்மை எவ்வாறு இருந்திருக்கும் என்று நமக்குப் புலப்படுகின்றது.

**கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழங் கொக்கின்**

**கூம்பு நிலை அன்ன முகைய ஆம்பல்**

**…………………………………………**

**நன்மனை நனிவிலிருந்து அயரும்**

**கைதூவு இன்மையின் எய்தா மாறே (நற். 280 : 1 - 10)**

வீட்டில் விருந்தினர்கள் இருக்கிறார்கள் அவர்களை உபசரிக்க வேண்டும். இந்த வேளையில் நாம் ஊடல் கொள்ளக் கூடாது என்பது அந்தத் தலைவியின் எண்ணமாக இருந்தது. மேற்கண்ட பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் மற்றொரு பாடலில் தலைவி தன் ஊடலைக் கைவிட வேண்டியுள்ளதற்கானக் காரணத்தைக் கூறும்பொழுது,

**விருந்துஎதிர் கோடலின் மறப்பல் என்னும்**

**வாடிய பூவொடு வாரல் எம்மனை என**

**ஊடி இருப்பே னாயின் நீடாது (கலி. 75 : 17 - 19)**

என்னும் அடிகளின் மூலம் தலைவனின் செயலால் தலைவி ஊடலில் இருந்தபொழுது தலைவன் தன்னுடன் விருந்தினரை அழைத்து வரும்பொழுது அவர்களைப் பேணும் பொருட்டு தலைவனிடம் கொண்ட ஊடலைக் கைவிட வேண்டி உள்ளது. இதனால் தலைவன் திருந்துவதற்கானச் சூழலே இல்லாமல் போகின்றதே என்று தலைவி வருத்தப்படுவதை அறிந்துகொள்ள முடிகிறது.

**அணிகலன்கள்**

மக்களின் பண்பாட்டினை உறுதி செய்யும் சான்றுகளில் அணிகலன்கள் முக்கியமானவை. ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் வயது வித்தியாசம் இன்றி அணிகலன்கள் அணிந்து கொண்டனர். செல்வச் செழிப்பு மிக்கவர்கள் உலோகங்களாலும் ஏழ்மையில் இருந்தவர்கள் சங்கு, மூங்கில், தழை, பூ முதலிய இயற்கையில் கிடைத்த தாவரங்களின் பாகங்களில் இருந்தும் அணிகலன்கள் அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டனர்.

அணி, பூண், இழை, கலம், தொடி, குழை, வளை எனும் சொற்கள் அணிகலன்களைக் குறித்து வந்தன. அணிவதால் அணியென்றும் பூணப்படுவதால் பூண் என்றும் இழைத்துச் செய்யப்படுவதால் இழை என்றும் அழைக்கப்பெற்றன.

**குழந்தை அணிகலன்கள்**

**ஐம்படைத் தாலி**

பிறந்த ஆண் குழந்தைக்கு ஐம்படைத் தாலி என்னும் அணிகலனைக் குழந்தை பிறந்த ஐந்தாம் நாளில் கழுத்தில் அணிவித்தனர். காத்தற் கடவுளான திருமாலின் ஆயுதமான சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்னும் ஐந்து உருவங்கள் பொறிக்கப்பட்டதாக அமைக்கப்படும். இத்தாலியைப் பற்றி,

**பொன்னுடைத்தாலி என்மகன் ஒற்றி (அகம். 54 : 18)**
**தாலி களைந்தன்னும் இலனே (புறம். 77 : 7)**
**நலங்கிளர் ஒண்பூண் நனைந்தரும் அவ்வாய் (கலி. 86 : 4)**

என்ற பாடலடிகளின் மூலம் ஐம்படைத் தாலியைப் பற்றித் தெரியவருகிறது.

காளை உருவம் பொறித்த சிறுமாலையும் ஆண் சுறாமீனின் உருவம் பொறித்த மோதிரமும் அணிந்ததை,

**தொடக்கத்துத் தாய்உழைப் புக்காற்கு அவளும்**

**மருப்புப்பூண் கையுறை யாக அணிந்து     (கலி. 82 : 11 - 12)**

**சுறாஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்     (கலி. 84 : 24)**

கலித்தொகையின் என்னும் அடிகளின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. மேலும் காலில் சதங்கை பொன்னால் ஆகிய காசுமாலை அதற்குமேல் பவளமாலை பொன் வளையல் கழுத்தில் அணிந்துள்ள பவளமாலை தலையில் சூடிய முத்தும் இரத்தினங்களும் கோத்த மூன்று வடச்சங்கிலி, தலைமாலை, அதற்குப் பொருத்தமான இரத்தின மாலை இவ்வாறு பல அணிகலன்களை அணிந்து தன்னுடைய மகன் தேரை இழுத்துக் கொண்டு வந்தான் என்பதை,

**கடிஅரணம் பாயாநின் கைபுனை வேழம்**

**…………………………………………….**

**போர்யானை வந்தீக ஈங்கு!           (கலி. 86 : 7 - 10)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

இந்த வகையான அணிகலன்கள் மட்டும் இல்லாமல் மேலும் பல வகையான அணிகலன்களைப் பற்றி (கலி. 85, 81, 80, 79) ஆகிய கலித்தொகைப் பாடல்களில் அணிகலன்கள் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**பெண்களின் அணிகலன்கள்**

பெண்கள் வளையல், மோதிரம், தண்டை, காதணி, தலையின் முன்புறத்தில் அழகாகச் செருகி வைத்த வயந்தகம், தோள்வளையல், முத்துவடம் ஆகிய அணிகலன்களை அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். வளையல் பற்றி (நற். 70 : 8 – 9, கலி.  69 – 9, கலி. 71 – 16, ஐங். 76 : 6, ஐங். 92 : 4, அகம். 336 : 22), மோதிரம் பற்றி (அகம். 386 : 13), தண்டை (கலி. 75 : 1 - 3), காதணி (கலி. 80 : 22 - 23), வயந்தகம் (கலி. 79 : 4 - 5), தோள்வளை, முத்துவடம் பற்றி (கலி. 92 : 26 - 29) ஆகிய பாடலடிகள் தெளிவாக வகைபடுத்திக் காட்டியுள்ளன.

**ஆண்களின் அணிகலன்கள்**

ஆடவர்கள் அணிகலன்களை அழகுக்காக அணிந்ததைவிட தம் வீரத்தைப் புலப்படுத்த மிகுதியாக அணிந்தனர். கழுத்தில் அணிந்த புலிப்பல் தாலி கைகளில் அணிந்த தொடி, காலில் அணிந்த கழல், மார்பில் பல்வேறு ஆரங்கள், முத்துவடங்கள், தலையில் பொற்பூ போன்றனவும் அவர்களால் அணியப்பட்டன.

**பல்காழ்முத்து அணிஆரம் பற்றினன் பரிவானால்**

**மாண்இழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பின் (கலி. 79 : 12 - 13)**

தலைவன் மார்பில் முத்துமாலையை அணிந்து இருந்ததை இக் கலித்தொகை அடிகளால் அறிந்துகொள்ள முடிகிறது.

இவ்வாறு குழந்தைப் பருவ அணி, சிறுவர் அணி, சிறுமியர் அணி, காளையர் அணி, கன்னியர் அணி, மணமான பின்னர் அணியும் அணி என்ற பல அவரவர் வசதிக்கேற்ப அணிகலன்களை அணிந்து கொண்டனர்.

**உழத்தி அணிந்த அணிகலன்கள்**

வயல்வெளிகளில் வேலை செய்த உழத்தி அணியும் அணிகலன்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

**மாஇருங் கூந்தல் மடந்தை**

**ஆய்வளைக் கூட்டும் அணியுமார் அவையே (நற். 60 : 10 - 11)**

உழத்தி கோரையும் நெய்தலையும் வளையல்களாகவும் ஆடையாகவும் அணிந்து கொண்டாள் என்பதை நற்றிணையின் பாடலடிகள் குறிப்பிடுகிறது.

**உடைகள்**

ஆரம்ப கால மனிதன் விலங்கோடும் பறவைகளோடும் உணவுக்கும் உறையுளுக்கும் போட்டியிட்டான். எனவே அவனால் உடை பற்றி அதிகமாக அன்று கவலைப்படவில்லை. பறவைகளும் விலங்குகளும் உடுத்தவில்லை என்ற காரணத்தால் அவற்றோடு ஒன்றற கலந்து வாழ்ந்தான். ஆயினும் தனது அறிவைப் பயன்படுத்தித் தாம் அவற்றினும் வேறுபட்டவன் என்பதை உணர்ந்து தன் உடலுறுப்புகளைத் தழையாலும்

தோலாலும் மறைத்துக் கொண்டான். பின்னரே அவன் பல உடைகளைப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டான்.

அக்கால மக்களின் நாகரிக அடையாளத்தைக் காட்டுவதில் ஆடைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. மனிதர்கள் ஆரம்ப காலத்தில் காட்டுமிராண்டியாய் வாழ்ந்த பொழுது தன்னுடைய மானத்தை மறைக்கத் தழை ஆடையை அணிந்தனர். தாழை, நெய்தல், ஞாழல் ஆகிய மலர்களில் ஏதேனுமொன்றைத் தாழைத் தண்டிலும், நெய்தல் தண்டிலும் வைத்துத் தொடுத்து இடையிடையே அவற்றின் இலை மற்றும் தழைகளால் மாறுபடத் தைக்கப்பட்ட தழையாடைகளை உடுத்தியிருந்தனர் என்பதை,

**தழை அணிந்து அலமரும் (நற்.320 : 3)**

என்னும் நற்றிணைப் பாடலடி குறிப்பிடுகிறது.

தழை ஆடையை அணிந்த முறையைப் பற்றியும் ஒவ்வொரு திணையில் வாழ்ந்த மக்கள் அணிந்த ஆடையைப் பற்றிக் கூறும்போது "ஆம்பல் மலர், குவளை மலர் இரண்டையும் கோர்த்த ஆடையையும் கோரைப் புற்களால் தைக்கப்பட்ட ஆடையையும் இடையில் உடுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டன. ஆடு மேய்க்கும் இடையர்கள் இடையில் ஒற்றையாடையையும் வீரர்கள் இடையில் இறுக்கிக் கட்டப்பட்ட கச்சையாடையையும் கட்டியிருந்தனர். ஆறலைக் கள்வர்கள் செந்துவர்வண்ணம் கொண்ட ஆடையைப் பயன்படுத்தினர்."[21] என்று மு.கவிதாதேவி குறிப்பிடுகிறார்.

**தழையுடைகள்**

உடைகள் மரவுரி, தழையுடை என இரு வகைப்படும். மரஉரி ஆண்கள் அணிவது தழையுடை பெண்கள் அணிவது இதுதவிர பட்டாலும் பருத்தியாலும் நெய்யப்பட்ட உடைகளையும் மக்கள் அணிந்திருந்தனர். ஆடைக்கு, கலிங்கம், உடுக்கை, திரி போன்ற சொற்கள் உள்ளன.

தழையாடை என்பது தழையாலும் மலராலும் தளிர்களாலும் அமைக்கப் பட்டிருக்கும் உடையாகும். இத்தகைய உடையைப் பற்றி,

**அயவெள் ளாம்பல் அம்பகை நெறித்தழை (குறுந். 293 : 5)**

**தழைஅணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி (குறுந். 295 : 2)**

**மணல் ஆடு மலிர்நிறை விரும்பிய ஒண்தழைப் (ஐங். 15 : 1)**

**வயல்மலர் ஆம்பல் கயில்அமை நுடங்குதழைத் (ஐங். 72 : 1)**

**வண்ண ஒண்தழை நுடங்க (ஐங். 73 : 1)**

முதலிய சங்க இலக்கிய அடிகளில் இருந்து பரத்தை ஒருத்தி தழையுடை அணிந்து கொண்டு தலைவனைக் காண வருவதாகவும் நீராடிய முறையும் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. செவிலித்தாயோ நற்றாயோ தழையுடையினை அணிந்ததாகச் செய்திகள் காணப்படவில்லை. எனவே தழையுடையினை இளமகளிர் மட்டுமே அணிந்தனர் எனக் கருத வாய்ப்புள்ளது.

ஆடையைக் குறிக்க 'உடை, ஆடை, தழை, நாருடை, துகில், கலிங்கம், அறுவை, சித்தார், தானை, காழகம், மடி, பட்டு, பூங்கரை, நீலம், தூசு, புட்டகம், கம்பல், நூல், வாலிது, கச்சு, கச்சை, மெய்ப்பை, உத்தரியம், போர்வை, கவசம், அரத்தம், ஈர்ங்கட்டு, கோடி, கூறை, புடவை, வட்டுடை, வங்கச்சாதர், வட்டம், கோசிகம், காம்பு, நேத்திரம், நீவி, கலை, இரட்டு, பீதகம், கோபம், பரியட்டக்காசு, தேவாங்கு'[22] என்பன ஆடைகளைக் குறிக்கும் 36 வகைச் சொற்களைப் பகவதி குறிப்பிடுகிறார்.

**ஆடையின் சிறப்பை உணர்த்தும் பழமொழிகள்**

ஆடைகள் அணியும் பழக்கம் தமிழர்களிடம் பழங்காலந்தொட்டே இருந்து வந்துள்ளது. அதன் அடிப்படையில் உண்பது நாழி உடுப்பது இரண்டு, கந்தையானாலும் கசக்கிக்கட்டு, ஆள்பாதி ஆடைபாதி, ஆடை இல்லாதவன் அரைமனிதன் என்பன போன்ற பல பழமொழிகள் ஆடை மனிதனுக்கு இன்றியமையாதன என்பதை உணர்த்துகிறது.

சிலப்பதிகார உரையில் 'துகில்' முதலாகப் 'பணிப்பொத்த' ஈறாக முப்பதாறு வகையான ஆடைகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

வண்ணங்களால் நெய்யப்பட்ட ஆடையையும் மக்கள் அணிந்தனர் என்பதைப் பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி முதலான நூல்களிலும் இதற்கான குறிப்புகள் கிடைக்கின்றன.

**நீலக் கச்சை பூவா ராடை (புறம். 274 : 1)**

என்னும் புறநானூற்றுப் பாடலடி இதனை மெய்ப்பிக்கிறது.

**ஆண்கள் ஆடைகள்**

மருதநில ஆண்கள் காழகம் என்னும் ஆடையை அணிந்தனர் என்பதை,

**கரையிடைக் கிழந்த நின் காழகம் வந்து உரையாற்கால் (கலி. 73 : 17)**

என்று கலித்தொகை அடி குறிப்பிடுகிறது. தலைவன் பரத்தை வீட்டிற்குச் செல்லும்போது சந்தனமும் பட்டாடையும் அணிந்து செல்வான் என்பதை,

**அணிகிளிர் சாந்தின் அம்பட்டு இமைப்பு (அகம். 236 : 11)**

மேற்கண்ட அடியின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

**பெண்கள் ஆடைகள்**

பெண்கள் தழை ஆடையை அணிந்ததோடு பாதம் வரை நீண்ட ஆடையையும் அணிந்தனர் என்பதை அவர்கள் பாதங்களில் அணிந்து இருக்கும் அணிகலன்களில் ஆடை சிக்கிக் கொண்டதாகக் கூறுவதில் இருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

ஆடையை அணிந்ததோடு இல்லாமல் படுக்கை விரிப்பிலும் உடலின் மீது போர்த்திக் கொள்ளவும் பயன்படுத்தினர் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.

ஆரம்ப காலத்தில் தழை ஆடையை அணிந்து மானத்தை மறைத்து வந்த மனிதன் படிநிலை வளர்ச்சி பெற்ற பிறகு ஆடையை அணிந்தான் என்பதை

**தழைஅணிந்து அலமரும் அல்குல் தெருவின்**
**இளையோள் இறந்த அனைத்தற்கு பழவிறல் (நற்.320 : 2-3)**

**தழையும் தாரும் தந்தனன் இவன் என (நற்.80 - 5)**

என்ற நற்றிணை அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

ஒரு நாட்டினர் அணியும் ஆடை அணிகலன்களே அந்நாட்டு மக்கள் நாகரிகத்திற்கும் வளர்ந்த பண்பாட்டிற்கும் அடையாளமாக விளங்குகின்றன. பழந்தமிழர்கள் மிகச் சிறந்த ஆடை வகைகளையும் அணிகலன்களையும் பயன்படுத்திப் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் உயர்ந்த நிலையினை அடைந்து இருந்ததை அறிந்து கொள்ள முடிகிறது.

**உணவு**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் அவரவர் நிலத்திற்கேற்ப உணவு முறை மாறுபட்டு இருந்தது. புலாலுணவைப் பெரிதும் விரும்பியுண்டனர். பலவகையான மதுவகைளையும் விரும்பியுண்டனர். மன்னர்கள் இரவலர்க்கு அளித்த விருந்துகளில் புலாலுணவே பரிமாறப்பட்டது என அறிகிறோம். சங்க இலக்கியத்தில் தான் கவர்ந்து வந்த பசுக்கூட்டத்தையே கள்ளுக்கு விலையாகக் கொடுத்து குடித்துவிட்டு சென்றதை,

**தெறிப்ப விளைந்த தேங் கந்தாரம்**

**நிறுத்த ஆயம் தலைச் சென்று உண்டு (புறம். 258 : 2 - 3)**

என்று புறநானூறு விளக்குகிறது. உழவர்கள் தங்களுக்கு வேண்டிய கள்ளை வண்டியில் ஏற்றி வருவதை,

**……………….. செந்நெல் வினைஞர்**

**கள் கொண்டு மறுகும் சாகாடு (அகம்.116 : 2 -3)**

என்ற அகநானுற்று அடிகள் அறிவிக்கின்றது.

**கள் முகக்கும் பாத்திரம்**

கள்ளுக்கடையில் அதில் இட்டு முகக்கும் பாத்திரம் உடைந்ததால் தெருவெல்லாம் கள்துளிகள் மழைத்துளி போலத் தெறித்து ஓடும் என்பதை,

**பல்நாள் அரித்த கோஒய் உடைப்பின்**

**மயங்குமழைத் துவலையின் மறுகுஉடன் பனிக்கும் (அகம். 166 : 2 - 3)**

என்ற அகநானூற்றின் அடிகள் மூலம் கள் முகக்கும் பாத்திரம் இருந்ததை அறியமுடிகிறது.

**தொழிலை மறத்தல்**

பரதவன் ஒருவன் தனக்கு அகப்பட்ட வரால் மீனை விற்றுக் காசாக்கி அப்பணத்திற்குக் கள் வாங்கிக் குடித்துவிட்டு மீன்பிடிக்கச் செல்வதையே மறந்து உறங்கினான் என்பதை,

**துடிக்கண் கொழுங்குறை நொடுத்து உண்டுஆடி**

**வேட்டம் மறந்து துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி (அகம். 196 : 3 - 4)**

என்ற பாடலடிகள் கள் உண்டபின் ஏற்பட்ட மயக்கத்தை அகநானூறு தெரிவிக்கிறது.

**தன்நிலை மறத்தல்**

தலைவன் தன்னுடைய கூட்டத்தாருடன் கள் உண்டு மகிழ்ந்த பிறகு தன்னுடைய வீட்டிற்குச் செல்லாமல் பரத்தை வீட்டுக்குச் சென்றதை,

**மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி**

**எம்மனை வாராயாகி முன்நாள் (அகம். 346 : 15 -16)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

**பெண்கள் கள் குடித்தல்**

பரத்தையர்கள் கள்ளைக் குடித்துவிட்டுக் காஞ்சி மரத்து நிழலில் குரவை ஆடினர் என்பதை,

**மகிழ்நன் பரத்தைமை பாடி அவிழ்இணர்க்**

**காஞ்சி நீழல் குரவை அயரும் (அகம். 336 : 8 - 9)**

**மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ**

**யாணர் ஊரநின் மாண்இழை அரிவை? (ஐங்.42 : 1 - 2)**

என வரும் பாடலடிகளின் மூலம் அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் மருதத்திணையில் பரத்தை மட்டும் கள் குடித்தாள் என்பதற்கான ஆதாரங்கள் உள்ளன. ஆனால் பிற பெண்கள் குடித்தனரா? என்பதை அறிந்து கொள்ள முடியவில்லை.

**அஃறிணை உயிர்களின் நிலை**

மருதநிலத்தில் கள்ளுண்ட கலையத்தைக் குளத்து நீரில் கழுவிய பொழுது கள் கலந்த அந்தத் தண்ணீரைக் குடித்த இறால் மீன் களிப்புக் கொண்டு நெற்கூடுகளின் அடியில் துள்ளி விழுந்ததை,

**நறவி உண்ட மண்டை துடக்கலின் இறவுக்கலித்து**

**பீட்டு அறு வில்லின் கூட்டு முதல் தெறிக்கும்**

**பழனப் பொய்கை ………….. (அகம். 96 : 1 - 3)**

என்று அகநானூறு விளக்குகிறது. மேலும் ஆமையின் நிலை பற்றிக் கூறும்போது,

**பகுவாய் நிறைய துங்கினன் கள்ளின்**

**உகுவார் அருந்து மகிழ்புஇயங்கு நடையொடு (அகம். 256 : 4 - 5)**

என்னும் பாடலடிகள் ஆமை கூழாங்கற்கள் நிறைந்த தரையின் மீது ஊர்ந்து சென்று குளக்கரையில் கள் பருகிக் கொண்டிருந்தவர்கள் சிந்திய துளிகளை உண்டு மயக்கத்தோடு மெல்ல நகர்ந்து வயல்களைக் கலக்கிப் பின் அங்கேயே உறங்குகிறது என்பதை விளக்கிக் கூறியுள்ளது.

**மன்னர் அளித்த விருந்து**

மன்னர்கள் தான்பெற்ற வெற்றியைக் கொண்டாடும்போது படை வீரர்களுக்குக் கள்ளும் விருந்தும் கொடுத்தான்.

**அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்**

**கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்இமிழ் அன்ன (அகம். 266 : 13 - 14)**

அக்காலத்தில் உணவில் முக்கியப் பொருளாகக் கள் இருந்ததையும் மருதத்திணையில் மட்டும் அல்லாது பிறதிணைகளிலும் கள் உண்டு மகிழ்ந்தனர் என்பதையும் மேற்கண்ட பாடலடிகளின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

**விளையாட்டுகள்**

விளையாட்டானது உடல், உள்ளத்தின் நலனைக் காப்பதுடன் பொழுது போக்குக்கும் மன மகிழ்ச்சிக்கும் காரணமாக அமைக்கின்றன.

விளையாட்டு என்ற சொல்லை விளை + ஆட்டு என்று பிரித்து ‘விளை’ என்ற சொல்லுக்கு ‘விருப்பம்’ என்று பொருள். விருப்பமாக ஆடுகின்ற ஆட்டம் விளையாட்டு எனலாம். சங்க இலக்கியங்களில் 37 விளையாட்டுகள் இருந்ததைச் சு. சிவகாமசுந்தரி தம் ‘சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம்’ என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான கலித்தொகையில் தெரு, மறைவிடம், மன்றம், குன்று, பூங்கா, பந்தல், பளிங்கறை, நீர்நிலை, நெடுமணல் பரப்பு, காவற்காடு, சோலை, அம்பலம், மாடம் முதலான இடங்களில் எல்லாம் தமிழர்கள் விளையாட்டுகளை நிகழ்த்தியதாகக் குறிப்பிடுகிறது.

வெளித் தூண்டுதல் எதுவும் இன்றி மனம் மகிழும் செயல்களில் இயற்கையாக ஈடுபடுவது விளையாட்டாகும். இது வெறும் பொழுதுபோக்கிற்காக மட்டும் ஆடப்படாமல் உடல் ஆற்றலையும் மன ஆற்றலையும் வெளிக்கொணரவும் ஆடப்பட்டது. விளையாட்டைக் குழந்தை முதல் பெரியவர் வரை ஆடினர். பழங்காலத் தமிழகம் மூன்று திசைகளிலும் நீரால் சூழப்பட்டிருந்தது. பருவம் தவறாமல் மழை பொழிவதால் ஏரிகளிலும் குளங்களிலும் ஆறுகளிலும் நீர் பெருகி ஓடியது. அவற்றில் நீந்தி விளையாடுவதை அக்கால மக்கள் பொழுதுபோக்காகக் கொண்டனர்.

தொல்காப்பியர் ‘உவகை’ என்னும் மெய்ப்பாடு தோன்றுவதற்குரிய நான்கு வகையான நிலைகளன்களைக் கூறுமிடத்து விளையாட்டையும் ஒன்றாகக் கூறுகின்றார்.

**செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று**

**அல்லல் நீத்த உவகை நான்கே (தொல். பொருள். நூ. 259)**

விளையாட்டு என்பது ஒருவருக்கு இன்பமூட்டும் செயற்பாடு என்பது தெளிவாகிறது. மேலும் தொல்காப்பிய உரியியலில் ‘கெடவரல் பண்ணை ஆயிரண்டு விளையாட்டே’ (தொல். சொல். நூ. 319) இதில் கெடவரல் பண்ணை என்ற இரண்டு சொற்களை விளையாட்டினைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளார்.

**நீர் விளையாட்டு**

மருதத் திணைப் பாடல்களில் பெரும்பாலும் தலைவன் பரத்தையோடு சேர்ந்தே நீர் விளையாட்டு ஆடி இருக்கிறான். தலைவி நீர் விளையாட்டு ஆடியதாக ஒரே ஒரு பாடல் மட்டுமே உள்ளது. அவள் நீராடியபோது மருத மரத்தில் ஏறி ஆடியதை,

**கரைசேர் மருதம் ஏறிப்**

**பண்ணை பாய்வேள் தண்நறுங் கதுப்பே (ஐங். 74 : 3 - 4)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடி விளக்கிச் செல்கிறது.

தலைவன் பலரும் காணும் பகல் வேளையில் பரத்தையோடு சேர்ந்து புனல் ஆடியதை,

**ஓஒ புனலாடினாய் எனவும் கேட்டேன் புனல் ஆங்கே (கலி. 98 : 13)**

**அந்திப் பராஅல புதுப்புனல் நெருநை (அகம். 266 : 2)**

**ஏர்தரு புதுப்புனல் எரிதினின் நுகர்ந்து (அகம். 256 : 11)**

**தாதுஆர் காஞ்சித் தண்பொழில் அகல்யாறு (அகம். 246 : 6)**

முதலிய பாடலடிகள் நீர் விளையாட்டைப் பற்றி விளக்கிக் கூறியுள்ளது. பரத்தையோடு சேர்ந்து நீராடிய தலைவனின் பொய்யுரையைத் தலைவி கண்டிக்கும் வகையிலும் பாடல்கள் அமைகின்றன. தலைப் பெயற் செம்புனல் ஆடித் (ஐங்.80:3) என்ற பாடலடி மூலம் பரத்தையுடன் தான் சேர்ந்து நீராடவில்லை என்று தலைவன் கூறிய பொய்யுரையை அவனது கண்கள் சிவந்து இருப்பதைக் கொண்டு தலைவி ஏற்க மறுக்கின்றாள் என்பதை அறியமுடிகிறது. சங்க இலக்கியத்தில் தலைவன் பரத்தையோடு சேர்ந்து நீராடியதையும் அதற்குத் தலைவி ஊடல் கொள்வதையும் பாடல்கள் நமக்குச் சான்று காட்டுகின்றன.

**குதிரை ஏற்றம்**

நீர் விளையாட்டு மட்டும் இல்லாமல் பல விளையாட்டுகள் இருந்துள்ளன. ஆனால் மருதத் திணைப் பாடல்களில் குதிரை ஏற்றம் பற்றி மட்டும் இடம்பெற்றுள்ளது.

**ஏந்திளதிர் இதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்**

**குதிரை வழங்கிவரு வல் அறிந்தேன் குதிரைதான். (கலி. 96 : 5 - 6)**

என்னும் அடிகளின் மூலம் தலைவன், ஊடலோடு இருந்த தலைவியிடம் நான் குதிரை ஏற்றத்திற்குச் சென்றுவிட்டு நேராக இங்குதான் வருகின்றேன் என்று கூறுவதில் இருந்து அந்த விளையாட்டு மக்களிடம் பரவி இருந்ததை அறியமுடிகிறது.

சங்க கால மக்கள் தங்களுடைய ஓய்வு நேரங்களிலும் மனச்சோர்வு ஏற்பட்ட பொழுதும் பொழுதுபோக்கிற்காக விளையாட்டில் ஈடுபட்டனர். இது வெறும் பொழுதுபோக்கிற்காக மட்டும் அமையாமல் அறிவையும் ஆற்றலையும் மேம்படுத்துவதாக அமைந்தது. வயது வித்தியாசம் இன்றிப் பெண்களும் குழந்தைகளும் பல வகையான விளையாட்டை விளையாடினர் என்பதை அறியமுடிகிறது.

**கலைகள்**

கலைகள் மனிதனுடைய அழகுணர்ச்சியின் வெளிப்பாடாக எழுந்தன என்று கலைஞர்கள் கூறுகின்றனர். கலைகள் மனிதன் தோன்றிய பொழுதே தோன்றின என்றும் கலைகளே மனிதனை விலங்கினின்றும் பிரிக்கின்றனர் என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

ஆரம்பகால மனிதன் இயற்கைச் சக்திகளுக்கு அடிமையாக இருந்தான். இயற்கையின் சக்திகளான தீ, காற்று, நீர் முதலியவையும் விலங்குகளும் மக்களுக்கு அச்சத்தை ஏற்படுத்தியதால் அவற்றைக் கண்டு அஞ்சித் தன்னுடைய வயிற்றுக்கு உணவு தேடித் திரிந்தே அதிக நேரத்தைச் செலவு செய்தான். அப்பொழுது மனிதன் கலை எதனையும் படைக்கவில்லை. இந்தநிலை சற்று மாறி அச்சத்திலிருந்து விடுபட்ட பின்னே மனிதப் பண்போடு வாழ ஆரம்பித்தான் அந்தச் சமயத்திலே கலை என்ற வடிவம் தோன்றியது.

மனிதனுக்கு இயல்பாகத் தோன்றுகின்ற உணர்வு கலை உணர்வு. தன்னுடைய உணர்வுகளை மனிதன் கலை என்ற வடிவத்தில் பிறருக்கு வெளிப்படுத்தினான். தமிழர் போற்றி வளர்த்த கலைகளில் கூத்தும் ஒன்று. இசையோடு இணைந்து வளர்ந்த கலை ஆடவர் பெண்டிர் இரு சாரர்க்கும் பொதுவாகும். விழாக்களின்போது கூத்தர்கள்

மக்களைத் தம் ஆடல் பாடல்களால் மகிழ்வித்தனர். எப்படி ஆடவேண்டும் என்பதைப் பற்றிச் சொல்லக் கூத்துக் கலையின் இலக்கணம் சார்ந்த நூல்களும் எழுதப்பட்டன. ஆனால் அவை கிடைக்கப்பெறவில்லை. யாப்பருங்கலத்தின் உரையின் மூலம் ஒரு சில நூல்களை அறிந்துகொள்ள முடிகிறது.

**கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**

**போக்கு மதுவிளித் தற்று (குறள்.332)**

கூத்து முடிந்த பின்னர்க் கூத்தைக் கண்டுகளித்த மக்கள் கூத்தரங்கைவிட்டு ஒட்டுமொத்தமாக வெளியேறிவிடுவதைப் போலவே செல்வம் ஒருவனிடமிருந்து போனவுடன் அவனைச் சுற்றி வாழ்ந்த மக்களும் போய்விடுவர் என்பதை வள்ளுவர் குறிப்பிடுவதிலிருந்து கூத்தைப் பற்றி அறியமுடிகிறது. மேலும் தொல்காப்பியர்,

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி (தொல்.பொருள். நூ. 91 : 3-4)**

அரசனிடம் பொருள் பெற்றவரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது கூத்தரையும் குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியம் முழுவதும் 15 பாடல்களில் துணங்கைக் கூத்து பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதாக அ.செல்வராசு குறிப்பிடுகிறார்.

பண்டைய தமிழ் மக்களிடம் இருந்த கூத்துவகைகளுள் துணங்கைக் கூத்தும் ஒன்று இந்தக் கூத்து வேடம் புனையாமல் ஆடப்படும். தமிழ் மொழி அகராதி துணங்கை என்பதற்கு ஒத்தி ஆடல், கூத்து, திருவிழா என்ற முப்பொருளைக் குறிப்பிடுகின்றது.

இவ்வகைக் கூத்தை இளம்பெண்களே அதிகம் பங்கு கொண்டு ஆடுவார்கள் எனினும் பெண்கள் இணைந்தும் ஆடவரும் பெண்டிரும் இணைந்தும், ஆடவர்கள் மட்டும் இணைந்தும் ஆடியுள்ளனர். புறப்பாடல்கள் இக்கூத்தைப் பகல் நேரத்தில் ஆடப்படுவதாகவும் அகப்பாடல்கள் இரவு நேரத்தில் ஆடப்படுவதாகவும் குறிப்பிடுகின்றன. இதற்கு மேலும் விளக்கம் அளிக்கும் வகையில் அ.செல்வராசு ‘சங்க இலக்கிய வழி இக்கூத்து கைகளை வளைத்து தோளை உயர்த்தி ஒருவரோடு ஒருவர்

சேர்ந்து ஆடுவது. முரசு ஒலிக்கேற்ப ஆபரணங்களை அணிந்து பொன்னால் செய்த உழிஞைப் பூவைச் சூடி போர் வீரர் ஆடுவது என்றும் புரிந்து கொள்ள முடிகிறது.'[22] என்று குறிப்பிடுகிறார். மேலும் ராஜ்கௌதமனும் இக்கூத்தைப் பற்றி 'அது மகளிர் கைகொட்டி மகிழ்ந்து நுணங்கியாடும் கூத்து என்றும் துணங்கைக் கூத்தாடும்போது கும்மியடிக்கும் பெண்கள் பாடுவார்கள் முழவு முதலான வாத்தியங்கள் முழங்கும்'[23] என்று குறிப்பிடுகிறார்.

விழாக் காலங்களில் மக்கள் பல ஊர்களிலிருந்தும் வந்து ஓரிடத்தில் கூடுகின்றனர். யாழ், குழல், முழவு முதலிய இசைக்கருவிகளில் இசையெழுப்புவோரும் ஆடல் வல்ல கூத்தரும் ஆடுமகளிரும் தத்தம் திறமை காட்டி மக்களை மகிழ்விக்க வருவர் என்பதை,

**விழவும் மூழ்த்தன்று முழவம் தூங்கின்று (நற்.320 : 1)**

**முழவு முகம் புலரா விழவுடை வியல்நகர் (அகம். 206 : 11)**

**அரிமலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ**

**விழவு ஆடு மகளிரொடு தழூஉ அணிப் பொலிந்து (அகம்.176: 14 - 15)**

என்று நற்றிணையும் அகநானூறும் குறிப்பிடுகின்றன.

வாத்திய முழக்கங்களோடு போர் மள்ளர்களும் விழாவில் குழூமி விளையாட்டுப் போர் நிகழ்த்தி மக்களை மகிழ்வித்தல் உண்டு என்பதை,

**மள்ளர் குழீஇய விழவி னானும்**

**மகளிர் தழீஇய துணங்கை யானும்**

**யாண்டும் காணேன் மாண்டக் கோனை**

**யானும் ஓர் ஆடுகள மகளே என்னைக்**

**கோடு ஈர்இலங்கு வளை நெகிழ்த்த**

**பீடு கெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே! (குறுந்.31)**

என்ற குறுந்தொகைப் பாட்டு வீரர் குழவி விழாவில் விளையாட்டுப் போர் நிகழ்த்துதலையும் ஆடும் கூத்தர், கூத்தியர் கூத்து நிகழ்த்துதலையும் விவரிக்கிறது. கூத்துகளில் துணங்கைக்கூத்தும் குரவைக்கூத்தும் முக்கியமாக இடம்பெறுகின்றன.

**1) துணங்கைக் கூத்து**

மருத நிலத்துக்கே உரிய சிறப்புக் கூத்தை (1) துணங்கைக் கூத்து (2) குரவைக் கூத்து என்ற இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

திருவிழா கொண்டாடும் இடத்தில் மத்தளம் ஒலிக்கக் கூத்து நிகழும் என்பதை,

**குழையன் கோதையன் குறும்பைந் தொடியான்**

**விழாஅயர் துணங்கை தழூஉகம் செல்ல (நற். 50 : 2 - 3)**

**முழவுஇமிழ் துணங்கை தூங்கும் விழவின் (அகம். 336 : 16)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

தலைவன் காதில் குழையும் கழுத்தில் மாலையும் அணிந்து துணங்கையாடியதையும் பெண்கள் மத்தளம் முழங்க ஆடினர் என்பதையும் அறியமுடிகிறது.

தலைவன் சேரிக்குக் கூத்தைக் காண்பதற்காகச் சென்றதையும் பிற பெண்களோடு சேர்ந்து துணங்கைக் கூத்தை ஆடினான் என்பதையும்,

**மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்க**

**தண்துறை ஊரன் எம்சேரி வந்தென (அகம். 76 : 1 - 2)**

**தமர்பாடும் துணங்கையுள் அரவம்வந்து எடுப்புமே (கலி. 70 : 14)**

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

தலைவன் வேறு பெண்களோடு சேர்ந்து துணங்கைக் கூத்து ஆடிய ஒலி காட்டில் வந்து தன்னை எழுப்பியதாகத் தோழி கூறுகின்றாள். மேலும் தலைவன் பரத்தையோடு துணங்கைக் கூத்து ஆடும்போது அவள் அணிந்து இருந்த கால்சிலம்பு பட்டுக் கிழிந்த ஆடையுடன் தலைவன் வந்ததை,

**நிரைதொடி நல்லவர் துணதலைக் கொள்ளக்**

**கரையிடைக் கிழிந்தநின் காழகம் வந்து உரையாக்கால் (கலி.73: 16 - 17)**

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

**2) குரவைக் கூத்து**

பசலைக் கொடியில் ஆம்பல் பூவோடு சேர்த்துக் கட்டிய தழையை உடுத்தி மகளிர் ஒரு விழாவில் குரவைக் கூத்து ஆடினர். அவளோடு தலைவன் ஆடினான் என்பதை,

**அரிஅலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ**
**விழவுஆடு மகளிரொடு தழூஉ அணிப் பொலிந்து (அகம். 176 : 14 - 15)**

என்னும் அடிகளின் மூலம் மருத நிலத்தில் துணங்கைக் கூத்து மட்டும் இல்லாமல் குரவைக் கூத்தும் ஆடி மகிழ்ந்தனர் என்பதை அறியமுடிகிறது.

குறிஞ்சிநில மக்கள் வேட்டையாடி உணவு தேடவேண்டிய நிலையில் இருந்ததால் பண்பாட்டில் சிறந்து விளங்க முடியவில்லை. முல்லைநில மக்கள் ஆடுமாடுகளை மேய்க்கவும் அதன்மூலம் கிடைக்கும் பால், தயிர் முதலியவற்றைப் பிற நிலங்களில் விற்றுத் தமக்கு வேண்டிய தேவையை நிறைவேற்றவே நேரம் சரியாக இருந்ததால் சீரிய பண்பாடும் தோன்ற வழியில்லை. கடல் பகுதியில் மீன்பிடித்து வாழ்ந்த நெய்தல் நிலமக்கள் வாழ்க்கையிலும் ஓய்வு இல்லை. அதனால் நாகரிக வளர்ச்சியும் பண்பாட்டு வளர்ச்சியும் அங்கு ஏற்படவில்லை. இம்மூன்று நிலங்களிலும் வேறுபட்டது மருதநிலம். அந்நிலம் ஆற்றுப் பாய்ச்சல் உடையது. நெல், கரும்பு முதலியவற்றைப் பயிரிட்டனர். அதிக ஓய்வு நேரம் கிடைத்ததால் ஓவியம், சிற்பம், நாடகம் முதலிய பல கலைகளும் தோற்றமாயின. இந்நிலமக்கள் சிறந்த பண்பாட்டோடு விளங்கினர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

## தொகுப்புரை

- உலகின் பல்வேறு பகுதிகளில் நாகரிகம் தோன்றி வளர்வதற்கு முன்பே பண்பாட்டிலும் நாகரிகத்திலும் சிறந்து விளங்கிய இனம் தமிழினம் என்று வரலாறுகளும் இலக்கியங்களும் கூறுகின்றன.
- நம்பிக்கைகள் எப்பொழுது உருவானது என்று அறுதியிட்டுக் கூறமுடியாது. மனிதன் இயற்கையின் பாதிப்பிற்கு அதிக அளவில் ஆளான பொழுது நம்பிக்கை தோன்றி இருக்கலாம் என்பதை அறியமுடிகிறது.
- இனக்குழு வாழ்க்கையுடைய மக்களின் வழிபாட்டு முறைகள், அரசுகள் உருவாகியபோது கலந்து பெருவழிபாட்டு நெறியாக உருவெடுத்து மதம் என்ற நிலைக்கு வளர்ந்தன என்பதை அறியமுடிகிறது.
- ஆங்கிலத்தில் ‘கல்சர்’ என்ற சொல் பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியதெனத் தெரிகிறது.

- விருந்து பண்பாடு சங்க கால மக்களின் மனவளத்தையும் மனைச் செழிப்பையும் காட்டும் வகையில் அமைந்துள்ளது.
- பிற மக்களைக் காட்டிலும் வேளாளர்களே விருந்து உபசரிப்பில் அதிகம் ஈடுபட்டனர் என்பதை அறியமுடிகிறது.
- வயது வித்தியாசம் இன்றி மக்கள் அணிகலன்களை அணிந்தனர் என்பதை அறியமுடிகிறது. பழங்காலத்திலிருந்த அணிகலன்களில் பல இக்காலத்தில் இல்லை.
- ஆரம்ப காலத்தில் தழை ஆடையை அணிந்து தனது மானத்தை மறைத்து வந்த மனிதன் படிநிலை வளர்ச்சிப் பெற்ற பிறகு ஆடையை அணிந்தனர் என்பதைச் சங்க இலக்கியத்தின் மருதப் பாடல்கள் காட்டுகின்றன.
- நீர்நிலைகள் நீந்தி விளையாடுவதை அக்கால மக்கள் பொழுபோக்காகக் கொண்டனர் என்பதை அறிந்துகொள்ளமுடிகிறது.
- நான்கு நிலங்களிலும் வாழ்ந்த மக்களைக் காட்டிலும் மருதநில மக்கள் சிறந்த பண்பாட்டோடு விளங்கினர் என்பது தெளிவாகிறது.
- மனிதனுடைய வாழ்க்கையின் சாரம்சமாகக் காணப்படுகிற ஒழுகலாறுகள், நடத்தைகள், நம்பிக்கைகள், விழுமியங்கள், கால அழகியல் வெளிப்பாடுகள், சடங்குகள், வழிபாடுகள் என்ற பலவற்றைக் குறிப்பது பண்பாடாகும்.
- மனிதன் தன் முயற்சியில் ஐயம் ஏற்படும்போது அவனால் முடிவெடுக்க இயலாத சூழலில் நிமித்தம் பற்றிய நம்பிக்கை மனிதனுக்கு மனஆறுதலைத் தந்ததை அறிய முடிகிறது.
- பண்டைத் தமிழ் மக்கள் தங்களின் பழக்கவழக்கத்தின் அடிப்படையிலேயே தாங்கள் நம்பிய கடவுளர்களையும் வழிபட்டு வந்தனர், தனக்கு அச்சத்தைத் தரக்கூடிய ஒன்றை உள்ளதால் நெருங்கவும் உணரவும் மனிதன் மேற்கொண்ட வழிமுறையே வழிபாடாகும்.
- இயற்கையிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அவற்றை வழிபடத் தொடங்கினான். இச்செயல் ஒரு வகையில் அவனுக்கு ஆறுதலையும் நம்பிக்கையும் ஊட்டியது. இதனால் இயற்கை வழிபாடே வழிபாட்டின் தொடக்கமாக அமைந்தது.

❖ பண்டைத் தமிழர்கள் தங்கள் இல்லத்தை நாடி வந்தவர்கள் எவராக இருந்தாலும் அவர்களை மகிழ்ச்சியோடு வரவேற்று உபசரித்து அனுப்புவதைக் கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

❖ பழந்தமிழர்கள் மிகச் சிறந்த ஆடைவகைகளையும் அணிகலன்களையும் பயன்படுத்திப் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் உயர்ந்த நிலையினை அடைந்து இருந்ததை அறிந்து கொள்ள முடிகிறது.

❖ அக்காலத்தில் உணவில் முக்கியப் பொருளாகக் கள் இருந்ததையும் மருதத் திணையில் மட்டுமல்லாது பிறதிணைகளிலும் கள் உண்டு மகிழ்ந்தனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

❖ சங்க கால மக்கள் விளையாட்டினை வெறும் பொழுதுபோக்கிற்காக மட்டும் விளையாடாமல் அறிவையும் ஆற்றலையும் மேம்படுத்த விளையாடினர். வயது வித்தியாசமின்றிப் பெண்களும் குழந்தைகளும் பல வகையான விளையாட்டை விளையாடினர் என்பதை அறியமுடிகிறது.

❖ மனிதனிடமிருந்து அச்சவுணர்வு சற்று மாறிய பின் மனிதப் பண்போடு வாழ ஆரம்பித்தான். அந்தச் சமயத்திலே கலை என்ற வடிவம் தோன்றியது.

❖ கூத்துகளில் துணங்கைக் கூத்தும் குரவைக் கூத்தும் முக்கிய இடம்பெற்றன.

**சான்றெண் விளக்கம்**

1. Tamil Lexicon ,Vol.iv. P – 2155
2. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, இரண்டாம் பாகம், ப.19
3. சு.சக்திவேல், தமிழர் வாழ்வியல் நம்பிக்கைகள், கட்டுரை, ப.376
4. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.44
5. Tamil Lexicon ,Vol.iv. Part – 1, P – 2254
6. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.196
7. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.18
8. த.அருள் பத்மராசன், தமிழ்ப் பண்பாடு, ப.85
9. Tamil Lexicon – Vol – IV, P.2454
10. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும், ப.9
11. சி.தில்லைநாதன், பண்பாட்டுச் சிந்தனைகள், ப.8
12. மு.பி.பாலசுப்பிரமணியம், இலக்கிய முன்றில், ப.5

13. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், பக்.159 - 160
14. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி – 12, ப.11
15. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், தமிழும் பிறபண்பாடும், ப.1
16. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.3
17. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1784
18. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.65
19. ஆ.ஏகாம்பரம், தமிழரின் விருந்தோம்பல் அன்றும் இன்றும், ப.18
20. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.93
21. மு.கவிதாதேவி, நற்றிணை காட்டும் சூழல்கள், ப.59
22. கு. பகவதி, தமிழர் ஆடை, பக்.20 - 21
23. அ.செல்வராசு, இலக்கிய இலக்கணப் புரிதல், பக்.41 – 42
24. ராஜ்கௌதமன், கலித்தொகை – பரிபாடல் ஒரு விளிம்புநிலை நோக்கு, ப.82

# இயல் – 4

## வேளாண் பொருளாதாரம்

சங்க கால மக்கள் தத்தமக்குரிய நிலப்பகுதியில் வாழ்ந்த பொழுது அங்கு இருந்த இயற்கைச் சூழலைப் பயன்படுத்திக் கொண்டனர். தாங்கள் வாழ்ந்த நிலத்தின் இயல்பையும் அதில் விளையும் பொருளையும் கொண்டு தங்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்துவதில் வேறுபடுகின்றனர். தமிழ்ச் சமுதாயம் ஆரம்ப காலத்தில் இயற்கையினையொட்டியதாக இருந்தது நாளடைவில் வேலைப் பிரிவினைக் காரணமாகத் தொழில் வழிச் சமுதாயமாக மாறியது. 'இயற்கையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் செயலே பழங்காலத்தில் தொழில் எனக் கருதப்பட்டது'[1] என்று சு. சக்திவேல் குறிப்பிடுகிறார். காட்டு மிராண்டியாக வாழ்ந்த மனிதன் ஓர் இடத்தில் நிலையாக வாழ உணவு தேவை என்று அறிந்த பிறகு உடனடியாக அவனுக்கு உழவு கைவசப்படவில்லை ஏற்பட்ட அனுபவம் சிறந்த படிப்பினையை ஏற்படுத்தி அவனுக்குக் கற்றுத் தந்ததை 'உழுவதற்கான கருவிகள் எவையும் அவனிடம் இல்லை இந்நிலையில் நிலத்தில் கிடக்கும் கிழங்குகளைத் தின்பதற்காகப் பன்றிகள் மண்ணைத் தோண்டிக் கிளறிப் புழுதியாகியிருப்பதைக் கண்டான். அவ்வாறு பன்றிகளால் கிளறிப் புழுதியாக்கப்பட்ட இடங்களில் கானவர் மழைக்காலத்தில் தினை விதைத்தனர். அங்ஙனம் விதைத்த தினை முளைத்து வளர்ந்து விளைந்தது'[2] என்று வெ. பெருமாள்சாமி குறிப்பிடுகிறார். ஐவகைத் திணைப் பிரிவின் அடிப்படையில் வாழ்ந்த பழந்தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மைக்கு ஏற்ப அங்குக் கிடைக்கும் அல்லது விளையும் பொருள்களுக்கு ஏற்பப் பல்வேறு தொழில்களைச் செய்து தங்களின் தேவையை நிறைவேற்றிக் கொண்டனர். குறிஞ்சி, முல்லை நிலத்தில் வாழ்ந்த மனிதன் நாடோடியாகச் சுற்றித் திரிந்தான். கிடைத்த உணவை உண்டு உயிர் வாழ்ந்தான். மருத நிலத்தில் ஒரே இடத்தில் தங்கி வேளாண்மை செய்யக் கற்றுக்கொண்டு தனக்குத் தேவையானதைத் தானே விளைவித்துக் கொண்டான். உணவினைத் தேடி அலையும் தேவை இல்லாததால் ஒரு இடத்தில் நிலைத்து வாழ ஆரம்பித்தான். அவ்வாறு வாழ்ந்தவர்களில் பெரும்

பகுதியினர் வேளாண்மையில் ஈடுபட்டுத் திறம்பட செயலாற்றி வந்தனர் என்பதற்குப் பல்வேறு சான்றுகள் உள்ளன.

சங்க காலத்தில் மக்களின் பொருள்நிலை வீட்டிலிருக்கும் பசுக்களின் எண்ணிக்கையை வைத்தும் ஏர்களின் எண்ணிக்கை வைத்தும் கணிக்கப்பட்டது. இதனை,

**வழிவொடு வருதி நீயே இஃதோ**

**ஓர்ஆண் வல்சிச் சீர்இல் வாழ்க்கை (குறுந்.295 : 3 - 4)**

**ஈரம்பட்ட செவ்விப் பைம் புனத்து**

**ஓர்ஏர் உழவன் போல (குறுந்.131 : 4 - 5)**

என்ற குறுந்தொகைப் பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.

ஆரம்ப காலத்தில் கரடு முரடாக இருந்த நிலம் எப்படிப் பண்பட்டுப் பயிர் இடுவதற்கு ஏற்ற நிலமாக மாறியது என்பதை,

**காடு கொன்று நாடாக்கி**

**குளந்தொட்டு வளம் பெருக்கி**

**பிறங்கு நிலை மாடத்துறந்தை போக்கிக்**

**கோயிலொடு குடிநிறீஇ (பட்டி. 283 - 286)**

எனப் பட்டினப்பாலை எடுத்துரைக்கிறது.

இதேபோல் காட்டெரிப்புப் பற்றிச் சங்க இலக்கியத்தில் குறிஞ்சித்திணை பாடிய கபிலர் யாமரங்களை வெட்டி அவற்றைத் தீயிட்டுக் கொளுத்திப் பண்படுத்திப் பயிர் இட்ட முறையைப் பதிவு செய்துள்ளார். இதனை,

**யாஅம் கொன்ற மரம் சுட்ட இயலில்**

**கரும்பு மருள் முதல வைந் தாட் செந்தினை (குறுந். 198 : 1 - 2)**

என்னும் குறுந்தொகை அடிகள் விளக்குகின்றன.

மற்றொரு பாடலில் மரங்களை வெட்டி அழித்த காட்டில் குறவன் உழுது விதைத்த செய்தியை,

**மரம் கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய (குறுந். 214 : 11)**

என்ற குறுந்தொகை அடியின் மூலம் அறியலாம்.

'காட்டெரிப்பு வேளாண்மையில் கானக்குறவர்களே முதல் தமிழ் விவசாயி ஆவர்' என்று பக்தவச்சல பாரதி தமது ஆய்வுக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். கானக்குறவர்கள் விவசாயத்தை மேற்கொண்டாலும் அதனைச் செம்மைப்படுத்திச் செய்தவர்கள் மருதநில மக்களே ஆவார்கள். இவர்கள் மற்ற நிலத்தவரைக் காட்டிலும் செல்வ நிலையில் மேம்பாடு கொண்டிருந்தனர். இங்கு ஊர்ப் பெருக்கமும் நகர அமைப்பும் கால்கொள்ளத் தொடங்கியமைக்கு அங்குச் செய்யப்பட்ட தொழில்முறையும் இயற்கை அமைப்பும் முக்கியக் காரணமாக விளங்கியது.

மருதநிலத்தின் சிறப்பை 'மனிதன் நிலத்தை உழுது தானியங்களை உண்டாக்கவும் ஆறுகளிலிருந்து வயல்களுக்கு நீர் பாய்ச்சவும் பழகிக் கொண்டான். வெள்ளத்தை இவ்வகையாக ஆண்டமையின் இவனுக்கு வெள்ளாளன் என்னும் பெயர் உண்டாயிற்று. ஆறுகளுக்குத் தூரத்தே இருந்த மனிதன் மழைநீரைக் குளங்களில் தேக்கி வைத்து வாய்க்கால் வழியாக அதனைப் பயிர்களுக்குப் பாய்ச்சவும் கிணறுகள் நீரூற்றுகளிலிருந்து நீரைப் பயன்படுத்தவும் கற்றுக் கொண்டான் மனிதனுடைய நாகரிகம் படிப்படியாக வளர்ச்சியுற்றது மருதநிலத்தில் முடிவடைந்தது'[3] என்று நா. சி. கந்தையா பிள்ளை குறிப்பிடுகிறார்.

மருதநில மக்கள் இயற்கையாகவும் தங்களின் உழைப்பாலும் உற்பத்தியாகும். உணவுக்குரிய பொருட்களைக் கொண்டும் வருவாயினைப் பெருக்கிக் கொண்டனர். அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி பெறாத இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்பே உழவுத்தொழில் மிகச் சிறப்பாக மருதநில மக்களால் செயல்பட்டதையும் பண்டமாற்று முறையில் வணிகம் செயல்பட்டதையும் பயிர் வளர்ச்சிக்கு அவர்கள் என்ன என்ன உத்திமுறைகளைப் பயன்படுத்தித் தங்களின் பொருளாதாரத்தில் உயர்ந்தனர் என்பதையும் இதன் அடிப்படையில் எவ்வாறு அரசு உருபெற்றது என்பதையும் ஆய்வதே இந்த இயலின் நோக்கமாகும்.

**படிநிலை வளர்ச்சி**

பண்டைக் காலத்தில் மனிதன் அறிவு வளர்ச்சியடையாமல் இருந்தபோது கிழங்குகள், கனி வகைகள், இயற்கை தந்த தாவரங்கள், வேட்டையாடிப் பெற்ற மிருகங்களின் இறைச்சி, மீன் போன்றவற்றை உண்டு வாழ்ந்தான். நாள்கள் செல்லச் செல்ல அவன் அறிவும் ஆற்றலும் வளர வளரப் புது உணவுப் பயிர்களை விளைவிக்கக் கற்றுக் கொண்டான். பின் பயிர் செய்வதற்குத் தேவையான கருவிகளைச் செய்யக் கற்றுக் கொண்டு சிறப்பான முறையில் பயிர் செய்து அதிக அளவு உற்பத்தியைப் பெற்றான். மருதத்தில் வேளாண்மையின் வளர்ச்சியானது விரிவான தனிநிலவுடைமை வளர்ச்சிக்கு அடிகோலியது.

**வேளாளர்**

வேளாளர்களை வளமையர், சதுர்த்தர், களமர், மேழியர், ஏரின்வாழ்நர், காராளர், புனைஞர், பின்னவர் என்று பல பெயருக்கு உரியவர்களாக நிகண்டுகள் கூறுகின்றன. 'வேளாளர் என்பவர் வைசியரும் சூத்திரரும் எனப் பிங்கலந்தை நிகண்டு கூறுகிறது'.[4] பிங்கலந்தை நிகண்டு, பெயர்ப் பிரிவு, 780 சூத்திரம்.

'வேள்' எனில் 'மண்' என்று பொருள் கூறுகிறது யாழ்ப்பாணத்து அகராதி இதற்கு விளக்கம் அளிக்கும். வேளாளரைப் பற்றி ஆ.ராகவன் பின்வருமாறு குறிப்பிடுகிறார். 'இவர்கள் வெள்ளத்தை ஆளத் தெரிந்ததால் வேளாளர் என்னும் பெயர் பெற்றனர் என்று கூறப்படுகிறது. அவர்கள் பயிர்களை ஆடு, மாடு, புலி, யானை முதலிய விலங்குகள் வந்து அழித்துவிடாது கையில் வேல் தாங்கிப் பயிர்களைப் பாதுகாத்து வந்தமையால் வேல் ஆள் என்னும் பெயர் பெற்று அப்பால் அப்பதம் வேலாளன் என்று திரிபுற்றது என்று கூறுவதும் உண்டு'[5] என்று விளக்கியுள்ளார்.

கம்பர் தாம் பாடிய ஏர் எழுபது என்னும் நூலில் வேளாளர்களின் சிறப்பை 'வையம் புரக்கும் பெருக்காளர்'[6] என்றும் 'அழுங்குழவிக்கு அன்புடைய தாயே போல் அனைத்துயிர்க்கும் எழுங்கருணைப் பெருக்காளர்'[7] என்றும் 'தாயனைய காராளர்'[8] என்றும் புகழ்ந்து கூறியுள்ளார்.

தொல்காப்பியரும் வேளாளர்கள் உழவுத்தொழில் செய்து வாழ்ந்தவர்கள் என்பதை,

**வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது**
**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி (தொல். பொருள். நூ. 635)**

எனக் குறிப்பிடுகிறார். வேளாண்மை என்ற சொல் வேட்டைச் சமுதாயத்திலிருந்து தோன்றியனவாக இருக்கலாம் என்பதை ஆ. ஏகாம்பரம் 'மிருகங்களை வேட்டை யாடுவதற்கு உபயோகித்த வேலாயுதத்தை முதன்முதல் நிலத்தினைக் கிளறிவிட பயன்படுத்தியுள்ளான. எனவே 'வேளாளர்' என்ற சொல் 'வேலாளர்' என்ற சொல்லில் இருந்து உண்டாகியிருக்க வேண்டும்'[9] என்று குறிப்பிடுகிறார்.

வேளாளர் என்ற சொல்லைக் குறிக்கும் பள்ளர், மள்ளர் பற்றிப் பல அறிஞர்கள் விளக்கம் அளித்துள்ளனர். டி.கே. வேலுப்பிள்ளை பழந்தமிழ் இலக்கியத்தில் வரும் மள்ளர் பிற்காலத்தில் பள்ளர் என வழங்கலாயிற்று என்கிறார். தேவநேயப்பாவாணர், பள்ளர் மருத நிலத்தில் வாழும் உழவர் என்கிறார்.

ஆரியர் வந்த பிறகுதான் வேளாளர் என்ற சொல் நால்வகைச் சாதியில் ஒன்றாகக் குறிக்கப்பட்டது அவர்கள் வருவதற்கு முன் வேளாளர்கள் உயர்வாக நடத்தப்பட்டனர். இக்கருத்துக்கு வலுசேர்க்கும் வகையில் 'வேளாளரை ஆரியர் கூறும் நால்வகைச் சாதிப் பெயரால் வழங்காமல் அவர் கொண்ட நாற்சாதியார்க்கும் முற்பட்டவராகவும் அந்நால்வரினும் மேற்பட்டவராகவும் கொள்ளுதலே பொருத்த முடைத்தாம்'[10] என்றும் மறைமலையடிகளின் கூற்று அமைகின்றது.

பொதுவாகத் தொல்காப்பியர் காலந்தொடங்கிச் சங்ககாலம், சங்க மருவிய காலம் முடிய வேளாண்மை என்னுஞ் சொல் பெரும்பான்மை 'உதவி' என்ற பொருளிலும் சிறுபான்மை உழவுத்தொழில் என்ற பொருளிலும் ஆளப்பட்டுள்ளது.

'வேளாண்', 'வேளாளன்' என்னும் சொற்கள் சங்க இலக்கியங்களில் அருகியே வழங்குகின்றன. அச்சொற்கள் வழங்கும் மூன்று இடங்களிலும் அவை 'உபகாரம்' என்னும் பொருளைத் தருகின்றன. (வேளாண். புறம். 74: 4, பொருநராற்றுப்படை: 75, கலி.101: 46) வேளாளர் என்னும் சொல் ஓரிடத்தில் மட்டுமே இடம்பெற்றுள்ளது. (பரி. 20 : 63)

உழவுத்தொழில் செய்வோர் பசித்தோர் முகம் பார்த்து அவர்களின் பசி தீர்ந்ததன் பயனாக முகம் மலர்ச்சி அடைவதைப் பார்த்து மகிழ்வார்கள். அதனால் வேளாண்மைக்கு உபகாரம் என்னும் பொருள் வந்தது. திருக்குறளிலும் இதே பொருளில் வந்திருப்பதைக் காணலாம்.

வேளாளர் என்னும் சொல் சங்க இலக்கியங்களுக்குப் பின்னர்த் தோன்றிய சொல் ஆகலாம். இச்சொல்லைச் சங்ககால வேளாளர்களோடு இணைத்துப் பார்க்க இயலும். உழவுத்தொழில் செய்பவர்க்கே வேளிர் எனும் பெயர் வழங்கிற்று. 'வேள்' என்ற அச்சொல்லாகக் கொண்டு வேளிர் எனும் குடிப்பெயர் தோன்றிற்று. வேள்ஆய், வேள்பாரி முதலிய குறுநில மன்னர்களின் பெயர்களில் வேள் என்ற அடைமொழி பெற்றே விளங்கின.

மூவேந்தர் ஆட்சி உருவாவதற்கு முன்பு வேளிரே இனக்குழுத் தலைவர்களாக விளங்கினர். இந்த வேளிர்கள் 'மூவேந்தர்களோடு மண உறவுகள் கொண்டிருந்ததாக நச்சினார்க்கினியர் உரையிலிருந்து அறிகின்றோம்.'[11] இத்தகைய சிறப்பு மிக்கவர்கள் காலமாற்றத்தால் கீழான நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

நீதிநூலான திரிகடுகத்தில் வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான் (திரி.12 : 2) என்ற அடியில் உழவனைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது.

தேநேயப்பாவாணர் 'வேளாளர் என்பர் அவ்வகுப்பாரின் தலைவரான வேளிர் என்னும் குறுநிலமன்னரே'[12] என்று தம் கருத்தைக் கூறியுள்ளார்.

மனிதன் வாழ்ந்த வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு இரண்டு நிலைகளாகப் பிரிக்கலாம். 1) உணவு சேகரித்த நிலை 2) உற்பத்தி நிலை

**1) உணவு சேகரித்த நிலை**

இயற்கையோடு இணைந்து வாழ்ந்த காலகட்டத்தில் மனிதர்கள் கூட்டமாகத் தாங்கள் சேகரித்த உணவை அனைவரும் பகிர்ந்து உண்டு வாழ்ந்தனர். வேளாண்மையில் ஈடுபடாமல் தாம் வாழ்ந்த பகுதியில் கிடைத்த காய், கனி, கிழங்குகள் ஆகியவற்றை உண்டு வாழ்ந்தனர். இந்த உணவு சேகரிப்புக் காலகட்டத்தில் மக்கள் மிகக் குறைவாக இருந்ததால் அவர்களிடையே எவ்விதப் பூசலும் ஏற்படவில்லை.

**2) உற்பத்தி நிலை**

உணவைச் சேகரிப்பது வேட்டையாடுவது ஆகிய நிலையில் இருந்து சற்று வளர்ச்சிப் பெற்றுக் கால்நடையை வளர்க்கும் பழக்கம் ஏற்பட்டது. கற்களைக் கருவியாகக் கொண்டு நிலத்தைக் கீறிப் பயிரிட்ட மனிதன் உலோக பயன்பாட்டால் வேளாண்மை செய்யும் கருவிகளிலும் உலோகத்தைப் பயன்படுத்தக் கற்றுக்கொண்டான். இதனால் உற்பத்தி அதிமாகக் கிடைத்ததால் உணவு சேகரித்த நிலையில் இருந்து உற்பத்தி நிலைக்கு மாற்றம் அடைந்தான்.

உற்பத்தி நிலையின் தொடக்கத்தில் உழுது உண்போர், உழுவித்து உண்போர் என்ற இரண்டு பாகுபாடு இருந்திருக்க வாய்ப்பு இல்லை என்று க.ப. அறவாணன் குறிப்பிடுகிறார். இதற்கு அவர் தரும் காரணம் ‘மக்கள் தொகை குறைவு மாநிலப் பரப்போ பெரியது. எனவே அவரவர் தேவைக்குத் தக வேளாண்மையில் ஈடுபட்டிருக்க வேண்டும்.’[13] என்று காரணம் தருகிறார்.

**உழவு**

உழவுத் தொழிலில்லாமல் உலகத்தில் வேறு எத்தொழிலிருந்தும் பயனில்லை. உழவுத் தொழிலின் சிறப்பை உணர்ந்த திருவள்ளுவர் தமது குறட்பாவில் தனியே

ஓர்அதிகாரம் வகுத்திருக்கின்றார். இதனால் உழவுத் தொழிலை நம் முன்னோர் மிகவும் செம்மையான முறையில் செய்தனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

முதன்முதல் உழுவதைப் பொன்னேர் பூட்டல் என்ற விழாவாகவே கொண்டாடுவர். நெல் கதிரையும் அருகம் புல்லையும் மாலையாகத் தொடுத்துக் கலப்பைக் கட்டித் தொழுது பொன் ஏர் பூட்டி ஏர் மங்கலம் பாடுவர் என்பதை,

**கொழுங்கொடி அறுகையும் குவளையும் கலந்து சிலப்பதிகாரம்**
**விளங்கு கதிர் தொடுத்த விரயல் சூட்டிப்**
**பார் உடைப் பனர் போல் பழிச்சனர் கை தொழ**
**ஏரொடு நின்றோர் ஓர் மங்கலமும் (சிலம்பு.10: 132 - 135)**

என்ற சிலப்பதிகார அடிகள் மூலம் அறியலாம்.

ஏழைக்கு உணவு அளிக்கவும் மன்னர்களுக்கு வரிப்பொருள் வழங்கவும் உழவுத் தொழில் உதவுகிறது என்பதை,

**இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்**
**உழவிடை விளைப் போர் (சிலம்பு. நாடுகாண் காதை – 149 - 150)**

என்று சிலப்பதிகாரம் உணர்த்துகிறது.

கம்பர் தாம் இயற்றிய ஏர் எழுபது முழுமையும் உழவனைப் பற்றியும் உழவின் சிறப்பையுமே புகழ்ந்து பேசியுள்ளார். 'உழும் குலத்தில் பிறந்தாரே உலகுய்யப் பிறந்தார்.'[14] என்று வேளாளரினும் மேம்பட்ட சாதியர் இல்லை என்கிறார்.

**உழவின் சிறப்பு**

உழவின் சிறப்பை வான்புகழ் கொண்ட வள்ளுவர்,

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர் மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர். (குறள். 1033)**

என்று குறிப்பிடுகிறார். மேலும் உழவியல் செயல்முறைகளில் உழுதல், உரமிடுதல், களை நீக்குதல், நீர் பாய்ச்சுதல், பயிர்ப் பாதுகாப்பு என்ற ஐந்து முறைகளைப் பயன்படுத்திப் பயிர்த்தொழில் செய்யும் உத்திமுறையை விளக்கும் வகையில்,

**ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு. (குறள். 1038)**

என்று வள்ளுவர் கூறிய முறையே இன்றுவரையிலும் பின்பற்றப்படுகிறது.

அரசனது செங்கோலை நடத்தும் கோல் உழவன் ஏரடிக்கும் சிறுகோலே என்றார் கம்பர். உலகம் என்னும் தேருக்கு உழவனே அச்சாணி என்றார் வள்ளுவர். திருஞானசம்பந்தரும் 'வள்ளன்மையால் மிக்கிருக்கும் தாளாளர்'[15] என்று வேளாளருடைய பண்புகளைத் தேவாரத்தில் கூறியுள்ளார்.

என்பது அவர் தேவாரம். இருபதாம் நூற்றாண்டுக் கவிஞரான பாரதியும் 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனைச் செய்வோம்'[16] என்று உழவின் சிறப்பைப் போற்றியுள்ளார்.

அக்காலத்தில் இசையரங்குகளில் நடனச்சாலைகளிலும் உழவரை வாழ்த்தும் வழக்கம் இருந்தது. முதலில் மன்னன் வாழ்த்தும் பிறகு உணவளிக்கும் உழவனை வாழ்த்தலும் இருந்துள்ளது. முன்னாளில் சொன்ன சொல் தவறாதவர் என்ற பெருமை வேளாளருக்கு இருந்தது. அந்தவகையில் வேளாளருக்குரிய பயிர்த்தொழிலைப் புகழாத புலவர்களே இல்லை. உழவனே நாட்டின் உயிர்நாடி அவன் ஊக்கமே அரசனது ஆக்கம். அவன் நட்ட நாற்றுத் தழைத்தால் மன்னன் மணிமுடி தழைக்கும் என்றும் புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர்.

**வேளாண் நிலம்**

வேளாண் நிலத்தைக் குறிக்க வயல், பணை, கழனி போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டன. 'பழனம்' என்னும் சொல்லும் நிலத்தைக் குறிப்பதை (மது. 257, மலை. 454) மதுரைக்காஞ்சியும் மலைபடுகடாமும் பதிவு செய்துள்ளது. வயல் என்னும்

சொல் பற்றி (நற். 200 : 6, அகம்.6 :16, 46 : 4, 106 : 1, 256 :6) நற்றிணையும் அகநானூறும் குறிப்பிடுகிறது. மேலும் வளமான நிலம் ‘பணை’ எனவும் சுட்டப் பெற்றுள்ளது. ‘மருதம் சான்ற பணை’ (மது. 270) ‘தண்பணை தழீஇய தளரா இருக்கை’ (பெரும். 242) என மருதநில வளம் பேசும் இடங்களில் ‘பணை’ என்னும் சொல்லாட்சி இடம்பெறுகின்றது. கழனி, வயல்கள் என்ற பெயர்களும் நிலங்களைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**நிலப்பாகுபாடு**

நிலத்தை நான்கு வகையாகப் பிரிக்கலாம். அவை,

1. வன்புலம் – குறிஞ்சி, முல்லை
2. மென்புலம் – மருதம், நெய்தல்
3. புன்புலம் – மானவாரிப் பகுதி
4. களர்நிலம் – விளைவதற்கு ஏற்ற நிலம் அன்று

என வகைப்படுத்தலாம். வன்புலம், மென்புலம் நிலத்தைப் பற்றிப் புறநானூறு பின்வருமாறு குறிப்பிடுகிறது.

**வித்தி வானோர்க்கும் புன்புலங் கண்ணகன்**
**வைப்பிற் றாயினு நண்ணி யாளும்**
**இறைவன் றாட்குத வாதே (புறம். 18 : 24 - 26)**

இதற்கு விளக்கம் அளிக்கும் வகையில் பெ. மாதையன் ‘வன்புலம் என்பது மேட்டுநிலம் வலிய நிலம் என்பதோ குறிஞ்சி, முல்லை நிலங்களாகவும் சொல்லப்பட்டுள்ளது. முல்லை நிலப் பகுதிகளில் இருந்த நன்செய் நிலங்களையும் மருதம், நெய்தல் நிலப் பகுதிகளையும் மென்பால் எனச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.’[17] எனச் சுட்டியுள்ளார்.

**பயிர் வகைகள்**

பயிர் வகைகளை, நிலத்தைப் பொருத்தும் அதில் விளையும் பயிர்களைப் பொருத்தும் இரண்டாகப் பிரிக்கலாம்.

1) நன்செய் பயிர்

2) புன்செய் பயிர்

**நன்செய் பயிர்**

அதிக அளவில் நீர் பாய்ச்சி பயிரிடப்படும் நெல்லும் கரும்பும் முக்கியப் பயிராகக் கருதப்பட்டது. மருத நிலத்தில் நெல்லுக்கு அடுத்தபடியாகக் கரும்பு முக்கியத்துவம் பெற்றது.

**வயல்கள்**

ஐங்குறுநூற்றில் மன்னனை வாழ்த்தும்போது வயல்களையும் வாழ்த்திக் கூறியுள்ளனர். வயல்கள் மிகுதியாக விளையட்டும். இரவலர்கள் மிகுதியாக வரட்டும் என்று புகழ்ந்து கூறுவதாக அமைந்த பாடலில்,

**விளைக வயலே! வருக இரவலர் (ஐங்.2 : 2)**

மேலும் வயலைக் குறிக்கப் பழனம் என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டதை,

**பழனம் சேர் ஊர (கலி.70:6)**

**வண்பிணி தளை விடூஉம் வயல்அணி நல்ஊர (கலி.73 : 5)**

என்ற பாடல் அடிகள் வயலைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

**நிலத்தை உழுமுறையின் வகை**

உழவர்கள் நிலத்தை உழும் முறையை வைத்து நான்கு முறையாகப் பிரிப்பர். ஒரு முறை உழுதலை 'ஒரு சால் உழவு' எனவும் இருமுறை உழுதலை 'இருசால் உழவு' என்றும் பலமுறை உழுதலைச் 'செஞ்சால் உழவு' என்றும் அகல உழுதலை 'ஆழ உழவு' என்றும் உழவர்கள் நிலத்தை உழும் பாங்கினைப் பெரும்பாணாற்றுப்படை,

**இன்சுவை மூரற் பெறுகுவிர் ஞாங்கர்க்**

**……………………………………………**

**உடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்          (பெரும். 196 - 200)**

என விளக்குகிறது.

நிலத்தைப் பயிர் இடுவதற்கு முன் மண்ணானது மேல் – கீழ் புரளும்படி பலமுறை உழுவர். உழுதவுடனே பயிர் செய்யாமல் காயவிடுவர் என்பதை,

**………………… உறுபெயல்**

**தண் துளிக்கு ஏற்ற பலஉழு செஞ்சேய**

**மண்போல் நெகிழ்ந்து          (அகம்.26 : 23 – 25)**

உழும் நிலத்தில் இருக்கும் புழுதி மண் நான்கின் ஒரு பங்காகும்படி உழுது காயவிட்டால் அப்புழுதியே பயிருக்கு நல்ல எருவாகும் என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

**ஏர் உழுதல்**

வேளாண்மைக்கு மிக முக்கியமான கருவி கலப்பை ஆகும். இதற்கு அபிதான சிந்தாமணி 'உழவர் நிலத்தைப் பண்படுத்த உபயோக்கிக்கும் கருவி இது நிலத்திலுள்ள உறுதியான மண்ணினைக் கீழ் மேலாகக் கலப்பது'[18] என்று விளக்கம் கூறுகிறது. இக்கருவியை உருவாக்கவும் பயன்படுத்தவும் பழந்தமிழர் கற்றிருந்தனர். இக்கருவியைக் குறிக்க ஏர், நாஞ்சில் என்ற சொற்கள் உள்ளன. அகநானூற்றில் 'சிறுபுறம் கவையின னாக உறுபெயல்' (அகம். 26 : 23) என்ற தொடரில் 'கவையின' என்ற சொல் கலப்பையைக் குறிக்கவும் 'தண் துளிக்கு ஏற்ற பல உழு செஞ்செய்' (அகம்.26 : 24) என்பதில் கலப்பையின் உறுப்பாகிய 'கொழு' என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

நிலத்தை முதன்முதல் உழுவதைப் பொன்னேர் பூட்டல் என்ற விழாவாகவே கொண்டாடுவர். நெல் கதிரையும் அறுகம் புல்லையும் மாலையாகத் தொடுத்துக் கலப்பைக்குச் சூட்டித் தொழுது பொன்ஏர் மங்கலம் பாடுவர் என்பதை,

**கொழுங்கொடி அறுகையும் குவளையும் கலந்து**
**விளங்கு கதிர தொத்த விரயல் சூட்டிப்**
**பார் உடைப் பனர் போல் பழிச்சினர் கைதொழ**
**ஏரொடு நின்றோர் ஓர் மங்கலம் (சிலம்பு. 10 : 132 : 135)**

எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. மேலும் மாடுகளினால் மிதிக்கச் செய்ததை,

**பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்**
**காரேறு பொருத கண்ணகன் செறுவி**
**னுழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர் (பெரும். 209 - 211)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. முதல் நாள் நிலத்தில் வேலை செய்து களைத்துச் சேற்றில் வீழ்ந்த எருதுகளைத் தூக்கும் கள்ளார் களமரின் ஆர்ப்பொலியைப் பற்றி மதுரைக்காஞ்சி பதிவு செய்துள்ளது.

**அள்ளற் றங்கிய பகடுறு விழுமங்**
**கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே (மதுரை. 259 - 260)**

எருதின் காலில் பட்ட சேறு புள்ளிகளுடன் வெண்மையான நிறத்தில் மேற்புறத்தில் விளங்கியதை,

**பகடுசேறு உதைத்த புள்ளவெண் புறத்துச்**
**செஞ்சால் உழவர் கோல்புடை மதரி**
**வைங்காற் செறுவின் அணைமுதல் பிறழும் (நற். 340 : 6 - 8)**

என நற்றிணை குறிப்பிடுகிறது. இதன்மூலம் எருதுகள் கொண்டு நிலம் உழுதலையும் சோர்வுற்ற எருதின் நிலையையும் அறியமுடிகிறது.

**உழுகருவி**

குறிஞ்சி நில மக்கள் ஏர் கொண்டு உழாமல் வேளாண்மை செய்தனர். இதை மலைபடுகடாம் 'தய்யாது வித்திய துளர்படு துடவை' என்று குறிப்பிடுகிறது. முல்லை நிலத்தில் கலப்பையின் வருகை தொடங்குகிறது. அந்தக் கலப்பை எளிய வடிவில் இருந்ததை,

**படிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்**

**களிற்றுத் தாள் புரையும் திரிமரப் பந்தர்**

**குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி (பெரும். 196 - 199)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**நாஞ்சில் ஒப்ப நிலமிசைப் புரள (புறம். 19 : 11)**

**உழாஅ நாஞ்சில் பொருந (புறம். 139 : 8)**

என்பதனால் கலப்பைக்கு நாஞ்சில் என்ற பெயரும் உண்டு என அறியமுடிகிறது. இத்தகைய உழுபடையின் உருவ அமைப்பு எவ்வாறு இருந்தது என்பதை,

**பிடிவாய் அன்ன மடி வாய் நாஞ்சில்**

**உடுப்புமுக உழுக் கொழு மூழ்க (பெரும். 199 - 200)**

பெரும்பாணாற்றுப்படை அடிகளின் மூலம் அறியலாம்.

சோழன் கிள்ளி வளவன் பெற்ற வெற்றிகளுக்குக் காரணம் கலப்பை உழுது விளைந்த நெல்லே. உழுகருவியைக் கொண்டு நிலம் உழப்பட்டதை,

**பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை**

**ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே (புறம். 35 : 25 - 26)**

எனும் புறநானூற்றுப் பாடல்வழித் தெளியலாம்.

உழுகருவியின் கீழ்ப்பகுதியைக் குறிக்கும் கொழு உழவன் உழுது உழுது தேய்ந்து போய்விட்டதை,

**கொல்லை உழுகொழு ஏய்ப்ப பல்லே**

**எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி (பொரு. 117 - 118)**

உழவன் உழுது கொழு தேய்ந்தது போல் மன்னன் அளித்த இறைச்சியை மென்று தின்று எங்கள் பற்கள் தேய்ந்து போனது என்று இரவலன் குறிப்பிடுகிறான் என்பதை மேற்கண்ட அடிகள் உணர்த்துகின்றன.

**நாற்றாங்கால்**

விதை விதைத்த நாற்றங்கால் இருக்கும் இடத்தினை 'வித்திடுபுல மேடாயிற்றென' (பரி. 7 : 35) நாற்றங்கால் இருந்ததையும் அதில் வையையில் வெள்ளப்பெருக்கின் போது அடித்து வரப்பட்ட வண்டல் மண் மூடி மேடாக்கியதையும் பார்த்து உழவர்கள் வருந்தியதை,

**பழன உழவர் பாய் புனல் பரத்தந்து** **(பரி. 7 : 39)**

என்ற பரிபாடல் அடி நமக்குத் தெளிவுபடுத்துகிறது.

**நெல் வகைகள்**

செந்நெல், வெண்ணெல், சாலிநெல், முடந்தைநெல், ஐவனநெல், கோரைநெல், குளநெல், தோப்புநெல் போன்ற பல நெல் வகைகளைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றது. குறிஞ்சி நிலத்தில் அருவிப் பாசனத்தைப் பயன்படுத்தி ஐவனநெல் விளைவித்துள்ளனர் என்பதை,

**அருவிப் பரப்பில் ஐவனம் வித்திப்**
**பருவிலைக் குளவியொடு பசுமரல் கட்டும்** **(குறுந். 100 : 1 - 2)**

என்னும் குறுந்தொகை அடிகள் உணர்த்துகின்றன.

மேலும் செந்நெல், வெண்ணெல் பற்றியும் சாலிநெல், தோரைநெல் பற்றியும் பின்வரும் அடிகள் குறிப்பிடுகின்றன.

| | |
|---|---|
| **வெண்ணெல் அரிநர்** | **(நற். 350 : 1, அகம். 236 : 4)** |
| **வெண்ணெற் போர்வின்** | **(ஐங். 58 : 1)** |
| **வெண்ணெல் வைப்பிற்** | **(அகம். 96 : 14)** |
| **செந்நெல் வான்பொரி** | **(குறுந். 53 : 4)** |
| **செந்நெல் விளைஞர்** | **(அகம். 116 : 2)** |
| **செந்நெல் செறுவிற்** | **(ஐங். 27 : 1)** |
| **பழஞ்செந் நெல்லின்** | **(அகம். 126 : 11)** |
| **சாலிநெல்லின்** | **(பொருநர். 246)** |

**குறுங்கதிர்த் தோரை (மதுரை. 287)**

சங்க காலத் தமிழர்கள் நெல்லின் இனங்களை அறிந்து பயிரிட்டனர் என்பதை அடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

**நெல்விதை**

விதைநெல்லைப் பக்குவமாகப் பதப்படுத்தி அதனை விதைக்குப் பயன்படுத்துவது வழக்கமாகும். விதையைப் பொறுத்தே விளைச்சல் அமையும். எனவே விதைகளைத் தேர்ந்தெடுப்பதில் கவனமாக இருந்துள்ளான் தமிழன்.

வயலில் விதைத்த நெல்லின் முளைகளை நண்டு அறுக்கும் வயலை உடைய தலைவனே என்று கூறப்பட்டதில் இருந்து நெல்லின் விதையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது.

**விந்திய வெண்முளை களவன் அறுக்கும் (ஐங். 29 : 2)**

நெல்லானது ஒரு ஆண்டுக்கு மூன்று முறை பயிரிடப்பட்டது. அதாவது குறுவை, சம்பா, தாளடி என்ற மூன்று முறை பருவமழை அதிகமாகப் பொழியும் காலத்தில் பயிரிடப்படும். சங்க காலத்திலும் நெல்லறுத்து முடித்த அகன்ற வயலில் மீண்டும் ஈரமான சேற்றில் உழுது விதைக்கும் பொருட்டு விதைகளை ஓலைப் பெட்டியில் கொண்டு சென்றனர். விதைத்துத் திரும்புகையில் ஓலைப் பெட்டி நிறைய மீன்களைக் கொண்டு வருவதை,

**வித்தொடு சென்ற வட்டி பற்பல**
**மீனொடு பெயரும் யாணர் ஊர (நற். 210 : 3 - 4)**

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகிறது.

**நாற்று நடுதல்**

நாற்றங்காலில் இருந்த நாற்றை 27 நாட்கள் கழித்துப் பிடுங்கி அதனை வேறு இடத்தில் நடவு செய்வர். உழவர் உணவு உண்ட மயக்கத்திலும் உழத்தியரோடு நீர் வளம்மிக்க சேற்றிலே நாற்றுகளை நடுவதற்குச் சென்றனர் என்பதை,

**நீர் உறு செறுவின் நாறுமுடி அழுத்தநின்**

**நடுநரொடு சேறி ஆயின் அவண** (நற். 60 : 7 - 8)

எனும் நற்றிணை அடிகள் தெளிவுறுத்துகிறது.

நண்டின் வளைகள் சிதையும்படி பசிய கோரையைக் குத்திக்கோட்டு மண் கொண்ட காரேறுகள் ஒன்றை ஒன்று சண்டைப் போட்டுக் கொண்டமையால் வயல்கள் சேறாகியது. அந்தச் சேற்றைச் சமம்பட மிதித்து உழவர்கள் நாற்று நடுவதை,

**கலைத்தார் அலவன் அளற்றுஅளை சிதைய**

**பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பின்**

**கார்ஏறு பொருந கண்அகன் செறுவின்**

**உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர்**

**முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்** (பெரும். 207 - 212)

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**வேளாண் மகளிர்**

வேளாண் செய்வதில் பெண்களின் பங்கு அளப்பரியது. தாய்வழிச் சமூகத்தில் தலைமை ஏற்றது போலவே விவசாயத்தையும் சிறப்பாகச் செயல்படுத்தினாள். நிலவுடைமை சமுகத்தில் ஆண் அதிகாரம் பெற்றவனாக மாறியது போலவே விவசாயமும் ஆண் கைக்குச் சென்றுவிட்டது. பெண்களுக்கான தலைமை இடத்தை 'ஈட்டி / வேல் கண்டுபிடிக்கப்பட்டதும் வேட்டை ஆணின் தொழில் ஆனது. பெண்கள் உணவு சேகரித்தார்கள். வேட்டையாடுவது பிராணி வளர்ப்புக்குக் கொண்டு சென்றது. உணவு சேகரிப்பு விவசாயத்துக்குக் கொண்டு சென்றது. ஆக, பெண்களே விவசாயத்தைக் கண்டுபிடித்தனர். கலப்பையைக் கண்டுபிடித்த உடன் விவசாயம் ஆண்கள் தொழிலானது'.[19] என்று தேவிபிரசாத் சட்டோ பாத்தியாயா குறிப்பிடுகிறார்.

‘நிலத்தை முறையாக உழவு செய்யும் செயலை இந்தியாவில் முதன்முதலாகக் கண்டுபிடித்தவர் பெண்களே’[20] என்பது புகழ்மிக்க இந்தியாவில் தாயுரிமை (Mother Right in India) என்ற நூலின் ஆசிரியர் எஃரன் பெல்ஸின் இறுதி முடிவாகும்.

வேளாண் தொழிலில் ஆண்களைவிட பெண்களே அதிக அளவில் ஈடுபட்டனர். அவர்கள் ஆண்களுக்கு நிகராகப் பல வேலைகளைச் செய்தனர்.

**நீர்நிலைகள்**

ஆரம்ப காலத்தில் நீர்நிலைகளுக்குப் பக்கத்திலேயே உழவுத் தொழிலைச் செய்தனர். பல அனுபவத்திற்குப் பிறகு வேளாண் செய்யும் நிலத்தை அதிகப்படுத்த அதிகப்படுத்த அந்த நிலத்திற்கு ஆறுகளில் இருந்து நீரினைப் பாய்ச்சும் முறையை அறிந்து பயன்படுத்தினர். உழவுத்தொழில் நாட்டில் நன்கு வளர்ச்சி அடைவதற்குத் தமிழ் வேந்தர்கள் ஆறுகளை அகலப்படுத்தி அதன் கரைகளை உயர்த்தினர். கால்வாய்களை வெட்டுவித்தனர். ஏரிகளையும் குளங்களையும் தோண்டினர் என்பதை,

**கங்கை வாரியுங் காவிரிப் பயனும்**
**ஈழத்து உணவுங் காழகத்து ஆக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு (பட்டி. 190 - 193)**

என்ற பட்டினப்பாலை அடிகள் மூலம் அறியமுடிகிறது. இரண்டாம் கரிகாலன் ஏரிகள் வெட்டி நிலத்தை வளப்படுத்தினான் என்பதை,

**குளந்தொட்டு வளம் பெருக்கி (பட்டி.284)**

என்னும் பட்டினப்பாலை அடி உணர்த்துகின்றது.

**நீர் பாய்ச்சும் முறைகள்**

வயல்களுக்கு மூன்று முறைகளில் நீர் பாய்ச்சினர். அவை

1. வரிசையாக நின்று சிலர் குளங்களிலிருந்து பட்டையினால் இறைத்து வயலிலே நீர் பாய்ச்சுவர் அவ்வாறு இறைக்கும்போது பாடலைப் பாடுவர் என்பதை,

**நீர்த்தெவ்வு நிரைத் தொழுவர்**

**பாடுசிலம்பு மிசை ……… (மதுரை. 89 – 90)**

என்ற மதுரைக்காஞ்சி அடிகள் மூலம் அறியமுடிகிறது.

2. மாடுகளைக் கொண்டு ஆம்பி (பன்றிப்பந்தர்) மூலம் இறைக்கும் வழக்கமும் இருந்ததை,

**………………. ஏற்றத்**

**தோடுவழங்கு மகலாம்பி (மதுரை. 90 - 91)**

என்ற மதுரைக்காஞ்சி அடிகள் மூலம் அறியமுடிகிறது.

3. துலா அமைத்துப் பூட்டைப் பொறினாயிலும் நீர் இறைப்பர்.

**மென்றொடை வன்கிழார் (மதுரை. 93)**

என்ற மதுரைக்காஞ்சி அடிகள் மூலம் அறியமுடிகிறது.

தமிழர்கள் வேளாண் தொழில் செய்ய ஏரி, கண்மாய், குளங்களில் நீரைத் தேக்கி மடை, மதகு, களிங்கு, வாரி போன்றவற்றை உண்டாக்கிப் பாசனத்திற்குப் பயன்படுத்தினர். மேலும் பாம்பு போல் வளைந்த அணைகள், கொஞ்சிரைகள், கற்சிரைகள் நீரின் வேகத்தைக் கட்டுப்படுத்தக் கட்டப்பட்டன என்பதை,

**வருந்திக் கொண்ட வல்லாய்க் கொடுஞ்சிரை**

**மீதில் கொடு நீர் போக்கி (அகம். 346 : 9 - 10)**

என்ற அகநானூற்று அடிகளால் அறியமுடிகிறது.

வயல்களுக்குக் குளங்களிலிருந்தும் கிணறுகளிலிருந்தும் நீர் இறைக்கப்பட்ட செய்தியை,

**ஊர் கொண்ட உயர் கொற்றவ**

**…………………………………**

**கயன் அகைய வயல் நிறைக்கும் (மதுரை. 89 - 92)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

ஆற்றங்கரைகளில் இருந்து தங்களுடைய நாகரிகத்தை வளப்படுத்திய தமிழர்கள் நீர்நிலைகளை விவசாயத்திற்குச் சிறந்த முறையில் பயன்படுத்த அறிந்திருந்தனர் என்பது தெளிவாகப் புலனாகிறது.

**பயிர்ப் பாதுகாப்பு**

உழவர்கள் ஆடு, மாடுகளிடம் இருந்தும் பன்றி போன்ற விலங்குகளிடம் இருந்தும் பயிர்களைப் பாதுகாக்கக் காஞ்சி மரத்தின் குறுகிய துண்டுகளை நட்டு மென்மையான தண்டையுடைய கரும்புத் துண்டுகள் பலவற்றைக் குறுக்கே வைத்து அடைத்து நெற்பயிரைப் பாதுகாத்தனர் என்பதை,

**காஞ்சிஅம் குறுந்தறி குத்தி தீம்சுவை**
**மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து**
**பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி (அகம். 346 : 6 - 8)**

மற்றொரு பாடலில் விளைந்த வயலிலே புகுந்து மேயும் மாடுகளைப் பிடித்துக் காஞ்சி மரத்திலே கட்டி வைப்பர் என்பதை,

**செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்**
**மூதா தின்றல் அஞ்சி,காவலர் (அகம். 156 : 3 - 4)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம்.

வையையில் நீர்ப்பெருக்கு ஏற்படும் காலங்களில் அவர்கள் பயிர் செய்துள்ள பயிர்களைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டுத் துடிகளை முழக்கி அனைவருக்கும் அறிவிப்பு செய்வார்கள் என்பதை,

**பழன வாளை பாளை உண்டென**
**வித்து இடு புலம் மேடு ஆயிற்றென (பரி.7: 34 - 35)**

என்ற பரிபாடல் அடிகளின் மூலம் தங்களுடைய உழைப்பும் பொருளும் வீணாகப் போய்விடக் கூடாது என்பதில் மக்கள் முனைப்புடன் செயல்பட்டனர் என்பதை அறியமுடிகிறது.

**களைப் பறித்தல்**

வயல்களில் நெல்பயிரோடு தேவை இல்லாத புல் வகைகளைப் பறித்து வெளியே போட்டு விடுவர். உழவர்கள் வயல்களில் வேலை செய்து கொண்டிருக்க உழவர்களின் பிள்ளைகள் களைப் பறிப்போர் பறித்துப் போட்ட நெய்தல் மலரைச் சூடியும் அது பிடிக்கவில்லை என்றால் முள்ளி மலரைப் பறித்து மாலையாகக் கோர்த்துக் கழுத்தில் சூடிக்கொள்வர் என்பதை,

**களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்**
**கள்கமழ் புதுப்பூ முனையின் முட்சினை**
**...............................................**
**பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டி (பெரும். 213 - 17)**

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் விளக்குகின்றன.

நெய்தல் மலரைக் களையாகக் கருதி அப்புறப்படுத்தியதை,

**நின்ஊர் நெய்தல் அனையேம் பெரும (குறு. 309 : 6)**

எனப் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது.

இதனால் நெல் நடவில் உழவர்கள் களைப் பறித்தனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**நெல் பூ**

நாற்று நட்டு நீர் பாய்ச்சி களைப் பறித்த பின்னர் நெல் வளர்ந்து நிற்கும் வளர்ச்சியின் முதல் நிலையாக நெல்லின் தண்டில் இருந்து பூ தோன்ற ஆரம்பிக்கும்.

அப்பூக்கள் நண்டு தோண்டி வைத்த வளையின் மீது மிகுதியாக உதிர்ந்துக் கிடக்கும் என்பதை,

**தண்ணக மண்அளை நிறைய நெல்லின்**
**இரும்பூ உறைக்கும் ஊரற்கு இவன் (ஐங். 30 : 2 - 3)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் விளக்குகிறது.

**நெல் கதிர்**

பெரிய உருவம் கொண்ட யானையே மறைக்கும்படி நெற்கதிர்கள் வளர்ந்து இருப்பதைக் 'களிறு மாய்க்கும் கதிர்க் கழனி' (மதுரை.247) என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

**கதிர் அறுத்தல்**

நெற்கதிர் விளைந்த வயலில் சேற்றில் நின்று மள்ளர் கதிர் அறுப்பர். அவர் அறுத்துப் போட்ட சூட்டில் வாளை மீன் பிறழும் செய்தியை,

**வாழை மென்தோடு வார்புறுபு ஊக்கும்**
**நெல்வினை கழனி நேர்கண் செறுவின்**
**அரிவனர் இட்ட சூட்டுஅயல் பெரிய (நற். 400 : 1 - 3)**

என்னும் நற்றிணை அடிகள் உணர்த்துகின்றன.

நெல்லை அறுவடை செய்வோர் பெரிய மீன் ஒன்றைப் பிடித்துத் துண்டாக்கி உண்டனர் என்பதை,

**வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை (அகம். 236 : 4)**

என்னும் அகநானூறு அடி உணர்த்துகிறது.

**உழவர்கள் எழுப்பும் ஓசை**

முற்றிய நெற்கதிர்களை அறுப்பவர்கள் தன்னுடைய கைகளால் பறைஓசை எழுப்பவர் என்பதை,

**ஒவித்த பகன்றை விளைந்த கழனி**

**வன்னக வினைஞர் அரிபறை இன்குரல்** **(மதுரை. 261 - 262)**

என்னும் அடிகளால் உணர முடிகிறது.

மருத நிலத்தில் கரும்பு மற்றும் நெல்லை அறுவடை செய்யும்போது உழவர்கள் எழுப்பும் ஓசைக்கு அஞ்சி அங்கு இருக்கும் நாரைகள் மற்ற நிலத்திற்குச் சென்று விடுகிறது. இதனை,

**அறைக் கரும்பின் அரி நெல்லின்**

**இனக் களமர் இசை பெருக** **(பொருந. 193 - 194)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

**நெல் அடுக்கப்பட்டு இருத்தல்**

நெற்கதிர்கள் கட்டுக் கட்டாய் அடுக்கப்பட்டு இருந்ததையும் களத்தைச் சுற்றிக் கோரைப் புற்கள் முளைத்து இருந்ததையும் அருகிலிலுள்ள மாமரத்தின் கிளைகளில் பூக்கள் மழைத்துளி போல உதிர்ந்து எங்கும் பரவி இருந்ததையும்,

**வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை**

**இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்**

**பனிபடு சாயப்புறம் பரிப்ப கழனிக்**

**கருங்கோட்டு மாஅத்து அலங்குசினைப் புதுப்பூ** **(அகம். 236 : 4 - 7)**

என அகநானூறு காட்சிப்படுத்தியுள்ளது.

**நெல் அரிந்து கடாவிடுதல்**

நன்றாக முற்றிய நெல்லின் தாளை அறுத்து மருத மரத்தின் நிழலின் அடியில் குவித்து வைப்பர். பின்னர்த் தாள்களைக் களைத்து எருதினைக் கொண்டு மிதிக்க வைத்து

நெல்லையும் வைக்கோலையும் தனித்தனியாகப் பிரித்து வைக்கோலைப் பரப்பிக் காய வைத்து பின்னர் தூசு போகக் காற்றில் தூற்றி நெல்லை ஒரு இடத்தில் குவித்து வைப்பர் என்பதை,

**பைஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின்**

**……………………………………………..**

**தண்பணை தழீஇய தளரா இருக்கை (பெரும். 230 - 242)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**நெல் தூற்றுதல்**

உழவர்கள் கடாவிட்ட நெல்லை ஒரு இடத்தில் குவித்து அதில் உள்ள பதர் மற்றும் கூளத்தைக் காற்று அடிக்கும் பொழுது தூற்றிய கூளம் பறந்து போய் உப்பளத்தின் பாத்திகளில் படிந்தன. இதனால் பரதவர்கள் உழவர்களோடு சண்டை இட்டனர் என்பதை,

**கடுங்காற்று எறிய போகிய துரும்புடன்**

**காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின் (அகம். 366 : 4 - 5 )**

என அகநானூறு குறிப்பிடுகிறது.

**அதிக விளைச்சல்**

உழத்தியர் அரிவாள் கொண்டு முதிர்ந்து விளைந்த நெற்றாளை அரிந்து அதனை ஒன்றாகத் திரட்டி ஓர் இடத்தில் களைத்து பிணையடித்து மலையெனக் குவிப்பர். அடித்த நெல்லைக் குதிர்களில் வைத்தது போக மீதமுள்ள நெற்கள் ஓர் இடத்தில் குவியலாகக் கொட்டிக் கிடக்கும். இதற்குக் காரணம் ஆயிரங்கலம் நெல் விளைகின்ற வளப்பான

நாட்டைப் பெற்றிருந்ததே காரணமாகும் என்று பொருநராற்றுப்படை சிறப்பித்துக் கூறுவதை,

**கூனி குயத்தின் வாய்நெல் அரிந்து**
**சூடு கோடாகப் பிறக்கி நாள்தொறும்**
**குன்று எனக் குவைஇய குன்றாக் குப்பை**
**கடுந்தெற்று மூடையின் இடம்கெடக் கிடக்கும்**
**சாலி நெல்லின் சிறை கொள் வேலி**
**ஆயிரம் விளையுட்டு ஆக**
**காவிரி புரக்கும் நாடுகிழ வோனே (பொருந. 242 - 248)**

என்னும் அடிகள் மூலம் தெளிவுறமுடிகிறது. நெல்குவியலைப் பற்றி அகநானூறு 'பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்' (அகம். 46 : 14 ) என்று குறிப்பிடுகிறது.

**தானியங்களைப் பக்குவபடுத்தல்**

வீட்டின் முற்றத்தில் காய வைத்திருக்கும் தானியங்களைக் குருவி தின்னும் செய்தியை,

**கூம்பிய சிறகர் மனை உறை குரீஇ**
**முன்றில் உணங்கல் மாந்தி மன்றத்து (குறுந். 46 : 2 - 3)**

என்னும் குறுந்தொகை அடிகள் மூலம் தானியத்தை அடுத்த ஆண்டிற்குப் பயன்படுத்தக் காய வைத்துப் பக்குவப்படுத்தி வைத்தனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

**நெல் குற்றுதல்**

மருத நிலத்தில் சிறுமியர் கரும்பை உலக்கையாகக் கொண்டு தம் இடை அங்கும் இங்கும் அசையக் குடியின் பெருமையைப் பாடிக் கொண்டு நெல் குற்றுவதை,

**வெள்ளி விழுத்தொடி மென்கரும்பு உலக்கை**

**வள்ளி நுண்இடை வயின்வயின் நுடங்க (அகம். 286 : 1 - 2)**

என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

தலைவி பரந்த அடிப்பாகத்தையுடைய உரலில் நெல்லைக் குற்றும்போது தலைவன் பெயரைச் சுட்டி வள்ளைப்பாட்டைப் பாடிக் குற்றுகிறாள் என்பதை,

**பாஅடி உரல பகுவாய் வள்ளை**

**ஏதில் மாக்கள் நுவறுலும் நுவல்ப (குறுந். 89 : 1 – 2)**

என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

பசுமையான அவலை இடிக்க கரிய வயிரம் பாய்ந்த நல்ல கதிர்களை உடைய நெல் வயல்களின் வரப்பில் வைத்துவிட்டுப் பெண்கள் வண்டல் விளையாட்டை ஆடுவர் என்பதை,

**பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை**

**ஆய்கதிர் நெல்லின் வரம்பு அணைத் துயிற்றி**

**ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும் (குறுந். 238 : 1 - 3)**

என்னும் குறுந்தொகை அடிகளின் மூலம் அறியலாம்.

**நெல் நிறைந்த வீடு**

தோழி தன்னுடைய மகனைச் சிறுவர்களோடு சேர்ந்து விளையாடுவதற்கு அழைத்துச் சென்றாள். வெகுநேரம் ஆகியும் அவள் மகனை அழைத்து வராததால் நெல் நிறைந்த பெரிய வீட்டில் இரட்டைக் கதவின் மேல் சாய்ந்து கொண்டு தனிமையில் தலைவி கவலைப்பட நின்றதைக் கூறுவதன் மூலம் சங்ககாலத்தில் தங்களுடைய தேவைக்குப் போக மீதி நெல்லை அடுத்த ஆண்டிற்குச் சேர்த்து வைத்தனர் என்பதை,

**பெருந்திரு நிலைஇய வீங்குசோற்று அகன்மனை**

**பொருந்து நோன் கதவுஒற்றிப் புலம்பியாம் உலமர (கலி. 83 : 1 – 2)**

**மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்**

**பெருநெற் பல்கூட்டு எருமை உழவ (நற். 60 : 1 - 2)**

களங்களிலும் வீடுகளிலும் மலை போலும் உயர்ந்த நெற்கூடுகள் அடுக்கப்பட்டு இருப்பது மருதநில மக்களின் செல்வ வளத்தை வெளிப்படுத்திப் பொருளாதாரத்தில் சிறந்து விளங்கினார்கள் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**கரும்பு**

மருதநிலத்து மக்கள் நெல்லைப் பயிர் இட்டதைப் போல் கரும்பினையும் பயிர் செய்தனர் என்பதை,

**செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக் கதிர்**
**மூதா தின்றல் அஞ்சிக் காவலர்**
**..........................................................**
**காஞ்சியின் அகத்துக் கரும்பு அருந்தியாக்கும்** **(அகம். 156 : 3 - 6)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

கரும்பினை விளைவிப்பதில் மருதநில மக்கள் ஆர்வம் காட்டியதை,

**கரும்புநடு பாத்தியில் கலித்த ஆம்பல்** **(ஐங். 65 : 2)**

**கரும்பமல் படப்பைப் பெரும் பெயர்க் கள்ளூர்** **(அகம். 256 : 15)**

என்னும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

அதிக அளவில் விளைந்த கரும்பினை இயந்திரத்தைக் கொண்டு சாறு பிழிந்தனர் என்பதை,

**கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்** **(ஐங். 55 : 1)**
**விசய மடூஉம் புகை சூழ் ஆலை** **(பெரும். 261)**

என்னும் பாடலடிகளின் மூலம் அறியலாம்.

பயன்படாமல் பூத்துக் காய்ந்து போன கரும்பை மருதநில மக்கள் தங்களின் கைகளில் குருந்தடியாகக் கொண்டு மாங்கனிகளை மரத்தில் இருந்து உதிர்க்கப் பயன்படுத்தினர் என்பதை,

**பகன்றைக் கண்ணிப் பல்ஆன் கோவலர்**

**கரும்பு குணிலா மாங்கனி உதிர்க்கும்** **(ஐங். 87 : 1 - 2)**

என்னும் ஐங்குறுநூற்று அடிகள் மூலம் அறியலாம்.

நெல்லின் விளைச்சலைப் போலவே மருதநிலத்தில் கரும்பும் அதிகமாகப் பயிர் இடப்பட்டன என்ற குறிப்பு கிடைக்கப் பெறுகின்றன.

**புன்செய் பயிர்கள்**

மருதநிலத்தில் நன்செய் பயிர்களைப் போன்றே புன்செய் பயிர்களான உளுந்து போன்ற பயிர் வகைகள் பயிரிடப்பட்டன. புன்செய் நிலத்தில் விளையும் பயிர்கள் எவை எவை என்பதைப் புறநானூறு பட்டியலிட்டுக் கூறியுள்ளது.

**கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே**

**சிறுகொடிக் கொள்ளே பொறிகினர் அவரையோடு**

**இந்நான் கல்லது உணவும் இல்லை** **(புறம். 335)**

அதாவது தினை, வரகு, அவரை, கொள் முதலிய நான்கு மட்டுமே வன்புல மக்களின் உணவுப் பயிர் என மாங்குடி கிழார் குறிப்பிடுகிறார். மேலும் குறுந்தொகை புன்செய் நிலத்தைப் பற்றி அடையாளப்படுத்தும் விதமாக நெருங்கிப் படர்ந்த சிறிய இலையுடைய நெருஞ்சியின் புதிய மலர் கண்ணுக்கு இனிதாகத் தோன்றும் தன்மையுடைய நிலம் என்பதைப் ‘புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சி’(குறுந். 202 : 2) என்று குறிப்பிடுகிறது.

**உளுந்து**

தலைவியின் தோள்களைப் பற்றிக் கூறும்போது உளுத்தங்காயை உடைக்கும் தடியின் திரண்ட நுனியைப் போன்றதும் கரும்பு வடிவைத் தொய்யிலாக எழுதக்கூடியதுமாக இருந்ததை,

**உழுந்துடைக் கழுத்தின் கரும்புடைப் பணைத்தோள் (குறுந். 384 : 1)**

என்பதன் மூலம் அறியலாம்.

தமிழரின் திருமணமுறையைப் பதிவு செய்யும் அகநானூற்று 86 ஆவது பாடலில் திருமணத்திற்கு வந்தவர்களுக்கு உளுத்தம் பருப்பால் செய்த பொங்கல் பரிமாறப்பட்டதை,

**உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ்சோற்று அமலை நிற்ப நிரைகால் (அகம். 86 : 1 – 2)**

என்று கூறுவதில் இருந்து உளுந்து பயிரிட்டனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

**மீண்டும் விதை விதைத்தல்**

நெல் அறுவடைக்குப் பிறகு ஈரமாக வயலில் மீண்டும் விதைப்பதற்கு விதையைக் கொண்டு சென்றதை,

**அரிகால் மாறிய அம்கண் அகல்வயல்**
**மறுகால் உழுத ஈரச் செறுவின் (நற். 210 : 1 - 2)**

என்ற நற்றிணை அடிகள் மூலம் அறியமுடிகிறது.

**பொருளாதாரம்**

ஆரம்ப நிலையில் குறிஞ்சி, முல்லை நிலங்களில் வாழ்ந்த மக்கள் வேட்டைத் தொழிலையும் நிரை மேய்த்தலையும் முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்தனர். வறட்சி அதிகம் இருந்த இப்பகுதியில் மக்கள் ஒருவருக்குக் கிடைத்ததைக் குழுவாகப் பங்கிட்டு வாழ்ந்து வந்தனர். இக்கருத்துக்கு வலுசேர்க்கும் விதமாக ‘மக்கள்

பற்றாக்குறையான வாழ்க்கையே மேற்கொண்டிருந்தனர். இந்நிலையிலும் அவர்கள் கண சமூகத்தின் பங்கீட்டு மரபுகளைக் கறாராகப் பின்பற்றினார்கள் எழுதப்படாத இச்சட்டத்தை எவரும் மீறியதில்லை'[21] என்பதை வெ. பெருமாள்சாமி குறிப்பிடுகிறார்.

மேலும் இனக்குழுச் சமூகம் நிலவுடைமைச் சமூகமாக மாறும்போது எவ்வாறு ஒருவரின் கைக்குள் நிலம் வருகிறது என்பதை 'இயற்கை நிலையில் வாழ்ந்த மனிதன் களங்க மற்றவனாகவும் எளிய வாழ்க்கை வாழ்பவனாகவும் இன்பம் அனுபவிப்பவனாகவும் காணப்பட்டான். இந்தச் சமத்துவம் மக்கள்தொகை பெருகியதும் குடும்பம், தனியார் சொத்து போன்ற சமூக நிறுவனங்கள் தோன்றி மக்கள் சுயநலமிகளாக மாறி உன்னுடையது என்னுடையது எனப் பேச ஆரம்பித்து விட்டார்கள் வலிமையுடையோர்கள் கூடுதல் சொத்தும் எளியோர்கள் குறைவாகவும்தான் பெற முடிந்தது. இவ்வாறு இயற்கை நிலையில் ஏழை பணக்காரன் என்ற வேறுபாடு தோன்றிவிடுகிறது'[22] என்று ரூசோ குறிப்பிட்டுள்ளார்.

வளப்பம் உடைய நிலமான மருதநிலத்தின் பொருளாதாரத்தைப் பற்றி 'மிகவும் நுணக்கமாக நோக்கினால் மருதமானது மிக முக்கியமான நிலைத்த குடியிருப்பாக மாறிய அடிப்படை மாற்றத்தை அறிந்து கொள்ள முடியும். அங்கு வேளாண்மை வளர்ச்சிப் பெற்றது. முல்லையில் ஆடவர்கள் மிருகங்களைப் பராமரிக்கவும் குடியிருப்புகளைப் பாதுகாக்கவும் வெளியில் சென்றார்கள். இந்நிலையில் வேளாண்மையானது ஆரம்ப நிலையிலேயே இருந்தது. ஏனெனில் அது மிகுதியாக வளர்ச்சி பெற முடியாது. ஆனால் இத்தகைய பாதகமான வாய்ப்பற்ற நிலை மருதத்தின் குடியிருப்புகளில் காணப்படவில்லை. இவ்வேளாண்மை நிலப்பகுதியானது அதனுடைய பொருளாதாரச் செல்வாக்கினைச் செலுத்த முடிந்தது'[23] என்று கார்த்திகேசு சிவத்தம்பி குறிப்பிடுகிறார்.

மருதநில மக்கள் தாங்கள் விளைவித்த வேளாண் பொருட்களை மற்ற நிலத்திற்குப் பண்டமாற்று முறையில் கொடுத்துத் தங்களின் பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொண்டனர். அவ்வாறு பண்டமாற்று முறையில் வணிகம் செய்யும்பொழுது தங்களிடம் இருந்து பிறருக்குக் கொடுக்கும் பொருளில் குறைவுபடாமலும் அதேபோல்

அவர்களிடமிருந்து பெரும்பொருளை அதிகமாகப் பெற்றுக் கொள்ளாமலும் வணிகம் செய்ததை,

**கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது**

**பல்பண்டம் பகர்ந்து வீசும்**

**தொல் கொண்டி துவன்றிருக்கை (பட்டின. 210 - 212)**

என்று பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

பாணர் உள்நாட்டு நீர்நிலைகளில் வலை வீசியும் தூண்டில் இட்டும் மீன் பிடித்தார்கள். அவர்கள் பிடித்த மீன்களைப் பாண் மகளிர் ஊரில் கொண்டு போய்ப் பயிற்றுக்கும் தானியத்துக்கும் மாற்றினார்கள் என்பதை,

**முள்எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த**

**அகன்பெரு வட்டி நிறைய மனையோன்**

**அரிகால் பெரும்பயறு நிறைக்கும் (ஐங். 47 : 1 - 3)**

**வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடகள்**

**வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்**

**யாண்டுழி வெண்ணெல் நிறைக்கும் (ஐங். 48 : 1 - 3)**

என்னும் ஓரம்போகியார் பாடலால் அறியமுடிகிறது.

மக்கள் வாழ்ந்த பகுதியில் எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களும் விளைவதில்லை. விளைந்த பொருளைக் கொண்டு விளையாத பொருள்களையும் கிடைக்காத பொருள்களையும் பெற்றனர்.

மருதநில மக்கள் தங்கள் நிலத்தில் விளைந்த நெல்லைக் கொடுத்து மற்ற நிலத்தில் இருந்து தங்களுக்குத் தேவையான பொருட்களைப் பெற்றுக்கொண்டனர்.

நெய்தல் நிலத்தில் பெறப்பட்ட உப்பு நெல்லுக்கு இணையான பண்ட மாற்றாய்க் கொள்ளப்பட்டுள்ளன என்பதை,

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு (அகம். 140 : 7)**

**நெல்லும் உப்பும் நேரே ஊரீர்**

**கொள்ளீரே.........................** **(அகம். 390 : 8 - 9)**

என்னும் அகநானூற்று அடிகள் மூலம் அறியலாம்.

பண்டமாற்று முறைப் பற்றி நெய்தல் திணைச் சார்ந்த பாடல்களில் அதிகம் உள்ளது. ஒரு நிலத்தில் உற்பத்தி செய்த பொருட்கள் ஓரிடத்தில் குவிந்து தேவையின்றித் தேங்கிக் கிடக்காது பலவகையிலும் பலர்க்கும் பயன்படும் வகையில் பண்டமாற்று முறை உதவியது.

**அரசு உருவாக்கம்**

மருதநிலத்தாரின் உழவுத்தொழில்களும் நெய்தல் நிலத்தாரின் கடல்வழி வாணிகமும் பெருகப் பெருக அவர்தம் சிற்றூர்களும் பேரூர்களாய் விரியத் தொடங்கின. அதனால் சிற்றூர்த் தலைவர் பலர்க்கும் பெருந்தலைவனாகப் பேரூர் மன்னனொருவனைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளும் பொறுப்புச் சிறப்பாக மருதநிலத்தார்க்கு உரியதாயிற்று. உழவர்களால் தங்களுக்குரிய பேரூர்த் தலைவனாகத் தேர்ந்து கொள்ளப் பெற்றவனே வேந்தன் என அழைக்கப்பட்டான்.

உழவர்களுடைய முயற்சியால் நிலத்தில் விளையும் பொருள்களில் ஒரு பகுதியை வரியாகப் பெற்றுச் சிற்றூர்கள் பலவற்றையும் பாதுகாப்பது இவ்வேந்தனது இன்றியமையாக் கடமையாகக் கருதப்பெற்றது. நாளடைவில் கடலில் கப்பல்களைச் செலுத்தி வாணிகம் செய்வதைக் கண்காணிக்கும் பொறுப்பும் மன்னனுக்கு உரியதாய் அமைந்தது.

மன்னனைக் குறிக்க இறை, கோ, கிழவன், வேந்து, வேந்தன், அரசு, அரசன், குருசில், கொற்றம் முதலிய சொற்கள் இருந்தன. மன்னன் என்ற சொல் மன்னு என்னும் வினையடியாகப் பிறந்தது. 'மன்னு என்ற சொல்லுக்கு நிரந்திரமாக இரு, நீண்ட காலத்துக்கு இரு, ஏற்றுக்கொள்ளுதல், அழியாது பாதுகாத்தல், உறுதியாக இருத்தல், நிரம்பியிருத்தல்'[24] என்று தமிழ்ப் பேரகராதி பொருள் கூறுகிறது.

உழவுக்கும் வாணிகம் முதலிய பிற தொழிலுக்கும் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அவனுடைய வரிகளுக்கு உரியதாக மாறியது. மன்னன் உருவாகிய வரலாற்றை வெள்ளைவாரணன் கூறும்போது 'நிலை பெறுதல் என்னும் பொருளுடைய 'மன்னுதல்' என்பதன் அடியாகப் பிறந்த பெயரே 'மன்னன்' என்பதாகும். மக்களுடைய வாழ்வு நிலைபெற அவர்கள் நாட்டினை நிலைபெறக் காக்குங் கடமை பூண்ட பேரூர்த் தலைவன் மக்களால் மன்னன் என நன்கு மதித்துப் போற்றப் பெறுவானாயினன்'[25] என்று குறிப்பிடுகிறார்.

வேந்தர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வது மாடுபிடி சண்டையாக இருக்காமல் நிலத்தை அடைவதையே நோக்கமாக இருந்தது என்பதை,

'தமது ஆட்சிப் பரப்பைப் பெருக்கிக் கொள்ள வேண்டியும் மருதநிலத்தை ஆட்கொள்ள வேண்டியும் ஏனைய சமுதாயத் தலைவர்களைத் தம் ஆட்சிக்கீழ் கொணர வேண்டியும் முயன்ற வேந்தர்களிடம் மாடுபிடி சண்டைகளைக் காண இயலவில்லை. இவர்தம் நோக்கமெல்லாம் நிலக்கொள்ளையாகவே இருந்துள்ளது'[26] என்கிறார் பெ.மாதையன்.

மேலும் இனக்குழு வாழ்க்கை முறை அழிந்து அரசு தோற்றம் பெற்றதைச் 'சங்க காலத்தில் மருதநில வாழ்க்கை பிறநில வாழ்க்கைகளில் எல்லாம் செழிப்பு மிக்கதாயிருந்தது. இங்குக் குழுவாழ்க்கை அழிந்து அரசு தோன்றியது. பிற மக்களையும் அரசில் இணைத்துக் கொள்ளப் பல போர்கள் நிகழ்ந்தன ஒவ்வொரு குழுவாக அழிந்தது'[27] என்று நா.வானமாலை குறிப்பிடுகிறார்.

வேளாண்மையை முதன்மையாகக் கொண்டு இயங்கிய மருதநிலத்தில் அந்நிலத்து மக்கள் வேளாண்மையைக் கொண்டே தங்களுடைய தேவையை நிறைவேற்றிக் கொண்டனர். போக மீதியை மற்ற நிலத்தில் வாழும் மக்களிடம் பண்டத்தை மாற்றி வணிகத்தில் ஈடுட்டுப் பொருளாதாரத்தை உயர்த்திக் கொண்டனர். நிலவுடைமைச் சமூகம் தோன்றி அரசு உருவாக்கம் பெற மருதநிலம் முக்கியமாகத் திகழ்ந்தது.

**தொகுப்புரை**

❖ ஐவகைத் திணைப் பிரிவின் அடிப்படையில் வாழ்ந்த பழந்தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மைக்கு ஏற்ப அங்குக் கிடைக்கும் அல்லது விளையும்

பொருளுக்கு ஏற்பப் பல்வேறு தொழில்களைச் செய்து தங்களின் தேவையை நிறைவேற்றிக் கொண்டனர்

- ❖ மருதநில மக்கள் இயற்கையாகவும் தங்களின் உழைப்பாலும் உற்பத்தியாகும் உணவுக்குரிய பொருட்களைக் கொண்டு வருவாயினைப் பெருக்கிக் கொண்டனர்.
- ❖ உழவுத் தொழிலை நம் முன்னோர்கள் எந்தவித அறிவியல் வளர்ச்சி ஏற்படாத காலத்திலே அறிந்து இருந்தனர்.
- ❖ சங்க கால மக்கள் நெல் வகையினை அறிந்து பயிரிட்டனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.
- ❖ உழவனோடு இணையாக உழத்தியும் வேளாண்மையில் ஈடுபட்டு அதிக விளைச்சலை விளைவித்தனர்.
- ❖ நன்செய் பயிர்களும் புன்செய் பயிர்களும் மருத நிலத்தில் சிறந்த முறையில் பயிரிட்டனர்.
- ❖ வேளாண்மைத் தொழில் பெரும்பாலோருடைய வாழ்க்கைக்கு ஆதாரமாகவும் அடிப்படையாகவும் விளங்கியதைத் தெளிவாக அறியமுடிகிறது.
- ❖ வேளாண்மை என்ற சொல் பயிர்த் தொழிலையும் வேளாளர் என்ற சொல் அது செய்யும் மக்களையும் பின்னர் குறிப்பதாயிற்று.
- ❖ மருதத்திணைப் பாடல்களில் குறிப்பிட்டுள்ள வேளாண்மை நுட்பங்கள் பல அரிய அடிப்படைக் கருத்துக்களைக் கொண்டுள்ளன. வளர்ந்து வரும் அறிவியல் முன்னேற்றத்தில் அணுகுமுறைகள் வேறுபட்டாலும் அடிப்படைக் கருத்துகள் இன்றும் மாற்றமின்றியே விளங்குகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.
- ❖ பண்டைக் காலத்தில் வேளாண்மையே முக்கியத் தொழிலாக இருந்தது. உணவுக்கும் உடைக்குமான தேவை மனிதனை வேளாண்மையில் ஈடுபடச் செய்தது. நாகரிக வளர்ச்சி ஏற்பட ஆரம்பித்த காலத்திலிருந்துதான் வேறுபல தொழில்கள் தோன்ற ஆரம்பித்தன.
- ❖ ஒரு சமூகத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு அவர் அவர் செய்யும் தொழில் முக்கியக் காரணமாக இருந்தது.

- மருதநில வாழ்வு ஏனைய நிலங்களின் வாழ்க்கையினும் மேம்பட்டு விளங்கிற்று. நாற்று விட்டு, அதனைப் பிடுங்கி வேறு இடத்தில் நட்டு, களைப் பறித்து, நீர் பாய்ச்சி, உரம் இட்டு, அறுத்து கடாவிட்டு, நெல்லைப் பதப்படுத்தி அடுத்த ஆண்டிற்குப் பயன்படுத்தும் சிறந்த உத்திமுறையை மருதநில மக்கள் அறிந்து இருந்தனர் என்பதை அறியமுடிகிறது.
- வேளாளர் என்னும் சொல் சங்க இலக்கியங்களுக்குப் பின்னர்த் தோன்றிய சொல் ஆகலாம். இச்சொல்லைச் சங்க கால வேளாளர்களோடு இணைத்துப் பார்க்க இயலும். உழவுத்தொழில் செய்பவர்க்கே வேளிர் எனும் பெயர் வழங்கியதை அறிய முடிகிறது.
- வேளாண் நிலத்தைக் குறிக்க வயல், பணை, கழனி போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டன என்பதை அறிய முடிகிறது.
- செந்நெல், வெண்ணெல், சாலி நெல், முடந்தை நெல், ஐவன நெல், கோரை நெல், குளநெல், தோப்பு நெல் போன்ற பல நெல்வகைகளைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன.
- உழவர்கள் ஆடு, மாடுகளிடமிருந்தும் பன்றி போன்ற விலங்குகளிடமிருந்தும் பயிர்களைப் பாதுகாக்க காஞ்சிமரத்தின் குறுகிய துண்டுகளை நட்டு மென்மையான தன்னுடைய கரும்புத் துண்டுகள் பலவற்றைக் குறுக்கே வைத்து அடைத்து நெற்பயிரைப் பாதுகாத்தனர் என்பதை அறியமுடிகிறது.
- இயற்கையாகவும் உழைப்பாலும் உற்பத்தியாகும் பொருட்களே அந்த நிலத்திற்கு உரிய பொருளாதாரமாகக் கருதப்பட்டது.
- பொருளாதார வீழ்ச்சிக்கு இனக்குழுக்களுக்கு இடையே நடைபெற்ற போர் முறையும் அன்னியர் வரவும் முக்கியக் காரணமாக அமைந்தது.
- சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் வேளாண்மைக் குறித்த செய்திகளையும், வேளாண்மை செய்யும் உத்திமுறைகளையும் பழந்தமிழர் அறிந்தனர். அவர்கள் வேளாண்மைத் தொழிற்புரட்சி செய்தனர் என்பது இவ்வியலின்வழிப் பெறமுடிகிறது.

- மருதநில மக்கள் பண்டமாற்றத்தின் மூலம் தங்களின் தேவையை நிறைவு செய்துகொண்டனர்.
- நிலவுடைமைச் சமூகம் தோன்றி அரசு உருவாக்கம் பெற மருதநிலம் முக்கியமாகத் திகழ்ந்தது.

**சான்றெண் விளக்கம்**


1. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.36
2. வெ.பெருமாள்சாமி, சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை, ப.14
3. சு.சதாசிவம், பழந்தமிழர் வாழ்வும் வரலாறும், ப.29

4. பிங்கலந்தை நிகண்டு, பெயர்ப் பிரிவு, 780 வது சூத்திரம்
5. அ.இராகவன், வேளாளர் வரலாறு, ப.5
6. கம்பர், ஏரெழுபது, பாயிரம்
7. மேலது.
8. மேலது.
9. ஆ.ஏகாம்பரம், தமிழரின் விருந்தோம்பல் அன்றும் இன்றும், ப.19
10. இரா.தேவஆசிர்வாதம், பள்ளர் அல்லர் மள்ளர், ப.82
11. மறைமலையடிகள்,வேளாளர் நாகரிகம், ப.14
12. தொல்.பொருளதிகாரம், உரை, ப.30
13. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழர் வரலாறு, ப.189
14. க.ப.அறவாணன், தமிழ்ச் சமுதாய வரலாறு, ப.20
15. கம்பர், ஏரெழுபது, பாயிரம்
16. தேவாரம், திருஞானசம்பந்தர், 2: 178 - 3
17. பாரதியார் கவிதைகள், ப.55
18. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக்.118 – 119
19. சிங்காரவேலு முதலியார் ஆ., அபிதான சிந்தாமணி, ப.365
20. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப.97
21. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, ப.187
22. வெ.பெருமாள்சாமி, சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை, ப.46
23. ஆ.ஏகாம்பரம், தமிழரின் விருந்தோம்பல் அன்றும் இன்றும், ப.13
24. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, பக்.43-44
25. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, ப.
26. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.7
27. பெ.மாதையன், சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.26
28. மேலது, ப.49

# விதை நெல்



# நாற்றங்காளில்  விதைநெல்லை விடுதல்



# ஏர் உழுதல்



# பரம்பு பிடித்தல்



# நாற்று பிடுங்குதல்



# நெல் அறுத்தல்



# நெல் அடித்தல்



# நெல்லைத் தூற்றுதல்



# நெல் குவியல்



# மருதத்திணைப் பாடல்கள் காட்டும் சங்கச் சமூகம்

முனைவர் பட்டப்பேற்றிற்காகச் (பிஎச்.டி.) சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**சா. பரசுராமன்**

நெறியாளர்

**பேராசிரியர் அ. பாலு**





**தமிழ் மொழித்துறை**

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை – 600 005


ஜீன் – 2019

# நிறைவுரை

- ❖ நீர் வளம் நிறைந்த மருத நிலம் உணவுக் குறைபாடு இல்லாத நிலம். எனவே ஐவகை நிலங்களிலும் மருதமே உயர்வாகக் கருதப்படுகிறது. உலகத்தில் புகழ்பெற்ற பழைய நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றுப்பாய்ச்சல் நிறைந்த மருத நிலத்திலேதான் தோன்றின என்பதை அறியமுடிகிறது.
- ❖ மருத நில மக்கள் உணவுத் தட்டுப்பாடு இன்றி வாழ்ந்தமைக்கு முக்கியக் காரணம் நீர்வளம் மிக்க ஆற்றங்கரைக்கும் கிணறுகளுக்கும் பக்கத்தில் தனது குடியிருப்பினை அமைத்து வேளாண்மை செய்தனர் என்பதைப் பெறமுடிகிறது.
- ❖ நீர் வளம் மிக்க மருத நிலத்தில் உழவு மக்களின் முக்கியத் தொழிலாக மாறியது. இவர்கள் கால்நடைகளைக் கொண்டு நிலத்தை உழுது பயிர் விளைவித்தனர் என்பதை அறிய முடிகிறது.
- ❖ மருத நிலத் தலைமக்களாக ஊரன், மகிழ்நன், கிழவன், கிழத்தி, மனையாள், உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் எனப் பலர் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.
- ❖ பிற நிலத்தைவிட அதிக முன்னேற்றம் கண்ட மருத நிலத்தில் ஊர்கள், நெருக்கமாக அமைந்திருந்தன. மருதநிலக் கூறுகளில் மன்றம், அம்பலம், ஊர், குடி ஆகியன காணப்பட்டன. இதில் ஊர் என்ற பெயரமைப்பே மிகுதியாகக் காணப்பட்டதை அறிய முடிகிறது.
- ❖ ஒரு பாடலில் முதல், கரு, உரி என்ற மூன்றும் இடம்பெற்றால் பாடலின் திணையை அறிந்து கொள்வது எளிது. முதற்பொருள் இடம்பெறாத பட்சத்தில் கருப்பொருள் மற்றும் உரிப்பொருளைக் கொண்டும், கருப்பொருள் இடம்பெறாத பட்சத்தில் முதற்பொருள் மற்றும் உரிப்பொருளைக் கொண்டும் திணை மற்றும் பாடுபொருளை அறிந்து கொள்ள முடியும். மேற்கூறிய மூன்றில் உரிப்பொருள் இல்லாமல் பாடல் அமையாது.

- ஐந்து திணையிலும் உரிப்பொருள் மயங்காமல் முதல் மற்றும் கருப்பொருள் மயங்கி வரலாம். அவ்வாறு மயங்கி வரும்பொழுது நிலங்கள் தம்முள் மயங்குதல் இல்லை என்பதை அறிய முடிகிறது.
- சமூகம் என்பது குழுவாகவும் கூட்டமாகும் வாழும் மக்கட் தொகுதியாகும். மக்கள் தம் நலத்திற்காகவும் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவும் குறைகளைப் போக்கிக் கொள்ளவும் தற்பாதுகாப்புக்காகவும் தம் இன வளர்ச்சி மற்றும் பெருக்கத்திற்காகவும் கூடி வாழ்கின்றனர்.
- குடும்பம் என்பது ஆண் – பெண் பாலுறவை நெறிப்படுத்த அமைக்கப்பட்ட ஓர் அமைப்பாகும். ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உண்டாகிற வாரிசையும் சேர்த்துக் குடும்ப அமைப்புக்குள் அடக்கலாம். இக்குடும்ப அமைப்பு சமுதாயத்தில் கட்டுப்பாடுகள் நிறைந்த காலத்தில் தோன்றியிருக்கக் கூடும் என்பதை அறிய முடிகிறது.
- சங்க இலக்கியங்களில் பரத்தையருக்கு ஓர் இடம் வகுத்தளித்தற்கு நேரிய காரணம் ஒன்று இருத்தல் வேண்டும், பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தையர் ஒழுக்கம் குடும்ப ஒழுக்கம் போலப் பரவியிருந்ததால் தலைவனுக்கு மிக இயல்பான ஒன்றாகவும் பொழுதுபோக்காகவும் இருந்தமையால் அவன் வெளிப்படையாகப் பரத்தையுடன் புனலாடுவதையும் பன்னாட்கள் தன்னையே மறந்து பரத்தையின் இல்லத்திலே தங்கியதையும் அறிய முடிகிறது.
- தலைவன் இழிவான செயல்கள் செய்தாலும் அதனை மறந்து தலைவி அவனை ஏற்றுக் கொள்பவளாகவும், தலைவன் இல்லாமல் தனித்து வாழ முடியாதவளாகவும் இருப்பதை அக்காலச் சமூகம் காட்சிப்படுத்தியுள்ளது.
- அக்காலத்தில் திருமணம் புரோகிதர் இன்றி மணமக்கள் தம் பெற்றோரும் மற்றோரும் உற்றோரும் உறவினரும் சேர்ந்து மணவினையை நடத்தினார்கள் என்பதை அறிய முடிகிறது.
- சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தர்களில் முதன்மை இடத்தைப் பெறுபவளாகத் தலைவி விளங்குகிறாள். அவளை மையமாகக் கொண்டே மற்ற பாத்திரங்கள் படைக்கப்படுகின்றன. ஐந்திணைகளும் அதன் உரிப்பொருள்கள்

அனைத்தும் தலைவியை மையமாகக் கொண்டே படைக்கப்படுகின்றன என்பதை அறிய முடிகிறது.

- ❖ பரத்தையிடம் இருந்து வரும் தலைவனின் மீது கொண்ட ஊடல் தலைவனின் மேலுள்ள புண்ணைப் பார்க்கும்பொழுதும் விருந்தினர் வரும்பொழுதும் அவனிடம் கொண்டுள்ள மிக்கக் காமத்தினாலும் தலைவிக்குத் தலைவன் மேலுள்ள ஊடல் காணாமல் போய்விடுவதை அறிய முடிகிறது.
- ❖ தலைவி தன்னுடைய மகனுக்கு அறிவுரை கூறும்போது தன்னுடைய தந்தையிடமிருந்து எதனைப் பின்பற்ற வேண்டும் எதனை நீக்கவேண்டும் என்பதைத் தெளிவாகக் கூறுகின்றாள்.
- ❖ தலைவன் தலைவியிடையே இருந்த களவு வாழ்க்கையும் கற்பு வாழ்க்கையும் அறிவதோடு இல்லற ஒழுக்கத்திற்கு ஏற்பத் தலைவி செயல்பட்ட விதம் மற்றும் அக்காலத்தில் சமூகக் கட்டமைப்பு போன்றவை தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிகிறது.
- ❖ மனித இனம் இயற்கையின் செயல்களை உணர இயலாத நிலையிலும் காரணம் அறியாத நிலையிலும் மனம் தன் போக்கில் பதிவு செய்து கொண்ட காரணக் காரியங்களே நம்பிக்கையின் தோற்றத்திற்கு அடிப்படை எனலாம்.
- ❖ மருதத் திணையில் தெய்வம் சார்ந்த நம்பிக்கை இருந்ததையும், அதன்மீது சத்தியம் செய்தால் தீங்கு விளையும் என்ற நம்பிக்கை இருந்ததை சங்கப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.
- ❖ மருத நிலத்தில் வாழும் மக்கள் அந்நிலத் தெய்வமாகிய இந்திரனுக்கு ஆண்டுதோறும் விழா கொண்டாடினர் என்பதை அறிய முடிகிறது.
- ❖ ஓரினத்தாரின் மொழியாரின் நீண்ட நெடுங்காலமாக அமைந்த பண்பாட்டுக் கூறுகளை அவர்களுடைய இலக்கியங்களைக் கற்பதன்மூலம் தெரிந்து கொள்ளலாம். அந்த வகையில் சங்க இலக்கியத்தைப் படிப்பதன்மூலம் அக்கால மக்களின் பண்பாட்டை உணர்ந்து கொள்ள முடியும்.
- ❖ இயற்கையில் கிடைத்த உணவை உண்ட மனிதன் பயிர் செய்வதற்குத் தேவையான கருவிகளைச் செய்யக் கற்றுக்கொண்டு சிறப்பான முறையில் பயிர் செய்து அதிக

அளவு உற்பத்தியைப் பெற்றான். மருதத்தில் வேளாண்மையின் வளர்ச்சியானது விரிவான தனிநிலவுடைமை வளர்ச்சிக்கு அடிகோலியது.

- ஆரம்ப காலத்தில் நீர்நிலைக்குப் பக்கத்திலேயே உழவுத்தொழிலைச் செய்தனர். பல அனுபவத்திற்குப் பிறகு வேளாண் செய்யும் நிலத்தை அதிகப்படுத்த அதிகப்படுத்த அந்த நிலத்திற்கு ஆறுகளிலிருந்து நீரினைப் பாய்ச்சும் முறையை அறிந்து பயன்படுத்தினர் என்பதனை அறியமுடிகிறது.
- மருத நில மக்கள் தாங்கள் விளைவித்த வேளாண் பொருட்களை மற்ற நிலத்திற்குப் பண்டமாற்று முறையில் கொடுத்துத் தனது பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொண்டனர் என்பதை அறியமுடிகிறது.
- மனிதனுடைய வாழ்க்கையின் சாரம்சமாகக் காணப்படுகிற ஒழுகலாறுகள், நடத்தைகள், நம்பிக்கைகள், விழுமியங்கள், கால அழகியல் வெளிப்பாடுகள், சடங்குகள், வழிபாடுகள் என்ற பலவற்றைக் குறிப்பது பண்பாடாகும் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.
- இயற்கையிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அவற்றை வழிபடத் தொடங்கினான். இச்செயல் ஒரு வகையில் அவனுக்கு ஆறுதலையும் நம்பிக்கையும் ஊட்டியது. இதனால் இயற்கை வழிபாடே வழிபாட்டின் தொடக்கமாக அமைந்தது.
- பழந்தமிழர்கள் மிகச் சிறந்த ஆடைவகைகளையும் அணிகலன்களையும் பயன்படுத்திப் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் உயர்ந்த நிலையினை அடைந்து இருந்ததை அறிந்து கொள்ள முடிகிறது.
- சங்க கால மக்கள் விளையாட்டினை வெறும் பொழுதுபோக்கிற்காக மட்டும் விளையாடாமல் அறிவையும் ஆற்றலையும் மேம்படுத்த விளையாடினர். வயது வித்தியாசமின்றிப் பெண்களும் குழந்தைகளும் பல வகையான விளையாட்டை விளையாடினர் என்பதை அறியமுடிகிறது.
- உழவர்கள் ஆடு, மாடுகளிடமிருந்தும் பன்றி போன்ற விலங்குகளிடமிருந்தும் பயிர்களைப் பாதுகாக்க காஞ்சிமரத்தின் குறுகிய துண்டுகளை நட்டு மென்மையான தன்னுடைய கரும்புத் துண்டுகள் பலவற்றைக் குறுக்கே வைத்து அடைத்து நெற்பயிரைப் பாதுகாத்தனர் என்பதை அறிய முடிகிறது.

- ❖ நிலவுடைமைச் சமூகம் தோன்றி அரசு உருவாக்கம் பெற மருதநிலம் முக்கியமாகத் திகழ்ந்தது.